


செப்டம்பர் 18 - அக்டோபர் 18

## பெண்ணின் பெருமை போற்றுவோம்.

# வாழ்வெல்லாம் வசந்தமே!

**நவராத்திரி- விழா**

பெண்களைப் பெருமைப் படுத்தும் விழா. குழந்தை, மங்கை, மனைவி, அன்னை, குடும்பத் தலைவி, எனப் பல முகங்கள் கொண்ட அபூர்வப் பிறவி பெண். தன் நலத்தை விடப் பிறர் நலம் போற்றும் பெருந்தன்மை மிக்கவள். சாதனைகள் பல நிகழ்த்தும் அறிவாற்றலும் முன்னேற்றக் கருத்துகளும் மிகக் கொண்டவள். பெண் என்பவள் உயிரூட்டும் அன்னை. பாசத்தின் பிறப்பிடம். வாழ்க்கையின் வசந்த ஊற்று.

**ஸ்ரீராம் சிட்ஸ் - நவராத்திரி விழா**

தங்கள் குடும்பத்தின் வருங்காலத்தை வசந்த காலமாக ஸ்ரீராம் சிட்ஸ் துணையுடன் வடிவமைத்து, மற்றவர்க்கும் வழிகாட்டியாக விளங்கும் எண்ணற்ற பெண்மணிகளுக்குப் பாராட்டும் நன்றியும் நல்கும் நல்விழா.

வாழ்வில் வளம் தரும் வசந்தத்தின் ஊற்றுக் கண்ணாக விளங்கும் பெண்ணின் பெருமையைப் போற்றிக் கொண்டாட வாருங்கள். ஸ்ரீராம் சிட்ஸ் நவராத்திரி விழாப் போட்டிகளில் பங்கு கொண்டு பரிசுகளை வெல்லுங்கள். சிறுகச் சேமித்துப் பெருக வாழும் கலையை அறிந்து கொள்ளுங்கள்.

ஸ்ரீராம் சிட்ஸ், 1974ஆம் ஆண்டில் எளிமையாகப் பத்து நண்பர்களால் துவங்கப்பட்டது. இன்று வருடத்திற்கு ரூ.1,500 கோடிக்கு மேல் பணம் பட்டுவாடா செய்யும் அளவுக்கு வளர்ந்துள்ளது. 400க்கும் மேற்பட்ட கிளைகள் மற்றும் 25,000 முகவர்கள் மூலம் அரும்பணி யாற்றி 17 லட்சம் குடும்பங்களில் வசந்தம் மலர உதவியுள்ள ஸ்ரீராம் சிட்ஸ் உங்களுக்கு சேவை புரியக் காத்திருக்கிறது.

**ஸ்ரீராம் சிட்ஸ்**

ஸ்ரீராம் சிட்ஸ் தமிழ்நாடு லிமிடெட்

சுப்ரமணியன் பில்டிங், 1 கிளப் ஹவுஸ் ரோடு, சென்னை-600 002.

போன் : 8520797, 8523932, 8520700 Visit us at : www.shriram.com

WORDCRAFTS/SCT/N1

# காவிரிக் கண்ணீர்!



காவிரியில் எழுந்திருப்பது சாதாரணமாகத் தீர்க்கப்பட்டு விடக் கூடிய தண்ணீர்ப் பிரச்னை தான். ஆனால் இதையே 'கண்ணீர்ப்' பிரச்னையாக்கி விட்டு வேடிக்கை பார்ப்பவர்கள் அரசியல் வாதிகள்தான் என்கிற பேச்சு டெல்லியிலுள்ள அதிகார வட்டாரத்தில் உலவுகிறது.



ஆண்டுதோறும் 205 டி.எம்.சி. தண்ணீரைக் கர்நாடகம் தமிழகத்துக்குத் தர வேண்டும். தஞ்சையில் குறுவைப் பயிர் காய்ந்து கொண்டிருக்கும் இந்த நிலையில், ''நாங்கள் ஏற்கெனவே இந்த ஆண்டு 257 டி.எம்.சி. தண்ணீரைத் தமிழகத்துக்குத் தந்துவிட்டோம்!'' என்று வாதிடுகிறது கர்நாடகம். தமிழகமோ, ''ஏராளமாக மழை பொழியும் போது, தேக்கி வைக்க முடியாத நிலையில் கர்நாடக அணைகள் நிரம்பி வழியும் போது திறந்து விடுகிற நீரின் அளவையும் சேர்த்துச் சொல்கிறது கர்நாடகம். இது தவறு. தண்ணீர்த் தட்டுப்பாடு வருகிற ஆகஸ்ட், செப்டெம்பர் மாதங்களில் 30 அல்லது 35 டி.எம்.சி. தண்ணீரையாவது கர்நாடகம் தர வேண்டும்!'' என்று வாதிடுகிறது.

முன்பு, கர்நாடக முதல்வராக ஹெக்டேவும் தமிழக முதல்வராக எம்.ஜி.ஆரும் இருந்த போது, முதல் முறையாக காவிரிப் பிரச்னை வன்முறை அளவுக்குச் செல்லும் நிலை ஏற்பட்டது. அப்போது எம்.ஜி.ஆரிடம் பேசிய ஹெக்டே, நிலைமைக்குத் தகுந்தபடி தண்ணீரைத் திறந்து விட்டு, தமிழகப் பயிர்களைக் காப்பாற்றியதோடு, கர்நாடகப் பயிர்களும் வாடிவிடாமல் பார்த்துக் கொண்டார். அதையே இப்போதும் செய்ய முடியும்.

தமிழக தலைமைச் செயலாளர் ஏ.பி. முத்துசாமி, மத்திய நீர்வளத்துறைச் செயலாளர் ஹசன் மற்றும் மத்திய அமைச்சரவைச் செயலாளர் பிரபாத் குமார் ஆகியோர் நடத்திய முதல் சுற்றுப் பேச்சுவார்த்தைக்குப் பிறகு நடந்த வாஜ்பாய் – கருணாநிதி; கருணாநிதி – பாட்டீல் தொலைபேசிப் பேச்சுக்களிலும் ஹெக்டே – எம்.ஜி.ஆர் முடிவு தான் சிறந்தது என்று பேசப்பட்டதாகச் சொல்லப்படுகிறது.



இதற்கிடையில், ''தமிழகத்துக்குத் தண்ணீர் தர முடியாது!'' என்று கர்நாடக நீர்வளத்துறை அமைச்சர் கே.என். நாகே கௌடா கூறியதெல்லாம் கர்நாடக மக்களைச் சமாதானப் படுத்துவதற்குத்தான் என்றும் சொல்லப்படுகிறது.

சென்ற ஆண்டு கையெழுத்தான ஒப்பந்தத்தின்படி, தண்ணீர்த் தட்டுப்பாடு வரும் போது பிரதமர் தலைமையிலான காவேரி நீர்க் குழு இருபக்க வாதங்களையும் கேட்டு, ஒரு முடிவு எடுக்கும். இரு மாநிலங்களும் அந்த முடிவுக்குக் கட்டுப்பட வேண்டும்.

''இதுவொன்றும் பெரிய விஷயமில்லை. இருதரப்புத் தேவைகளையும் பொறுத்து ஒரு நல்ல தீர்வை சுலபமாகக் காண முடியும். ஆனால், பிரச்னை அரசியலாகாமல் இருக்க வேண்டும். அரசியலாகும்போதுதான் சிக்கல் ஏற்படுகிறது!'' என்று நம்மிடம் சொன்னார், மத்திய நீர்வளத்துறைச் செயலாளர் ஹசன்.

டெல்லியிலிருந்து: **வெங்கட்**

கல்கி இண்டர்நெட் முகவரி : www.kalkiweekly.com
ஈ மெயில் : kalkiweekly@vsnl.com

# மௌனம்!

வார்த்தைகள் இல்லாத
புத்தகம் மௌனம்.
ஆனால்
வாசிக்க வாசிக்க
இதற்குள் வாக்கியங்கள்.

மௌனம் என்பது
வெளிச்சம்.
நம்மை நாமே
இதற்குள் தரிசிக்கலாம்.

மௌனம் என்பது
இருட்டு.
எல்லா கர்வங்களையும்
இதற்குள் புதைக்கலாம்.

மௌனம் என்பது
மூடி.
இதைத் தயாரித்து விட்டால்
எல்லா உணர்ச்சிகளையும்
இதற்குள் பூட்டிவைக்கலாம்.

மௌனம் என்பது
போதி மரம்.
இதுவரை உலகம் சொல்லாத
எல்லா உண்மைகளையும்
இது போதிக்கும்.

மௌனம் என்பது
தவம்.
இதில் ஆழ்ந்தால்
அமைதி நிச்சயம்.

மௌனம் என்பது
வரம்.
நம்மிடமிருந்து
நாமே பெறுவது.

இன்பம் துன்பம்
என்ற இரண்டையும்
மௌனம் கொண்டு சந்தித்தால்,
எப்போதும் இதயம்
இயல்பாக இருக்கும்.

இதழ்களை இறுக மூடி
நாம்
நமக்குள் இறங்குவோம்!

— வசந்தராஜன்



'ஏழு சகோதரிகள்' என்று அழைக்கப்படும் அஸ்ஸாம், அருணாச்சலபிரதேசம், திரிபுரா, மேகாலயா, நாகாலாந்து, மணிப்பூர், மிஸோராம் (இப்போது சிக்கிம் மாநிலத்தையும் சேர்த்து எட்டு) மாநிலங்களில் எல்லாவற்றிலுமாகச் சேர்த்து மொத்தம் 24 தொகுதிகள்.

தாங்கள் எப்போதுமே 'இந்தியர்களால்' ஒதுக்கப்படுவதாகக் குறைபட்டுக் கொண்டிருப்பவர்கள் இந்த மாநிலங்களைச் சேர்ந்தவர்கள். வெளிப்படையாகச் சொல்வதானால் மனரீதியில் தங்களை இந்தியர்கள் என்று இன்னமும் முழுமையாக நம்பாத மக்கள்! இதைப் பற்றியெல்லாம் சிறிதும் கவலைப்படாத நமது அரசியல் கட்சிகள்!

இதன் காரணமாகவே இந்தச் சின்னஞ்சிறு மாநிலங்களில் நூற்றுக்கணக்கான தீவிரவாதக் குழுக்கள். இந்தக் குழுக்களை ஊக்குவிக்கும் பாகிஸ்தான் உளவுத் துறை. உதாரணத்துக்கு அஸ்ஸாமை எடுத்துக் கொண்டால் அங்கே நாற்பதுக்கும் மேற்பட்ட தீவிரவாதக் குழுக்கள்! இவற்றில் அஸ்ஸாம் ஐக்கிய விடுதலை முன்னணி (உல்ஃபா), இவர்களின் எதிரியான ஸல்ஃபா (இவர்கள் அரசிடம் சரணடைந்தவர்கள். என்றாலும் ஆயுதம் ஏந்தித் திரிபவர்கள். தேவைக்குத் தகுந்தபடி அரசியல் கட்சிகள் இவர்களை உபயோகப்படுத்தி வருகின்றன). அஸ்ஸாமில் தனி போடோ மாநிலம் வேண்டுமென்று போராடும் போடோ விடுதலைப் புலிகள், போடோ தேசிய விடுதலைக் குழு போன்ற சில இயக்கங்கள் மிகவும் பலம் பொருந்தியவையாக இருக்கின்றன.

தீவிரவாதக் குழுக்கள் ஏராளமாக இருப்

பதி...

பது போலவே, அஸ்ஸாமில் கட்சிகளின் எண்ணிக்கைக்கும் கணக்கில்லை. பதினான்கு பாரளுமன்றத் தொகுதிகளேயுள்ள அஸ்ஸாமில், ஐந்து முனைப் போட்டி என்றால் நம்ப முடிகிறதா? அத்தனை கட்சிகள்!

பல மாநிலங்களில் சோனியா கட்சியுடன் இணைந்து போட்டியிடும் இடதுசாரிகள் இங்கே அஸ்ஸாம் கண பரிஷத்துடன் சேர்ந்து சோனியா கட்சியை எதிர்க்கிறார்கள். இப்போது பி.ஜே.பியை எதிர்க்கும் அஸ்ஸாம் கண பரிஷத் (ஏ.ஜி.பி),

# தொகுதிகளில் ஐந்து முனைப் போட்டி!



• சங்மா



• மொஹந்தா

தேர்தலுக்குப் பிறகு பி.ஜே.பி. கூட்டணி ஆட்சிக்கு வந்தால், அந்த அமைச்சரவையில் தானும் பங்குபெறும் என்று நம்பலாம்!

இந்த எண்ணம் ஏ.ஜி.பிக்கு இருப்பதாலேயே, பி.ஜே.பி. அரசின் தொலைத்தொடர்புத் துறை ராஜாங்க அமைச்சரான கபீந்திர புர்காயஸ்தா போட்டியிடும் ஸில்சார் தொகுதியில், ஒரு பலவீனமான வேட்பாளரை நிறுத்தியிருக்கிறார் ஏ.ஜி.பியின் தலைவரும் முன்னாள் முதல்வருமான மொஹந்தா. மறுபுறம், ராஜ்யசபை உறுப்பினராக உள்ள மொஹந்தாவின் மனைவி ஜெயஸ்ரீ கோஸ்வாமி மொஹந்தா, பி.ஜே.பியுடனான உறவை டெல்லியில் பலப்படுத்திக் கொண்டும் வருகிறார்.

இந்த நிலையில் 39,000 கோடி லாட்டரி ஊழல் நாயகரான மனிகுமார் சுப்பாவை, சோனியா கட்சி தமது வேட்பாளராக நிறுத்தியிருப்பது பி.ஜே.பிக்கு நல்ல சாதகமாக இருக்கிறது. இதனால் முன்பு இங்கே ஒரேயொரு தொகுதியில் மட்டுமே ஜெயித்த பி.ஜே.பி. இப்போது இரண்டு தொகுதிகளில் முன்னிலை வகிக்கிறது!

இப்போது தேசியவாத காங்கிரஸ்காரராக இருக்கும் பி.ஏ. சங்மாவின் **மேகாலய** மாநில துரா தொகுதி மிகவும் பரபரப்பிலிருக்கிறது. இங்கே பிரசாரத்துக்கு வந்த சோனியா, சங்மாவைத் தாக்கி ஒரு வார்த்தை கூடப் பேசாதது ஆச்சரியமான விஷயம்!

இரண்டு தொகுதிகள் கொண்ட **திரிபுராவில்** இடதுசாரிகள்தான் முன்னணிவகிக்கிறார்கள். ஒரேயொரு தொகுதியைக் கொண்ட **மிஸோராமில்,** தேவாலயங்கள் சொல்வதைத்தான் மக்கள் கேட்பார்கள் என்பதால் சோனியா கட்சிக்கு வாய்ப்பில்லை என்றே சொல்லலாம்.

**அருணாச்சல பிரதேசத்தில்** இரண்டு தொகுதிகள். முன்னாள் முதல்வர் கெகாங் அவாங், சோனியா கட்சியிலிருந்து பிரிந்து, அருணாச்சல் காங்கிரஸ் என்று தனிக்கட்சி நடத்த, அதிலிருந்து பிரிந்து வந்து ஆட்சியைப் பிடித்திருக்கும் முகுட்மகி இப்போது சோனியா கட்சியுடன் இணைந்து போட்டியிடுகிறார்.

ஆக, ஒரு தொகுதி ஒன்றரைத் தொகுதி என்றிருக்கும் இந்த மாநிலங்களிலிருந்து தேர்ந்தெடுக்கப்படுபவர்களின் முக்கியத்துவம், தொங்கு பாராளுமன்றம் அமைகிற நிலையில்தான் வெளிப்படும்.

அம்மாதிரியான ஒரு சூழ்நிலையில், அந்தந்த உறுப்பினர்கள், ஆட்சிக் கட்டிலில் உள்ளவர்களால் நன்றாகக் கவனிக்கப்படுவார்களே தவிர, அவர்கள் சார்ந்த மாநிலங்களுக்கு ஒன்றும் நடக்கப் போவதில்லை. இதன் காரணமாகவே இந்த மாநிலங்களைச் சேர்ந்த மக்கள் தாங்கள் 'இந்தியர்களால்' புறக்கணிக்கப்படுவதாகக் கருதுகிறார்கள்.

**— வெங்கட்**

# ஹீரோவான ஹிந்தி வில்லன்!

உலக அரங்கில் எக்கச்சக்கமான அவார்டுகளை வாங்கிக் குவித்திருக்கிறது என்று கேள்விப்பட்டபோதே எழுந்த சந்தேகம்தான்; சிவசேனை தரப்பிலிருந்து ஒரு முணுமுணுப்பு கூட இல்லை என்றபோது சற்றே வலுப்பட்டது. 6:15 ஷோவுக்கு 6:18க்குப் போய் டிக்கெட் கேட்டபோதும் பூர்ணகும்ப வரவேற்பு கிட்டியபோது, ஊர்ஜிதமேயாகி விட்டது! ''எர்த்'' 'கமர்ஷியல் சக்ஸஸ்' அல்ல என்பது! அதனாலேயே ஒரு நல்ல நிலத்தை (படத்தை) பார்க்கப் போகிறோம் என்ற உள்ளுணர்வு தியேட்டருக்குள் நம்மை உந்தித் தள்ளியது.

தீபா மேத்தா ஏமாற்றவில்லை; சினிமா போன்ற பொழுதுபோக்கு சாதனத்தை வைத்துக் கொண்டு, தொண்ணூறு நிமிடத்துள் கலைத் தொண்டாற்றியிருப்பது சாதனைதான். மரத்தைச் சுற்றி அரைகுறை ஆடைகளுடன் கையைக் காலை உதறி ஹீரோ -ஹீரோயின் செய்யும் இசைக் கொலையிலிருந்து (அதுவும் ரஹ்மானின் அற்புதமான கானமழை) நமக்கு முக்தியளித்திருப்பதற்கு சிலை வைக்கலாம். சொந்தப் பிரச்னைகளுக்கு ஊர்ப் பிரச்னைகள் வடிகாலாவதை ஆமீர் கான் வாயிலாக நயமாக சித்திரித்திருப்பதற்கு மாலை, மலர்ச்செண்டு, ஏன் ஒரு பூங்காவனமே பரிசளிக்கலாம்!

குறைந்தபட்சம் ஆமீராவது, ''துணைக் கண்டத்தின் ஆல் பசினோ'' என்ற பட்டத்தை வாங்கித் தர உதவியதற்கும் லாஸ் ஏஞ்சல்ஸிலிருந்து வரும் இடைவிடாத ஃபோன் கால்களுக்கும் நன்றிக் கடனாக, தீபாவுக்கு ஓர் இதயக் கோயில் கூட அமைக்கலாம்.

சாதாரண முக்கோணக் காதல் கதைதான். லேனி பேபி என்ற பார்ஸி சிறுமியின் (போலித்தனமில்லாத போலியோ) கண்வழிக்

காட்சிகளில் கதை சொல்லப்பட்டிருக்கிறது. அவளுடைய ஆயாவான நாயகி (நந்திதாதாஸ்) இந்துவாகவும், நாயகர்களான மாலீஷ்வாலாவும் (ராகுல்கன்னா) ஐஸ்காண்டிவாலாவும் (ஆமீர்கான்) முஸ்லிம்களாக இருப்பது, சுதந்திரப் போராட்ட வரலாறு காலத்தில் 'சிக்'கெனப் பொருந்துகிறது.

ஃபயரைப் பார்த்துவிட்டு, "எதிர்பார்ப்புடன்" படை எடுக்கக்கூடியவர்களுக்காகவோ என்னவோ, ஒரு படு விஸ்தாரமான காதல் காட்சியை (நந்திதா – ராகுல்) அமைத்திருக்கிறார்கள். எதுவரையில் போகுமோ என்ற பதை பதைப்பு, கண்ணாடி வழியே பார்க்கும் லேனி பேபியையும் ஆமீரையும் மட்டுமில்லாமல், ஆடியன்ஸையும் ஒரு வழி பண்ணி விடுகிறது.

ஹரிபாய் முஸ்லிமாக மாறிவிட்டது உண்மைதானா என்று கூட்டம் பரிசோதிக்கும் பயங்கரத்தை இந்திய சென்சார் கண்டுகொள்ளாமல் விட்டது தீபாவின் அதிர்ஷ்டம்தான். (அதை சிவசேனைக்காரர்களும் கண்டுகொள்ளாமல் விட்டதுதான் துரதிர்ஷ்டம்).

'பார்ஸிகளென்ன ஆங்கிலேயர்களின் அடிமைகளா?' என்று கேட்பதற்கு லேனி பேபி பண்படுத்தும் அதிர்ச்சி ஆங்கிலம் கூடவா தாக்கரே அண்ட் கோவின் காதில் விழவில்லை? (தேர்தல் கோஷங்களும், 'கணபதிபப்பா' கோஷங்களும் செவிடாக்கி விட்டனவோ?)

'ஃபயருக்கு இருந்த எதிர்ப்புக்கப்புறம், இந்தியப் படம் பண்ண எப்படி தைரியம் வந்தது?' என்று தீபாவிடம் கேட்காத மும்பை பத்திரிகைக்காரர் கிடையாது!

"Freedom of expression எனக்கு உண்டென்றால், மற்றவர்களுக்கும் உண்டுதானே? எதிர்ப்பைப் பற்றிக் கவலைப் படுவதில்லை. என்னிடம் ஆஹா ஓஹோ என்று விட்டு, வெளியே சென்று 'ச்சீ' என்னும் பொய்மைதான் எனக்குப் பிடிப்பதில்லை. இந்தப் படத்தில் ஐந்து கெட்ட வார்த்தைகளை மட்டும் எடுக்கச் சொன்னார்கள். வெளியீட்டில் காலதாமதத்தை விரும்பாமல் உடனே ஒப்புக் கொண்டு விட்டேன். ஆனால் இதைத் தவிர வேறு எதைக் குறைத்திருந்தாலும் கோர்ட்டுக்குப் போயிருப்பேன்" என்கிறார் தீபா!

"நான் அம்ரித்ஸரில் பிறந்து வளர்ந்தவளாதலால், 'பார்ட்டீஷனை' மையமாகக் கொண்டு ஒரு கதை எடுக்க மிகவும் ஆசைப்பட்டேன். பல்ராஜ் சஹானியின் "கரம் ஹவா" என் மனத்தைத் தொட்டாலும், பிரிவினையை வேறு கோணத்தில் பிரதிபலிக்க எண்ணியிருந்தேன். 'ஃபயர்' முடித்தவுடன் கனடா திரும்பிவிட்டேன். ஸியாடலில் உள்ள ஒரு நூலகத்தில், பாப்ஸி ஸித்வாவின் "The Ice Candy Man" நாவலை ஒரே மூச்சில் படித்து முடித்தேன். லண்டனிலுள்ள ஒரு நண்பர் மூலமாக ஆசிரியையைத் தேடிப் பிடித்து, நாவலை படமாக்கும் உரிமைகளைக் கோரினேன். அவரோ என் படங்கள் எதையும் பார்த்திராததால் ரொம்பவும் தயங்கினார். அப்புறம் ஃபயர் பார்த்தபின் சந்தோஷத்துடன் ஒப்புக் கொண்டார்."

**உ**லகெங்கிலும் 'எர்த்'தாக ரிலீசாகியிருப்பது, இந்தியாவில் மட்டும் "*1947*" ஆனதற்குக் காரணம், டில்லியில் ஷூட்டிங் நடக்கும்போதே பலர் அதை "ஓஹோ 'அர்த்'தா ஷபானா நடித்த படம்தானே?" என்று குழம்பியதுதானாம்.

முதலில் ஆமீரின் பாத்திரத்தில் அக்ஷய் கன்னாதான் நடிப்பதாயிருந்ததாம்! ஆனால் ஆங்கிலமாயிருந்தால்தான் நடிப்பேன் என்று சொல்லி விட்டார் அவர். "ஆயாவும் மாலீஷ்வாலாவும் ஆங்கிலத்தில்



* தீபாமேத்தா

பேசினால் எப்படியிருக்கும்? அதனால் இந்தியிலேயே எடுக்க நினைத்தேன். முதலில் நினைவுக்கு வந்தவர் ஆமீர்தான்! ஸ்டார் வால்யூவுக்காக அல்ல; இந்தியாவில்தானே அவர் பாப்புலர்? நான் இண்டர்நேஷனல் ஆடியன்சுக்கல்லவா, தயாரித்தேன்? அவரது நடிப்புத் திறமையை வைத்தே தேர்ந்தெடுத்தேன்" என்கிறார் தீபா.

18 நாட்களே தேவைப்

பட்டாலும், முதலில் ஆமீருக்கும் நேர மில்லை; ஆனால் ஏதேதோ காரணங் களால் படத் தயாரிப்பு தள்ளிப் போக, திடீரென்று கைவசம் 20 நாட்கள் இருப் பதை உணர்ந்த ஆமீர், ஸ்க்ரிப்டை படிக்க ஒப்புக் கொண்டார். "ஸர்ஃபரோஷில்" வரும் பண்பட்ட போலீஸ் அதிகாரி ரோலிலிருந்து முற்றிலும் மாறுபட்ட நய வஞ்சக பாத்திரம் என்றாலும், தைரியமாக சம்மதித்தார் ஆமீர்.

"நாவலில் வரும் ஐஸ்காண்டிவாலா தில் நவாஸ் காரெக்டர் ரொம்பவும் மோசம்; ஆனால் தீபா ஓரளவு நிலைமையைக் குறைத்து எல்லோரும் ஏற்றுக் கொள்ளக் கூடிய மனிதனாக அவரை மாற்றியிருக் கிறார். ஆனால் அது என் ஸ்டார் ஸ்டே டஸுக்காக அல்ல; அவர் எப்படி எதிர் பார்த்தாரோ அப்படியே நடித்துக் கொடுத் தேன்" என்று நிச்சயமாகச் சொல்கிறார் ஆமீர்.

அது உண்மைதான் என்பதற்கு தீபாவே சாட்சி. "ஆமீருக்கு எல்லாவற்றி லும் மூக்கை நுழைக்கும் முந்திரிக் கொட் டைத்தனம் உண்டு என்பார்களே? உங் களிடம் எப்படி நடந்து கொண்டார்?" என்றால், "ஐயோ, அவர் பேச்சைக் கேட் காமல் போனோமே என்று இப்போது மனது அடித்துக் கொள்கிறது" என்று கள்ளமில்லாமல் ஒப்புக் கொள்கிறார்.

"தில் நவாஸ் பாத்திரத்தை நன்றாக ஆராய்ந்து வைத்திருந்தார் ஆமீர். அவர் கோணத்திலிருந்து நிறைய ஐடியா கொடுத் தார். என் கோணத்துடன் ஒத்திருந்தவற் றையே எடுத்துக் கொண்டேன். ஓரிடத் தில் தன் கோபத்தை இன்னும் ஆணித்தர மாக வெளிப்படுத்த வேண்டும் என்றார். எனக்கு சரிப்படவில்லை; ஆனால் 'ரஷ் ஸை'ப் பார்த்தபோது அவர் பார்வைதான் சரி என்று பட்டது" என்கிறார்.

இதே கதையை ஓர் இந்திய இயக்கு னர் எடுத்திருந்தால், படத்தில் உணர்ச்சி களின் வேகமும் அதன் வெளிப்பாடும் அதிகரித்திருக்கும் என்ற எண்ணம் நமக்கு எழாமலில்லை.

ஆனால் என்.ஆர்.ஐ. டைரக்டர் என் பதாலேயே தீபாவுக்கு இங்கே மவுசு அதி கம் என்பதை அவர் ஒப்புக் கொள்ளத் தயாராக இல்லை. "ஃபையருக்கென்று ரேகாவை அணுகியபோது, 'நந்திதாவை முத்தமிட முடியாது' என்று சொல்லி விட்டார். மேலும் உடை நிர்வாகம் நான்தான் என்றதும் அவருக்கு 'சப்'பென்று ஆகிவிட்டது. ஷபானாவும், அந்தப் பாத்தி ரத்தில் இயல்பாக நடிக்க முடியுமா என்று பல காலம் நன்றாக யோசித்தபின்னரே, 'சரி' என்றார். என்.ஆர்.ஐ. காம்ப்ளெக்ஸை வளர்த் துக் கொண்டால், அப்புறம் நான் பெண் என்பதாலும் நிறம் குறைந்தவள் என்ப தாலும் வெள்ளைக்காரர்கள் என்னைக் குறைத்து மதிப்பிடுவார்களோ என்று மயங்கத் தோன் றும்" என்றார் உறுதியாக.

ஆமீரும் "நான் ஹீரோவாக நடித்த மற்ற படங்களுடன் ஒப்பிடுகையில் இது சின்ன ரோல்தான், ஆனால் ஆஃப் பீட் படம். இண் டர்நேஷனல் ஆடியன்ஸ் எப்படி ரசிப்பார் களோ" என அடக்கமாகக் கவலைப்படுகிறார்.

ஆனால் இவர் நந்திதாவுக்குப் பட்டம் விடச் சொல்லிக் கொடுக்கும் குறும்பையும், அல்லாவுக்கு ஃபோன் போடும் குசும்பையும் யாரால் மறக்க முடியும்? கனடா ஆடியன்ஸ் ஏகத்துக்குப் புகழ்ந்து தள்ளினார்களாம். பின்னே! இதுவரை ஹீரோவாகவே நடித்த ஆமீர், இதில் வில்லன் ரோலில் நடித்தும், 'ஹீரோ' இமேஜிலேயே ஜொலிக்கிறாரே!

தீபாவின் 'Element Trilogy'யில் அடுத்து வரப் போவது "வாட்டர்." மத அடிப்படையில் பனாரஸில் 1930ல் நிகழும் கதை! எர்த், வாட் டர் என்றெல்லாம் ஆறிய புண்களைக் கீறும் படங்கள் சமூகத்துக்குத் தேவைதானா என் றொரு விவாதத்தை தினசரிகள் கிளப்பின.

"சரித்திரத்திலிருந்து பாடம் கற்றுக் கொள் வதாயிருந்தால் சரிதான்" என்று தீபா சாஹி போன்ற நடிகையர் கருத்துத் தெரிவித்தனர். 'சிவாஜி காலத்திய பழைமையான சரித்திரம் என்றால் பரவாயில்லை; அண்மைக்கால சரித்திரத்தைக் கிளறுவதால், அதனால் பாதிக் கப்பட்டவர்கள் உயிரோடு இருக்கும்பட் சத்தில், வேண்டாத விளைவுகளை சந்திக்கக் கூடும் என பிரமோத் நவால்கர் (பண்பாட்டுத் துறை அமைச்சர்) போன்றோர் கருதுகின்ற னர். ஆனால் கலைத் துறையினர் "எதைச் சொல்கிறார்கள் என்பது முக்கியமில்லை; எப்படிச் சொல்கிறார்கள் என்பதுதான் முக்கி யம்" என்கின்றனர்.

படத்தில் அடிக்கடி மாறும் சம்பந்தமில் லாத காட்சிகள் அலைக்கழிக்கின்றன. உணர்ச்சிகள் வெளிப்பட வேண்டிய இடத் தில் கூட துறவித்தனம் தேவையா என்பது ஒரு கேள்விக்குறி!

நல்ல நிலம்தான்; ஆனால் ஆழமாக உழப் படவில்லை!

— ஜெயஸ்ரீ ராஜ்

●● ஒழுக்கம் மரம் போன்றது. புகழ் அதன் நிழல். நாம் நிழலைப் பார்த்து மரம் என்று எண்ணி விடுகிறோம். மரம்தான் நிலையானது. அதன் நிழல் அல்ல. – ஆபிரகாம்லிங்கன். தகவல்: ஆர். பார்த்திபன்

● லாலுவும் முலாயம் சிங்கும் ஒரே அணியில் இருந்த போது சம்பந்திகளாக விரும்பினர். ஆம்; லாலுவின் மகள் மிசா (மிசாவில் லாலு சிறையிலிருந்த போது பிறந்த மகள்)வை முலாயமின் மகனுக்குத் திருமணம் செய்து வைக்கப் போவதாகப் பேச்சு. இப்போது அணி பிரிந்து நிற்பதால் அந்தப் பேச்சு அடங்கிப் போயிருக்கிறது. என்றாலும் மீண்டும் அவர்கள் ஓரணிக்கு வர மாட்டார்கள் என்று உறுதியாகச் சொல்ல முடியாது என்பதால் மீண்டும் இந்தத் திருமணப் பேச்சு எழலாம் என்கிறார்கள்.



• மக்களோடு மக்களாக பிரியங்கா (படம் - நன்றி: தினமலர்)

# தூள் பரத்தும் பிரியங்கா!

● அமேதி தொகுதியில் தேர்தல் பிரசாரம் நடந்த விதத்தைப் பார்த்தபோது வேட்பாளர் யார்? சோனியாவா, பிரியங்காவா என்று பலருக்கும் ஒரு சந்தேகம்! அந்த அளவுக்குத் தொலைக்காட்சிப் பேட்டிகள், பத்திரிகையாளர் சந்திப்புகள், பொதுமக்களோடு இரண்டறக் கலந்து பழகுதல் என்று ஜமாய்த்தார் பிரியங்கா. ''பெல்லாரி, அமேதி ஆகிய இரு தொகுதிகளிலும் சோனியா வெல்வார். பிறகு பெல்லாரியைத் தக்க வைத்துக்கொண்டு அமேதியில் ராஜினாமா செய்வார். அப்போது வரும் தேர்தலில் பிரியங்காவே வேட்பாளராக நிறுத்தப்படுவார். பிரியங்கா தீவிர அரசியலில் நுழைகிறபோது, 'சோனியா அந்நியர்' என்கிற பி.ஜே.பி.யின் பிரசாரம் தவிடு பொடியாகி விடுமல்லவா! எல்லாவற்றையும் திட்டமிட்டுத்தான் செய்கிறார் சோனியாஜி!'' என்கிறார்கள் கட்சிக்காரர்கள்.

● 'மேலே ஆஸ்மான் (ஹிந்தியில் ஆகாயம் என்று அர்த்தம்) கீழே பாஸ்வான்' என்று தேர்தல் பிரசாரத்தில் தூள் கிளப்பினார் பாஸ்வான். ஆனாலும் இவரது இரண்டாவது மனைவி (உயர் ஜாதி) செய்த அலட்டல்கள் தொண்டர்களை வேதனைப் படுத்திவிட்டது. கிராமத்து

முதல் மனைவி அடக்க ஒடுக்கமாக வீட்டின் மூலையில். இரண்டாவது மனைவியோ டெல்லி மாளிகையில். இளம் வாக்காளர்கள், எப்படி இரண்டு மனைவிகளையுடைய வேட்பாளர்களை வெறுக்கிறார்கள் என்கிற ஒரு பத்திரிகையின் சர்வே ரிப்போர்ட்டை எடுத்துக்கொண்டு போய் பாஸ்வானிடம் நாசூக்காகக் காட்டினார்கள் தொண்டர்கள்.

● டல்லடித்துக் கொண்டிருந்த சட்டத் துறையை தாம் அமைச்சரானதிலிருந்து பரபரப்பூட்டி வருகிறார் ஜேட்மலானி. காரணம், இவரது செய்தித் தொடர்பு அதிகாரி சித்திகி. நகர்ப்புற வளர்ச்சித் துறையிலிருந்து இவரைத் தம்முடனேயே அழைத்து வந்தார் ஜேட்மலானி. அது வீண் போகவில்லை. 'சட்ட மன்றமாக இருந்தாலும் சரி, நாடாளு மன்றமாக இருந்தாலும் சரி. ஐந்தாண்டுகளுக்கு அதைக் கலைக்கக் கூடாது' என்று எப்போதோ ஒரு கமிஷன் பரிந்துரை செய்திருந்த ஓர் அறிக்கையைத் தூசு தட்டி எடுத்துப் பத்திரிகையாளர்களுக்கு வழங்கினார் சித்திகி. அது முக்கிய செய்தியானது. 'சபாஷ்' சொன்ன ஜேட்மலானி, தமிழ்நாட்டைச் சேர்ந்த தமது இன்னொரு சிஷ்யரையும் தமது பி.ஏ.வாக வரச் சொல்லியிருக்கிறாராம். இவர், இன்றைய உள்துறை அமைச்சர் அத்வானி வருகிறபோதெல்லாம், 'பாரத் மாதா கி ஜே!' என்று உரத்து கோஷம் போடக் கூடியவர். பல வட இந்தியத் தலைவர்களை இந்தக் கோஷத்தாலேயே கவர்ந்த இவர், முன்னாள் உள்துறை அமைச்சரின் பெயரில் பாதியைக் கொண்டவர்!

● தம்மைப் போல் பொழுது போகாமல் தவிக்கும் அரசியல்வாதிகள் யாரும் இருக்கிறார்களா என்று பார்த்தார் தேவே கௌடா. கிடைத்தார் சந்திரசேகர். "பாஸ்! (இவர் சு.சுவாமி உள்பட அனைவரையும் பாஸ் என்றுதான் கூப்பிடுவார்!) வாருங்கள், நாம் இந்த தேசத்துக்கு ஏதாவது செய்ய வேண்டாமா?" என்றழைத்தார் கௌடா. சரி, தேர்தலுக்குப் பின் மூன்றாவது அணி என்று ஏதாவது அமைந்தால், அதில் தமது பெயர் விடுபட்டுப் போய் விடக்கூடாதே என்பதற்காக கௌடாவுடன் இணைந்து நிற்கிறார் சந்திரசேகர். தேர்தலுக்குப் பின் அப்படியேதும் சான்ஸ் கிடைத்தால் ஹெக்டே, பெர்னாண்டஸ், நிதீஷ் குமார் போன்ற தமது முன்னாள் சிஷ்யர்களை இழுக்கக் கூடியவராயிற்றே சந்திரசேகர். அதனால் கௌடாவும் சந்தோஷமாகப் பொழுது போக்கிக் கொண்டிருக்கிறார்.

● 'இந்திய கிரிக்கெட் அணியின் கோச் கபில் தேவ்' என்று செய்தி அடிபட்ட போது, டெல்லி கோல்ஃப் மைதானத்தில் விளையாடிக் கொண்டிருந்தார் கபில்தேவ். விளையாடி முடித்து வீடு திரும்பியவர், காத்திருந்த பத்திரிகையாளர்களிடம், "ஒரு பத்து நிமிடம்!" என்று சொல்லிவிட்டுத் தமது வீட்டிலுள்ள ஜிம் அறைக்குச் சென்றார். பிறகு, "எனக்கு எதுவுமே தெரியாது. இந்திய கிரிக்கெட் குழுவைப் பற்றி எதுவுமே சொல்வதற்கில்லை. திடீரென்று கேப்டனையே தூக்கியெறிவார்கள். ஒரு வீரரை அணியில் சேர்த்து வெளிநாட்டுக்கும் அழைத்துச் செல்வார்கள். பின் அங்கிருந்து திருப்பியனுப்புவார்கள். ஐயா சாமி! போதும் என்னை விட்டு விடுங்கள்!" என்றார். அப்புறம் அன்றிரவு செய்தி உறுதியானதும், "நான் ஒப்புக் கொள்கிறேன். இந்திய கோச் ஆனதில் சந்தோஷம்! என்று அறிக்கை விட்டார்.


• சந்திரசேகர்


• கௌடா


• கபில்

— இந்த்ரப்ரஸ்தன்



• டெண்டுல்கர்

# பந்தாடப்படும்

சச்சினுக்கு முதுகுவலி; எனவே ஜடேஜாவுக்கு. ஜடேஜாவுக்கு இடுப்புப் பகுதியில் காயம்; எனவே சவுரவ் கங்குலிக்கு. இப்படி ஏதோ சுழற்கோப்பை போல சமீப காலமாகச் சுற்றி வருகிறது இந்தியக் கிரிக்கெட் அணியின் கேப்டன் பதவி. இப்போது ஜடேஜாவுக்குக் குணமாகிவிட, அவரே கென்யாவில் நாம் மோத விருக்கும் பந்தயங்களுக்குத் தலைமை வகிப்பார் என்றும், இரு வாரங்களில் சச்சின் டெண்டுல்கர் குணமாகி விடுவார்; எனவே நியூஸிலாந்திற்கெதிரான டெஸ்ட் பந்தயத் தொடரில் அவரே நம் அணிக்குத் தலைமை வகிப்பார் என்றும் செய்திகள்.

உடல் நலம் ஒருபுறமிருக்க, இந்திய அணிக்குத் தலைமை வகிக்க யார் அதிகப் பொருத்தமானவர் என்ற பட்டிமன்றம் அவ்வப்போது நடந்து வருகிறது. ஏனோ தெரியவில்லை, ஏதோ பெரும் சக்தி வாய்ந்த பதவி என்று கேப்டன் பொறுப்பைப் பலரும் நினைக்கிறார்கள். சொல்லப் போனால் அணியில் யாரை சேர்த்துக் கொள்ளலாம் என்று தேர்வு செய்யும் உரிமைகூட கேப்டனுக்குக் கிடையாது. தேர்வாளர்களுக்கும் அணித் தலைவருக்குமிடையே ஒரு பனிப்போர் நிலவுவதும், பெரும்பாலான கேப்டன்களின் பதவி நீக்கம் மிகவும் அகௌரவமான முறையிலேயே நடைபெறுகிறது என்பதும் கூட காலம் காலமாக நாம் காண்பதுதான்.

சமீப கால கிரிக்கெட் சரித்திரத்தில், பெற்ற வெற்றிகளைக் கொண்டு அளவிட்டால், அசாருதீன் மிகவும் திறமையான கேப்டன் என்று சொல்ல வேண்டும். ஆனால் 'அவர் சக விளையாட்டுக்காரர்களோடு தகவல்களைப் பரிமாறிக் கொள்ள மாட்டார்; வயதும் ஆகிவிட்டது' என்றெல்லாம் காரணங்களை அடுக்கி அவர் விலகுவதே உத்தமமானது என்ற குரல் நாடு தழுவி எழுந்தது. எப்படியும் உலகக் கோப்பை பந்தயத்துக்குப் பிறகு, தாம் கேப்டன் பதவியிலிருந்து இறக்கப்படுவோம் என்பதை அவர் முன்பே ஊகித்திருக்க வேண்டும். அதனால்தான் 'என்னைவிட வயது குறைந்த கேப்டனுக்குக் கீழும் நான் விளையாடத் தயார்'' என்று முந்திக்கொண்டு அறிக்கை விட்டார்.

சச்சின் டெண்டுல்கரைக் கேப்டன் பதவிக்கு ஏகமனதாகத் தேர்ந்தெடுத்தனர் தேர்வாளர்கள். ஆனால் அந்த அறிவிப்பு வந்து ஒரு முழு நாளைக்கு - 24 மணி நேரத்துக்கு - பத்திரிகையாளர்கள் கண்களில் படாமல் கண்ணாமூச்சி ஆடினார் அவர். ''அவருக்கு கேப்டன் பதவியை வகிப்பதில் ஈடுபாடில்லை'' என்ற வதந்தி பரவியது. அதற்கு சில நாட்களுக்கு முன், ''கேப்டன் பொறுப்பு உங்களுக்கு அளிக்கப்பட்டால் அதை ஏற்றுக் கொள்வீர்களா?'' என்ற கேள்விக்கு, ''இப்போது நிலவும் ஆரோக்கியமான சூழலைக் குலைக்க எனக்கு மனமில்லை'' என்று பதிலளித்தார் அவர்.

சுமார் ஒன்றரை ஆண்டுகளுக்கு முன் கேப்டனாக இருந்த தம்மைப் பதவி நீக்கம் செய்து, அசாருதீனுக்கு அப் பதவியைக் கொடுத்த செய்தியை நிருபர்களிடமிருந்து தான் முதலில் அறிய முடிந்தது என்ற மனக்கசப்பை சச்சினால் மறக்க முடியாமல்

இருந்திருக்கலாம்.

தலைமைப் பொறுப்பு தம் மீது சுமத்தப்படும்போதெல்லாம் அதை வெகு சீரியஸாகவே அவர் எண்ணி வந்திருக்கிறார் என்பதில் சந்தேக மில்லை. இந்திய அணி அவரது தலைமையில் சரியாக ஆடா விட்டால் நொடித்துப் போவார். அதுவும் வெற்றி வாய்ப்புகள் பளிச்சென்று இருக்கும்போது



• அஜய் ஜடேஜா



• கங்குலி



• அஸாருதீன்

# கிரிக்கெட் கேப்டன்கள்!

பொறுப்பின்றி, ஆடி இந்திய அணி தோல்வியைத் தழுவும்போது கேப்டன் சச்சின் இடிந்து போய்விடுவார். "இந்திய அணிதானே வெல்ல வேண்டும்? தனிப்பட்டவர்களின் சாதனைகளா முக்கியம்?" என்று புலம்புவதோடு நிற்காமல், மைதான வளாகத்தில் உள்ள ஏதாவது அறைக்குள் சென்று தாளிட்டுக்கொண்டு தனிமையில் துக்கப்படுவதும் (அழுவதும்?) அவர் வழக்கம் என்கிறார்கள்.

சச்சினின் நேர்மையையோ, பொறுப்புணர்வையோ சந்தேகிக்கக் கூடாது என்றாலும் கேப்டன் பதவி அவர் தோளை மலையாக அழுத்துகிறது என்பதும், அந்தப் பொறுப்பை அவரிடமிருந்து கொஞ்ச காலத்துக்காவது விலக்கினால் ஒருவித நிம்மதி உணர்வோடு அவர் விளையாட்டில் மேலும் சாதனை படைப்பார் என்றும் நம்ப இடமுண்டு.

அப்படியானால் அந்தப் பொறுப்பை யார் சுமப்பது? சமீபத்தில் டோரன்டோவில் மேற்கிந்திய அணியுடன் நாம் மோதிய போது 2-1 என்ற கணக்கில் வெற்றி பெற்ற நம் அணிக்குத் தலைமையேற்றவர் சவுரவ் கங்குலி. சக ஆட்டக்காரர்களை எவ்விதத்திலும் எரிச்சல்படுத்தாதவர் என்ற பெயர் இவருக்குக் கிடைத்திருக்கிறது. கேப்டன் பதவி வகித்த அந்த மூன்று போட்டிகளிலுமே இவர் தமது பந்து வீச்சிலும் பேட்டிங்கிலும் குறைவின்றிப் பிரகாசித்திருக்கிறார். 'ஆட்ட நாயகன்' பரிசு வேறு. ஆக சவுரவ், கேப்டனாக இருக்க லாயக்கானவர்தான்; அதே சமயம் அந்தப் பொறுப்பால், தம்முடைய மற்ற விளையாட்டுத் திறமைகளை மங்காமலும் பார்த்துக் கொள்ள முடியும் என்பதை நிரூபித்திருக்கிறார்.

ஆனால் "அஜய் ஜடேஜாதான் கேப்டனாக இருக்க வேண்டும்" என்று எண்ணும் இளைஞர்களின் எண்ணிக்கை அதிகமாகிக் கொண்டு வருகிறது. பரம்பரை கிரிக்கெட் ரத்தம் உடலில் ஓடுகிறது. (ரஞ்சி, துலிப் என்பவர்களின் பெயர்களில் எல்லாம் கிரிக்கெட் கோப்பைகள் வழங்கப்படுகின்றன இல்லையா, அவர்கள் இருவரும் ஜடேஜாவின் தாத்தாக்கள்) வசீகரச் சிரிப்பு இவரது பெரும் ஆயுதம். இந்திய அணியின் அத்தனை வீரர்களிடமும் நல்ல பெயர் வாங்கும் அளவுக்கு சகஜமாகவும் கர்வமின்றியும் பழகும் தன்மை கொண்டவர். உதவி கேப்டனாக விளங்கும் இவர், அணியின் சீனியர்களில் ஒருவரும்கூட! எல்லாவற்றையும் விட முக்கியமாக உடனுக்குடன் முடிவெடுத்து, சந்தர்ப்பத்திற்கேற்ப ஆட்டப் போக்கில் புதிய மாறுதல்களைத் தயங்காமல் பரிசோதித்துப் பார்க்கிறார் என்ற பெயரும் இவருக்கு உண்டு!

— குல்லூ

# புத்தமங்கலம் ஆலயங்கள் கும்பாபிஷேகம்



• கும்பாபிஷேகம் செய்விக்கப்பட்ட வரதராஜ பெருமாள் ஆலயம்.

# பிரபஞ்சமே சிறக்க நடந்த பிரார்த்தனை!

கருவறையிலிருந்து எடுத்து வந்து அபிராமி அம்மையை நீரால் முழுக்காட்டுகிறார்கள். பால அபிராமி. சின்னஞ்சிறு வடிவத்துடன் புன்னகை தவழ நல்ல வெளிச்சத்தில் கண்குளிரக் காட்சி தரும் அன்னையை உவகை பொங்க வணங்கி எழுந்து மகிழ முடிந்தது. "கல்கி" பிறந்து வளர்ந்த புத்தமங்கலம் கிராமத்தில்.

ஆவுடையாரையும் லிங்கத்தையும் கூடத் தண்ணீரால் நீராட்டி சுத்தம் செய்கிறார்கள். இருபதாண்டுகளுக்கு முன்பு வைத்த மருந்து எண்ணெய் வெண்ணெய் எல்லாம் கரைந்து ஓடுகிறது.

நாளைய தினம், செப்டெம்பர் 16ம், திருக்குட நீராட்டு விழா. அதற்குக் கோவிலையும் விக்ரகங்களையும் சுத்தம் செய்கிறார்கள். பக்தி சிரத்தையுடன் மூலை முடுக்குகளையெல்லாம் தேய்த்து அலம்புகிறார்கள். சின்னஞ்சிறு கோவில். ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன்பு வந்தபோது சிதிலமாகி இடிபாடுகளுக்கிடையே நம்முடைய அக்கறை இன்மையின் புறச்சின்னமாக நின்ற கோவில், இன்று புதிய மண்டபத்துடனும், வண்ணங்கள் பூசிய சுதை சிற்பங்கள் கோபுரத்தில் பளபளக்கும் புதிய பொலிவுடனும் காட்சியளிக்கிறது!

கிழக்கே கிருபாலநாதர் அபிராமசுந்தரி குடிகொண்ட சின்னஞ்சிறு கோவில். மேற்கே ஸ்ரீதேவி பூதேவி சமேதரான வரதராஜப் பெருமாள். புத்தமங்கலம் தெருவின் இருபக்கங்களிலும் சின்னஞ்சிறு கோவில்கள். திண்ணைக்கு வந்தால் சுவாமி தரிசனம்தான்! சிவன் கோவிலை ஒட்டி வரதராஜப் பெருமாளை சேவித்தபடி ஆஞ்சநேயர். சொல்லின் செல்வனான அனுமன், சின்னஞ்சிறு வடிவில் பிராட்டிக்குத் தரிசனம் கொடுத்தபோது தன்னைச் சுருக்கிக் கொண்டு நின்றது போலக் காட்சி தருகிறார்.

• பக்கத்து கிராமங்களிலிருந்து மக்கள் கூட்டம்



• கிருபாலநாதர்-அபிராம சுந்தரி ஆலயம்



எல்லாக் கோவில்களும் புதுமெருகுடன், வர்ணஜாலங்களுடன் மிளிர்கின்றன.

யாக சாலைகளில் நறுமணம் கமழ்கிறது. நெய் மணம், விளக்குச் சுடர்மணம், ஹோமப் புகையின் மணம், பழங்களின் மணம், பன்னீர், சந்தன மணம், மூலிகைகளின் மணம், சாம்பிராணி மணம், கற்பூரம் எரியும் மணம், இத்தகைய மணங்கள் நமது நாசி வழியே சுவாசப் பையில் கலந்து உடல் முழுவதும் பரவி நம்மைப் புனிதப்படுத்துகின்றன.

நறுமணப் புகையின் மூலம் புறஉலகில் அம்பிகையின் அருள் பரவுவதாக ஸ்ரீஸூக்தம் கூறுகிறது.

• சின்னஞ்சிறு ஆஞ்சநேயர் கோயில்





• யாகத்தில் சமர்ப்பிக்க ஊர்வலமாக...

**வ**ரதராஜப் பெருமாள் சந்நிதியில் விழா தொடங்குகிறது. யாக சாலைகள் அழகாக அலங்கரிக்கப்பட்டிருக்கின்றன. குடமுழுக்குக்காக வந்திருக்கும் திருமண் தரித்த பெரியோர்களுடைய பக்தியும் சிரத்தையும் நம்மையும் ஈர்க்கிறது. மண் குடங்களும், செப்புக் குடங்களும் நூல்கள் சுற்றப்பட்டுப் புனிதத் தன்மையுடன் காட்சி தருகின்றன.

ஒரு சட்டியில் தேங்காய்ப் பஞ்சு. அருகில் பல்லாங்குழி மாதிரி ஒரு பலகை. இது என்ன என்று யோசிக்கும் போதே பட்டர் கூறுகிறார். "இது அரணிக் கட்டை. ஐம்பது வருஷம் வளர்ந்த அரசமரத்தில்தான் அரணிக் கட்டை செய்ய முடியும். உலக்கை மாதிரி இதோ இருக்கிறதே. அது சுருங்காலி. ஆனால் அதன் அடியில் இருக்கும் சின்ன மரத் துண்டுதான் அக்னியை வரவழைக்கும்!" சொல்லிக் கொண்டே கயிற்றைச் சுற்றிப் பலகையில் உள்ள குழியில் பொருத்தி இழுத்துக் கடைகிறார். நாம் வியப்புடன் பார்த்துக் கொண்டிருக்கும்போதே அந்தக் கட்டை உராயும் இடத்திலிருந்து இலேசாகப் புகை வருகிறது.

"கடையற வேகம் போறாது. வெங்கடேசா வேகமாகக் கடை!"



• வேத கோஷம்

வெங்கடேசன் என்ற பட்டர் கயிற்றை இழுத்து மிக வேகமாகக் கடைகிறார். கட்டையை நகராமல் அழுத்திக் கொள்கிறார்கள். குபுகுபு வென்று புகை, புகை நடுவில் தீப்பொறி. சட்டென்று பொறிகளை நாருள்ள சட்டி யில் விழச் செய்து ஒரு கற்பூரக் கட்டி யைப் போடுகிறார். குப்பென்று செந் நாப்பிழம்புகளுடன் அக்னி பகவான் பிரத்யக்ஷமாகிறார்.

"யாக சாலைக்கு சமையல் அடுப்பி லிருந்தெல்லாம் அக்னி எடுக்கக்கூடாது. இப்படித்தான் அவரைக் கூப்பிடுவோம்" என்கிறார் பட்டர். தயாராக இருக்கும் யாக குண்டங்களில் அக்னியை அழைத்து, யாக காரியங்கள் ஆரம்பமாகி விட்டன.

"எங்கள் வேள்விக் கூடமீதில் ஏறுதே
தீ இந்நேரம்
பங்க முற்ற பேய்களோட்ட பாயுதே தீ
தீ - இந்நேரம்"

என்று 'கல்கி'யவர்கள் உற்சாகமாகப் பாடும் பாரதியார் பாடல் நினைவுக்கு வருகிறது.

கிருபாலநாதர் கோவில் யாக சாலையி லும் தொடங்கி விட்டார்கள். இரண்டு பக்கமும் நடக்கும் அழகிய சடங்கு களைப் பார்க்க மேலும் கீழுமாய் அலைந் தாலும் ஆர்வத்தினால் களைப்பே தெரிய வில்லை. திண்ணைகளில் பூமாலைகள் கட்டப்படுகின்றன. தெருவெல்லாம் நறு மணம்.

கல்கி கிருஷ்ணமூர்த்தியின் தமை யனார் வீட்டின் பின்கட்டில் மற்றொரு அக்னி மூட்டப்படுகிறது.

பழைய காலத்துக் கோட்டையடுப்பு. பரிசாரகர் விறகுக் கட்டுகளைப் பிரித்துக் கோட்டையடுப்பில் அடுக்கிச் சுள்ளி களைப் போட்டு விட்டு ஏற்கெனவே சுத் தம் செய்யப்பட்டிருந்த அடுப்புக்கு அருகில் மஞ்சள் பொடியால் பிள்ளை யார் பிடித்து வைத்து அடுப்புக்குச் சந் தனம், குங்குமம் இட்டு வணங்குகிறார். தேங்காய் உடைத்து நைவேத்யம் செய்து தூப தீபம் காட்டி, விநாயகருக்கும் அடுப் புக்கும் கற்பூர ஆரத்தி செய்து விட்டு அந்தப் பிழம்பை அடுப்பில் விழச் செய் கிறார். சடாரென்று நெருப்பு உண்டாகி மேலெழும்புகிறது.

நம்முடைய பண்பாட்டின் அழகை வியக்கிறோம். சமையல் அடுப்பு மூட்டுவது கூட ஒரு யாக குண்டம் வளர்ப்பது போல் பக்தி சிரத்தையுடன் செய்வது என்ன அழ காக இருக்கிறது!

குடங்களில் புனிதநீர் விடுவது கூட ஒரு அழகிய சடங்கு. அமரர் கல்கியின் சகோதரர் ஜகதீசய்யரின் மகன் பிச்சை ராமன், வடக்கே யிருந்து கங்கை நீர் கொண்டு வந்திருக்கிறார். காவிரி கொள்ளிட நதிகளிலிருந்து நந்நீர். இவையெல்லாவற்றையும் பெரிய அண் டாவில் நிரப்பி வாசனைப் பொருள்களைச் சேர்க்கிறார்கள். மூலிகைப் பொடிகள், ஏலக் காய், குங்குமப்பூ, பச்சைக் கற்பூரம், நவரத் தினங்கள், வெள்ளி தங்கத் தகடுகள் எல்லா வற்றையும் கூடியிருந்தவர்கள் கொஞ்சம் கொஞ்சமாகச் சேர்க்கத் தண்ணீரின் மணம் கோவிலெங்கும் பரவுகிறது! அந்த நீரால் கலசங்களை நிரப்பி, யாக சாலைக்கு எடுத்துச் செல்கிறார்கள். பகவானையும் பரிவார தேவதைகளையும் அந்தக் குடங்களில் ஆவாஹனம் செய்து பீடங்களில் வைத்து மூன்று நாட்களும் பூஜை செய்கிறார்கள்.

மூன்று நாட்களும் யாகத்தில் சமர்ப்பிக் கும் பொருள்களைத் தட்டுக்களில் அடுக்கி, வீட்டிலிருந்து மேளதாளத்துடன் எடுத்துச் செல்ல வேண்டும். பட்டுக்குடை தாங்கி இருவர் கூட வர, நாதஸ்வர வித்வான்கள் உற்சாகமாகத் தங்கள் திறமையைக் காட்ட இந்தப் புனிதப் பொருள்களைச் சுமந்து செல்கிறோம்.

புத்தமங்கலத்தில் பொன்னுவையர் என்று பிரியமாக அழைக்கப்பட்ட ராமசாமி ஐயரின் புதல்வர்கள் மூன்று பேர். முதலாமவர் வெங்கடராம ஐயர், அடுத்தவர் நடு ஐயர் என்று அழைக்கப்பட்ட கிருஷ்ணமூர்த்தி. கல்கி என்ற புனைபெயரில் தமிழ்நாட்டிலும் உலகெங்குமுள்ள தமிழர் வாழுமிடங்களிலும் அழியாப் புகழ்பெற்றவர். மூன்றாமவர் இவர்களுடைய தம்பி ஜகதீசன். இந்த மூன்று பேருடைய வாரிசுகளும் தலையில் ப்ரிவட் டத்துடன் பூர்ணாஹுதிக்கு உரிய பொருள் களை பக்திசிரத்தையுடன் சுமந்து செல் கின்றனர்.

இந்தத் திருக்குட நந்நீராட்டு விழா இவ்வளவு சிறப்பாக நடப்பதற்குக் காரண மானவர்களை நன்றியுடன் நினைத்துக் கொள்கிறோம். கோவில் திருப்பணிக்கும் கும்பாபிஷேகத்துக்கும் சிறிதும் பெரிதுமாக ஏராளமான கல்கி அன்பர்கள் நன்கொடை

உடல் நோயற்றிருப்பது முதல் இன்பம். மனம் கவலையற்றிருப்பது இரண்டாம் இன்பம். பிறருக்கு உதவியாக வாழ்வது மூன்றாம் இன்பம்.
— டாக்டர் மு.வ. தகவல்: இரா. பார்த்திபன்

களை வாரி வழங்கினார்கள். இந்து சமய அறநிலைய ஆட்சித் துறையில், அமைச்சர் முதல் கடைநிலை ஊழியர் வரை அனைவரும் ஒத்துழைத்தனர். கோவில்களை அனேகமாக முழுதுமே கட்ட வேண்டிய நிலை. பொறுப்பாக ஆணைகளை அனுப்பி செய்ய வேண்டியனவற்றை உடனுக்குடன் செய்து, கோவிலைப் புதுப்பிக்க எல்லா ஆலோசனைகளையும் வழங்கி உதவி செய்தனர். நிர்வாகக் குறை ஏதும் இன்றி மூன்று கோவில்களிலும் திருப்பணி நடந்தது. வேகமாகவும் நடந்தது.

கோவில்களைப் புதுப்பித்தாகி விட்டது. அடுத்ததாக திருக்குட நந்நீராட்டு விழா நடத்த வேண்டுமே. கல்கியின் புதல்வரும், கல்கி பத்திரிகையின் நிர்வாகியுமான ராஜேந்திரன் குடும்பத்துடன் தருமபுரத்துக்குப் போனார். "இந்த மாதிரி காரியமெல்லாம் செய்து பழக்கமில்லை. ஆதீனத்திலிருந்து கும்பாபிஷேகம் நடத்தித் தரவேண்டும்" என்று சரணாகதியே அடைந்து விட்டார். குருமகா சந்நிதானம் அவர்கள் அபய ஹஸ்தயம் காட்டி ஆசி கூறியதும்தான் எல்லோருக்கும் துணிவும், உற்சாகமும் பிறந்தது.

இந்த புத்தமங்கலம் கோவிலுக்குத் திருப்பணி செய்ய சுமார் நான்காண்டுகளுக்கு முன்னரே முயற்சி மேற்கொள்ளப்பட்டது. கொஞ்சங்கூட முன்னேற்றம் ஏற்படவில்லை. கல்கி நூற்றாண்டு விழா தொடங்கியதும் கிடுகிடுவென்று எல்லா முயற்சிகளும் வெற்றி தந்ததுடன் திருப்பணியில் எல்லோரும் மிகுந்த சிரத்தை எடுத்துக் கொள்ளத் தொடங்கினார்கள்.

கடவுள் மானிட உருவத்தில் வந்து உதவி செய்வதாகத்தான் சொல்கிறார்கள். ஒவ்வொருவர் உள்ளத்திலும் உள்ள கடவுளின் கிருபையால் ஒரு சின்னஞ்சிறு கிராமத்திலுள்ள பொம்மைக் கோவில்கள் மாதிரி சின்னஞ்சிறிய கோவில்களில் கும்பாபிஷேகம், பெரிய பெரிய கோவில்களில் நடப்பதைப் போல பற்பல விமரிசைகளுடனும், மேளதாளங்களுடனும், மந்திர கோஷங்களுடனும், தேவார திருவாசகப் பாடல்களுடனும், குறைவில்லாத திரவியங்களுடனும், மிகச் சிறந்த வேத வித்துக்களால் நடந்தேறியது ஒரு வியப்புக்குரிய, பெருமிதத்துக்குரிய நிகழ்ச்சியாகும்.

தருமபுர ஆதீனத்திலிருந்து கட்டளைத் தம்பிரான் வந்து யாக சாலையில் ஒரு குறைவும் இல்லாதபடி பார்த்துக் கொண்டார். அந்தந்த வேளையில் டாண்டாண்



• வரதராஜ பெருமாள்-திருக்கல்யாண உற்சவ கோலத்தில்...

என்று மணிகள் முழங்க ஆவாஹனம் செய்து வைத்திருந்த கலசங்களுக்குப் பூஜையும் அர்ச்சனையும், தீபாராதனையும் செய்தது கண்கொள்ளாக் காட்சி.

திருக்குட நந்நீராட்டு விழாவுக்கு முதல் நாள் மாலை திருக்கயிலாயபரம்பரைத் தருமை ஆதீனம் 26வது குரு மகா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞான சம்பந்த பரமாசாரிய சுவாமிகள் வருகை தந்தபோது பூரண கும்ப மரியாதைகளுடன் வரவேற்றார்கள். அருள்மிகு வரதராஜப் பெருமாளின் சந்நிதியில் அமைக்கப்பட்டிருந்த யாக சாலையைத் தரிசித்து விட்டு நாதஸ்வர இன்னிசையுடன் அருள்மிகு கிருபாலநாதர் சந்நிதியை அடைந்தார்கள். யாக சாலையில் அன்றைய ஸங்கல்பம் மெய்சிலிர்க்கச் செய்து விட்டது.

ஷோடசோபசாரம் என்று சொல்வார்கள். இந்தச் சின்னஞ்சிறு கிராமத்தில் கிருபாலநாதருக்கும் அபிராமி அம்மைக்கும் நடந்த உபசாரங்களைப் பார்த்துப் பிரமித்துப் போனோம். எத்தனை வகை அலங்கார தீபவிளக்குகள்! விசிறி, குடை முதலிய பிருதுகள்!

குரு மகா சந்நிதானம் அவர்கள் அளவற்ற தமிழ்ப்பற்று கொண்டவர். கருணையுள்ளம் கொண்டவர், கொடைவள்ளல், கல்விப் பணியில் நாட்டம் கொண்டவர், சிவநேசச் செல்வர் என்பதெல்லாம் தெரிந்திருந்தபோதிலும் இந்தச் சிறிய கோவிலின் கும்பாபிஷேகத்தில் இவ்வளவு சிரத்தை எடுத்துக் கொண்டு ஆர்வத்துடன் நடத்திக் கொடுத்தது கிராமத்தார் அனைவரின் நெஞ்சத்தையும் நெகிழச் செய்து விட்டது.

பூர்ணாஹுதியானதும் கிருபாலநாதர் சந்நிதிக்குச் செல்கிறார். காஞ்சி மடத்திலிருந்து பீடாதிபதி ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகள் அனுப்பியிருந்த யந்திரங்களை உரிய முறையில் கருத்துடன் பொருத்துகிறார். நவரத்ன மணிகளை இட்டு தமது கையாலேயே மருந்தை எடுத்துச் சாத்துகிறார்.



• தருமை ஆதீனத்துக்குப் பூரண கும்ப வரவேற்பு

சிவலிங்கத்தின் மீது வெண்ணெய் தடவி மருந்தாலேயே பிள்ளையார் பிடித்துப் பூஜை செய்து இறைவன் மீது சாத்துகிறார்கள். சிவந்த நிறத்தில் மருந்து பளபளக்கிறது.

அங்கிருந்து இறைவி அபிராமியின் சந்நிதியில் மருந்து சாத்தும் வைபவம்.

மருந்து சாத்திய பிறகு குருமகா சந்நிதானம் அவர்கள் கல்கி நூற்றாண்டு விழாவை கிராமத்தில் தலைமையேற்று நடத்திக் கொடுத்தார்கள். "எத்தனையோ விழாக்கள் இந்த நூற்றாண்டில் நடந்திருந்தாலும் 'கல்கி' பிறந்த ஊர் மக்களின் அங்கீகாரம்தான் நிறைவு தரும்; 'தன் மகனைச் சான்றோன் எனக் கேட்ட தாயின்' நிலையில் புத்தமங்கலம் கிராமம் இன்று உள்ளது" என்று நெகிழ்ச்சியுடன் பேசினார்கள். கல்கி பத்திரிகை இன்றும் தரம் குன்றாமல் நல்ல விஷயங்களையே மக்களுக்குத் தருவதைப் பாராட்டினார்கள்.

குரு மகா சந்நிதானம் அவர்களே அன்று ஒரு பட்டிமன்றத்துக்கும் ஏற்பாடு செய்திருந்தார்! சமுதாயத்தில் இறையுணர்வு அதிகரித்துள்ளதா அல்லது பின்னடைவு ஏற்பட்டுள்ளதா என்பது அலசப்பட்டது. பேசியவர்கள் எல்லாரும் ஊசிப்பட்டாஸ் மாதிரி படபடவென்று கருத்துக்களைச் சொன்னார்கள். இறையுணர்வு அதிகரித்திருந்தபோதிலும் அதை சரியான மார்க்கத்தில் செலுத்த இன்னும் செய்ய வேண்டியது நிறைய உள்ளது என்பது தீர்ப்பு.

கல்கி அவர்களைப் பற்றி அ. கலியபெருமாள் எழுதிய நூல் வெளியிடப்பட்டது.

செப்டெம்பர் 16 காலையில் முதலில் அருள்மிகு வரதராஜ ஸ்வாமி, ஸ்ரீ ஆஞ்சநேயர் கோவிலில் குடமுழுக்கு விழா. அழகான வைபவமாக நிறைவேறியது. எதிரும் புதிருமாக ஒரே சமயத்தில் நடைபெற்ற கும்பாபிஷேகத்தைக் கண்டுகளித்தோம். சிறிய தெரு வானபடியால் ஓடிப் போய் ஆஞ்சநேயர் கோவில் கோபுரத்தி லிருந்து சொட்டிய நீரையும் தொட்டுத் தலையில் தெளித்துக் கொண்டோம்.

ஜனக் கூட்டத்தைப் பார்த்து அதிசயமாக இருந்தது. சென்னையிலிருந்தும் பம்பாய் டெல்லியிலிருந்தும் வந்த உறவினர்கள் சுமார் அறுபது பேர். ஆனால் அக்கம் பக்கத்து கிராமங்களிலிருந்து வந்தவர்கள் சுமார் 2000 பேர் நின்று ஸ்ரீ கிருபாலநாதர் ஆலய கும்பாபிஷேகத்தை ஸ்ரீல ஸ்ரீ தருமை ஆதீனம் முன்னின்று நடத்தி வைப்பதை ஆர்வத்துடன் கண்டுகளித்தார்கள். இந்தக் களங்கமில்லாத பக்தியுடைய மக்களை தலை வணங்கி வாழ்த்துகிறோம்.

யாக சாலையில் ஸங்கல்பம் செய்த தீக்ஷிதர், "கல்கி நிறுவனத்தைச் சேர்ந்தவர்களுக்கும், சதுர்வேதி மங்கலம் என்ற பெயருடைய புத்தமங்கலம் கிராமத்தைச் சேர்ந்தவர்களுக்கும், தென்னாட்டிலுள்ளவர்களுக்கும் சேது முதல் இமயம் வரை வாழும் ஜனங்களின் எல்லா மனோரதங்களும் நிறைவேறவும், உலகத்திலுள்ள அத்தனை நாடுகளின் அமைதிக்காகவும், அண்டவெளியில் உள்ள எல்லாக் கோள்களும், நக்ஷத்திர மண்டலங்களும் சரியாக இயங்குவதற்கும் இந்தப் பூஜையும் கும்பாபிஷேகமும் செய்கிறோம்" என்று மந்திரம் சொன்னார். அப்படியே விதிர்விதிர்த்துப் போனோம்.

"மற்ற யாகங்கள் பூஜைகள் எல்லாம் செய்கிறவரின் நலத்துக்காகச் செய்யப்படுகிறது. கும்பாபிஷேகத்தில் மட்டும் செய்பவருக்குத் தனிப்பலன் கிடையாது. அண்ட சராசரங்களும் இயங்கவும், சகல உயிர்களும் அமைதியாக வாழவும் அருள வேண்டிச் செய்யப்படுவது" என்று விளக்கினார் தீக்ஷிதர். தமிழ் விழாவாகவும், இசை விழாவாகவும், கலை விழாவாகவும், இலக்கிய விழாவாகவும் ஆண்டு முழுதும் கொண்டாடப்பட்ட கல்கி நூற்றாண்டு விழா, தெய்வீக விழாவாக கும்பாபிஷேகங்களில் முடிவெய்தி, ஆன்மிக விழாவாக இந்தத் தத்துவத்தில் நிறைவு கண்டது.

—ஆனந்தி

படங்கள் : யோகா




1999 அக்டோபர் 3
பிரமாதி புரட்டாசி 16
மலர் : 58
இதழ் : 10

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.




## கர்நாடக அரசின் ஆணவம்!

'உச்சநீதி மன்றத்தின் ஆணையைக் கூட அலட்சியம் செய்கிறதே கர்நாடக அரசு! இதை விஞ்சக்கூடிய அகம்பாவம் இருக்க முடியுமா...?' என்று அதிசயப்பட்டோம்; அதிர்ச்சியுற்றோம்.

'இருக்க முடியும்' என்று நிரூபித்திருக்கிறார் நாகே கௌடா - கர்நாடக நீர்ப் பாசனத்துறை அமைச்சர்.

காவிரி பிரச்னை குறித்து விவரிக்க, மூன்று தமிழக அமைச்சர்கள் பிரதமரைச் சந்திக்க ஏற்பாடானது. இந்தச் சந்திப்பை 'அரசியல் செப்பிடுவித்தை' என்றும் 'சட்டவிரோதமானது' என்றும் வர்ணித்து அந்தப் பெருமையை எய்தியிருக்கிறார் நாகே கௌடா!

குறுவைப் பயிரைக் காப்பாற்ற முப்பது டிஎம்சி தண்ணீர் கேட்கிறது தமிழகம். தர மறுப்பதோடு, 'மேட்டூரிலிருக்கும் தண்ணீரைப் பயன்படுத்திக் கொள்ளுங்கள்' என்று வயிற்றெரிச்சலைக் கிளப்புகிறது கர்நாடகம்.

மேட்டூரில் எஞ்சியிருப்பது வெறும் 14.9 டி.எம்.சி. அது கடைமடைப் பகுதியை அடைவதற்குள் அளவில் கணிசமாகக் குறைந்துபோய் குறுவையைக் காப்பாற்ற முடியாமல் போய்விடும்.

இது கர்நாடக அரசுக்கும் அதன் மாண்புமிகு நீர்ப்பாசனத்துறை அமைச்சர் நாகேகௌடா வுக்கும் தெரியாததல்ல!

தமிழகம் இப்போது கோரும் நீரின் அளவு, நடுவர் மன்ற இடைக்காலத் தீர்ப்பு நிர்ணயித் திருக்கும் அளவுக்கு உட்பட்டதுதான் என்பதும் கர்நாடக அரசுக்குத் தெரியும்.




அவ்வாறிருக்க, மழை போதவில்லை என்பதால் தண்ணீர் தர கர்நாடகம் மறுப்பது ஏற்கக்கூடிய காரணமே அல்ல.

தமிழகத்துக்கு உரிய தண்ணீரை வழங்க முடியாத அளவுக்குக் கர்நாடகத்தில் மழை குறைந்துவிடவில்லை. கர்நாடக நீர்த் தேக்கங்களில் நீரின் அளவும் போதுமானதாக இருக்கிறது.

ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக காவிரிக் கரையில் விவசாயம் செய்துவரும் தமிழக விவசாயிகள் ஆயக்கட்டு உரிமை பெற்றவர்கள். அவ்வுரிமையை அவர்களுக்கு மறுப்பதே உலகின் எந்தச் சட்டத்தின் அடிப்படையில் பார்த்தாலும் அதர்மம்; அநீதி!

போதாக்குறைக்கு, அவ்வுரிமைகளை வலியுறுத்திச் சொன்ன உச்சநீதிமன்றத்தையும் மத்திய அரசையும் அவமதிக்கிறது கர்நாடகம்.

தமிழகத்துக்குத் தண்ணீர் அளித்தால் கர்நாடகாவில் எழக்கூடிய தீவிரமான அரசியல் எதிர்ப்புக்குப் பயந்து கொண்டுதான் நாகே கௌடா நாடகம் போடுகிறார். 'செப்பிடு வித்தை' என்று பழியைத் தமிழகத்தின் பேரிலும் போடுகிறார்.

உச்சநீதிமன்ற, நடுவர் மன்றத் தீர்ப்புகளின்படியும் ஒப்பந்தப்படியும் நடந்து கொள்ளுமாறு கர்நாடகத்துக்கு மத்திய அரசு வன்மையான முறையில் உத்தரவிட வேண்டும். அதற்குரிய அதிகாரம் மத்திய அரசுக்கு உண்டு. நியாயமான காரணங்களுக்காகக் கடுமையாக நடந்து கொள்ளப் பிரதமர் தயங்க வேண்டியதில்லை.

## ஜவ்வுத் தேர்தல்; கருத்து மோதல்!

தேர்தல் கமிஷனும் ஜார்ஜ் பெர்னாண்டஸ்ஸும் கை கலக்காத குறைதான்!

'பீஹார் தேர்தலில் ஏகப்பட்ட தில்லுமுல்லு நடக்க தேர்தல் கமிஷன் அனுமதித்துள்ளது' என்று குற்றம்சாட்டியிருக்கிறார் பெர்னாண்டஸ். 'அப்படி எதுவும் நடக்கவில்லை; பெர்னாண்டஸ் ஒரு மூன்றாந்தர அரசியல்வாதியைப் போல் பேசுகிறார்' என்று கோபத்துடன் மறுத்திருக்கிறது




தேர்தல் கமிஷன்.

ஜனநாயக அமைப்புகளுக்கிடையே ஏற்படக்கூடிய உரசல்களுள் ஒரு புதிய பரிமாணம் ஆரோக்கியமற்ற, அசிங்கமான முறையில் வெளிப்பட்டிருக்கிறது.

அரசியல் கட்சிகள் ஒன்றையொன்று குற்றம்சாட்டி தேர்தல் கமிஷனை அணுகியது போக, இப்போது தேர்தல் கமிஷனும் சமதா கட்சியும் அடித்துக் கொள்வதைக் கண்டு எதிர்க்கட்சிகள் மகிழ்ந்து போகின்றன!

இந்த அவலத்துக்குக் காரணம் என்ன?

வரலாறு காணாத வகையில் தேர்தலை ஒரு மாதத்துக்கும் மேல் இழுத்தடிக்கும்போது, நடைமுறைச் சிக்கல்கள் விளைகின்றன. முன்கட்டத் தேர்தல்களின் வாக்குப் பதிவுமுறை, கருத்துக் கணிப்புகள் மூலம் வெளிப்பட்டு, பின்கட்டத் தேர்தல்களைப் பாதிக்குமோ என்ற அச்சம் எல்லா தரப்பினரையும் பற்றிக் கொள்கிறது. இந்த அச்சம் காரணமாக அனாவசிய சந்தேகங்கள் எழுகின்றன. பரஸ்பர குற்றச்சாட்டுகள் பரிமாறிக் கொள்ளப்படுகின்றன.

தேர்தல்கள் நடத்தப்படும் காலகட்டத்தை குறைத்துக் கொண்டே வருவதற்குப் பதில், அதிகரித்துக் கொண்டே போயிருக்கிறது தேர்தல் கமிஷன். இதையொட்டி நேர்மையற்ற தேர்தல் பற்றிய புகார்களும் அதிகரித்து வருகின்றன.

நாடுதழுவிய அளவில் தேர்தல்களை ஓரிரு தினங்களில் நடத்தி முடித்து, விரைவில் முடிவுகளை அறிவிப்பது இந்தியா போன்ற வளரும் ஜனநாயக நாட்டில் மிக அவசியமாகும்.

இவ்வாறு விரைவாகத் தேர்தல்களை நடத்தி முடிக்கப் போதுமான பாதுகாப்பு ஊழியர்கள் இல்லை என கமிஷன் சார்பில் சொல்லப்படுவது ஏற்கக்கூடிய காரணம் அன்று.

தொழில்நுட்பமும் விஞ்ஞானமும் பெருகியதற்கேற்ப சுறுசுறுப்பும் திட்டமிடலும் பெருக வேண்டும். நாட்டின் தலைவிதியையும் எதிர்காலத்தையும் நிர்ணயிக்கிற தேர்தல்களை ஜவ்வு போல் இழுத்தடிப்பது மக்களிடையே மனச்சோர்வுக்கும் அரசியல்வாதிகளுக்கிடையே அனாவசிய மோதல்களுக்கும்தான் வழிவகுக்கும். ○

# நெருப்புக்

**அடிவயிற்றில் நெருப்பைக் கட்டிக் கொண்ட நிலையில் வெந்து போய் இருக்கிறார்கள் தஞ்சை – நாகை – திருவாரூர் மாவட்ட விவசாயிகள். தமிழகத்தின் நெற்களஞ்சியம் நெருப்புக் களஞ்சியமாய் கொதித்துப் போய்க் கிடக்கிறது. "வயல்ல வுட்ட வெள்ளாமை வெளஞ்சி வீடு வந்து சேர்ற வரைக்கும் எங்க 'பொழப்பு' நிச்சயம் இல்லாததுங்க" என்கின்றனர் விவசாயிகள். வீடு வந்து சேர்வதற்கு முன்பாக வயல்களிலேயே கருகி அவிந்து போய் விடுமோ என்கிற அச்ச உணர்வு அனைவரது முகங்களிலும் பிரதிபலிக்கின்றது.**





• எம். பாலகிருஷ்ணன்



• டி.எஸ். ஸ்ரீனிவாசன்

குறுவைச் சாகுபடி என்பது 110 நாள் பருவம். சம்பா சாகுபடி என்பது 135 நாள் பருவம். இதில் குறுவைக்கு 90 நாள் தண்ணீர் தேவை. சம்பாவுக்கு 120 நாள். ஆக மொத்தம் வருடத்தில் 210 நாள் காவிரிப் பாசனத்திற்கு தண்ணீர் வேண்டும்.

இதற்கு ஆண்டுக்கு நமக்கு 300 டி.எம்.சி. தண்ணீர் தேவைப்படுகிறது. இதில் கர்நாடகாவிலிருந்து நமக்கு வர வேண்டிய தண்ணீர் 205 டி.எம்.சி.

ஜூன் மாதத்திலிருந்து செப்டம்பர் மாதம் வரைக்கும் கர்நாடகா அரசு தமிழகத்திற்குத் தர வேண்டிய தண்ணீரின் அளவில் 30.12 டி.எம்.சி. தண்ணீரை இன்னமும் தரவில்லை. மிகச் சரியான விகிதத்தில் தண்ணீர் வந்திருந்தால் இந்தளவுக்கு மோசமடைந்திருக்காது என்று கூறுகின்றனர்.

பருவ மழை பெய்யாமல் போனதும் ஒரு காரணம் என்று கூறுகின்றனர் அனுபவம் நிறைந்த விவசாயிகள். பருவ மழை பெய்திருந்தால் நிலத்தடி நீரின் இருப்பினால் ஓடி வரும் வாய்க்கால் தண்ணீர், சட்டெனப் பாய்ந்து கடைமடைப் பகுதிகளுக்குச் சென்று பயன்பட்டிருக்கும். மிகவும் பாதிப்புக்குள்ளாகிப் போனது கடைமடைப் பகுதிகளே.

நாகை, திருத்துறைப் பூண்டி, எடையூர் சங்கேந்தி, தண்டாங்கோயில், முத்துப் பேட்டை, பட்டுக்கோட்டை, சிரமேல்குடி, மதுக்கூர், மேலப் பிடாகை ஆகிய பகுதிகளில் உள்ள வயல்களில் நெற்பயிர்கள் தண்ணீரின்றி வாடி வதங்கி வளர்ச்சியற்றுப் போயுள்ளன.

"தண்டு உருண்டு பூ பூக்குற பருவம்ங்க. இப்ப கலப்புக் கதிரு வர்ற நேரம். கலப்புக் கதிரு வந்திருச்சின்னா ஒரு மாசம் அல்லது நாப்பது நாள்ல அறுவடை ஆய்டும்ங்க. இப்ப அந்த நம்பிக்கையெல்லாம் இல்லீங்க" என்கிறார் சிரமேல்குடி விவசாயி ஒருவர்.

திருவாரூர் மாவட்டம் சவளைக்காரன் கிராமத்தில் சரிவர தண்ணீர்ப் பாய்ச்சல் இல்லாததால் பயிர்கள் கருகி வயல்கள் வெடித்துப் போயுள்ளன.



• மன்னார்குடி எஸ். ரெங்கநாதன்




• கருகும் பயிர்கள்

யாரும் காதில் வாங்கிக் கொள்ள வில்லை'' என்னும் பாணியில் அறிக்கைவிட்ட ஜெயலலிதாவுக்கு பதில் தருவதாக எண்ணிக் கொண்டு அமைச்சர் துரை முருகன் சன் டீ.வி.யில், "அதெல் லாம் ஒன்றுமில்லை. தண்ணீர்ப் பற்றாக்குறை என்பது இல்லை. பாசனத்திற்கு வேண்டிய தண்ணீர் அணையில் இருக்கிறது'' என்கிற வகையில் பேட்டியளித்திருந்தார்.

பெரும்பான்மை விவசாயிகள், "இவர்கள் இருவருக்கும் லாவணி பாட இதுவா நேரம்?'' என்கின்றனர். இதன் வெளிப்பாடே, நிலையை நேரில் கண்டறிய அமைச்சர்கள் சுற்றுப்பயணம் செய்தபோது சில இடங்களில் நடைபெற்ற சாலை மறி யலும், அமைச்சர்கள் சென்ற கார் வழி மறிப்பும்.

சராசரியாக செப்டம்பர் மாத இறுதி யில் கணக்கெடுத்துப் பார்த்தால் மேட்டூரின் நீர்மட்டம் 90 அடி இருந்து கொண்டிருக்கும். பாசனத்துக்கென பதினைந்தாயிரத்திலிருந்து இருபதினாயிரம் கன அடி வரைக்கும் தண்ணீர் திறந்து விடப்பட்டிருக்கும்.

இப்பொழுது நிலைமையே தலைகீழ். மேட்டூரில் நீர் மட்டம் 45 அடி. அணைக்கு நீர் வரத்தோ ஒன்றும் சொல்லிக் கொள்கிற மாதிரி இல்லை. வருவது வெறும் 200 கன அடி தண்ணீர்தான். கருகிக் கொண்டு இருக் கும் பயிர்களைக் காப்பாற்றும் கடைசி முயற்சியாய் 17,000 க. அடி தண்ணீர் திறந்து

வெட்டாறு வாய்க்கால் பாசனப் பகுதி யைச் சேர்ந்த நன்னிலம் தாலுகா, கொட் டாரக்குடியில் இருக்கும் தங்கராசு என்னும் விவசாயி சொல்கிறார், "நாத்தங்கால் பயி ருக்குத் தண்ணி காட்டணும்ங்க. வாய்க்கால் லேந்து வயலுக்குத் தண்ணி ஏவ்வ மாட் டேங்குது. பிளாஸ்டிக் குடத்துல தண்ணிய மொண்டு வயல்ல ஊத்துறோம்ங்க!''

இந்த வருடம் மேட்டூர் அணையிலிருந்து தண்ணீர் தாமதமாகத் திறந்து விடப் பட்டதால் கடைமடைப் பகுதி விவசாயி கள் குறுவைச்

# களஞ்சியமாகும் நெற்களஞ்சியம்!

விடப்படுகிறது.

சாகுபடியை கைவிட்டு சம்பா மட்டுமே பயிரிட்டுள்ளனர். அதுவும் இப்போது "அம்போ'' எனப் போய்விடுமோ என்கிற அச்சம் இருக்கிறது.

மேட்டூர் அணையின் கையிருப்பு இன் னும் ஒரு வாரம் அல்லது பத்து நாட்களுக் குத்தான் தாக்குப்பிடிக்கும். அதற்குள் தமிழகத்துக்குக் கிடைக்க வேண்டிய தண்ணீரின் அளவான 30.12 டி.எம்.சி.யை கர்நாடகாவிடமிருந்து பெற்று, குறுவைச் சாகுபடியைக் காப்பாற்றுவது என்பது

"நான் முன்னமே சொன்னேன்.

மத்திய, மாநில அரசுகளின் கையிலுள்ளது.

"தூர் வாரும் பணியை போன வருஷம் செஞ்ச மாதிரி இந்த வருஷமும் முன்னாடியே முடிச்சிருக்கணும்ங்க. அதுல கொஞ்ச நாள் தள்ளிப் போயிடிச்சி. போதாக்குறைக்கு மேட்டூர் அணையில போதுமான அளவு தண்ணி வேற அப்ப இல்ல. சரியா மழை வேற பெய்யல. கர்நாடகா வேற நமக்குத் தர வேண்டிய தண்ணிய அந்தந்த மாசத்துக்கு உண்டான அளவுக்கு சரியா தரலை. எல்லாம் ஒண்ணா வந்து சேர்ந்து இந்த நிலைமைக்குக் கொண்டு போய் விட்டுடிச்சி" என்கிறார் தமிழ்நாடு காவிரி நீர்ப் பாசன விவசாயிகள் சங்கத் தலைவர் டி.எஸ். ஸ்ரீனிவாசன்.

"உணவுப் பிரச்னை என்பது உடனடியாகத் தீர்க்கப்பட வேண்டிய ஒன்று. இதில் தேசிய நோக்கில் செயல்பட வேண்டும். மாநில அளவில் குறுகிய எண்ணங் கொண்டு செயல்பட்டு வருகின்றன கர்நாடக அரசியல் கட்சிகள். காவிரிப் பிரச்னையில் அரசியல் தேவையில்லை. மனிதாபிமானம்தான் தேவை" என்கிறார் தமிழ்நாடு காவிரி நீர்ப்பாசன விவசாயிகள் சங்கத்தின் பொருளாளர் எம். பாலகிருஷ்ணன்.

"உள்ளதை உள்ளபடிதான் எனக்குச் சொல்லிப் பழக்கம்" என்று உள்ளங்கை நெல்லிக்கனியாய் உரத்துச் சொல்கிறார் மன்னார்குடி எஸ். ரெங்கனாதன். காவிரி நதி நீர்ப் பங்கீட்டுப் பிரச்னைக்குத் தீர்வு காண்பதற்காக அமையப் பெற்ற நடுவர் மன்றம் ஏற்படக் காரணமாய் இருந்த முக்கியமானவர்களில் முதன்மையானவர்.

"இந்த வருடம் சரியான பருவத்தில் நமக்குத் தேவையான அளவு மழை இன்னமும் பெய்யலை. இது முதல் காரணம். தூர் வாரும் பணி முடிந்த பின்னர் பல இடங்களில் விவசாயிகள் வருடந்தோறும் செய்ற கிளை வாய்க்கால் குடி மராமத்துப் பணியை இந்த வருடம் சரிவரச் செய்யலை. இதனால் தூர் வாரும் பணி செய்யப்பட்ட பெரிய வாய்க்கால்களின் தரை மட்டம் ஒன்றரை அடிக்குத் தாழ்ந்து போனதுல ஓடி வர்ற தண்ணி, கிளை வாய்க்கால்கள்ல சரிவர மேலேறிப் பாய முடியாத சிரமம் ஏற்பட்டு விட்டது. இது இரண்டாவது காரணம்.

"செப்டம்பர் மாதம் வரைக்கும் கர்நாடகாவினர் தமிழகத்திற்குத் தரவேண்டிய தண்ணீரைத் தராமல் போனதும் முக்கியக் காரணம். தந்திருந்தால் நிலைமை சீரடைந்திருக்கும். இப்பொழுது கைவசம் உள்ள நீரை கணக்கில் கொண்டு கடைமடைப் பகுதிகளுக்கு முன்னுரிமை அளித்துக் கல்லணையில் இருந்து தண்ணீர் திறந்து விடப்படுகிறது. இதன் மூலமாக குறுவைப் பயிர்களைக் காப்பாற்றுவது என்பது 'கிட்னி' செயல்படாமல் போய்விட்ட ஓர் உடலுக்கு 'டயாலிசிஸ்' செய்து உயிர்ப் பாதுகாப்பு செய்வதற்குச் சமம். தர வேண்டிய தண்ணீரை கர்நாடகம் கொடுக்கத் தவறி விட்டால் தமிழ்நாடு அரசு எடுத்துள்ள அவசர கால செயல் திட்டங்கள் வீணாகி, குறுவை மகசூலை அடைய முடியாமல் அனைத்தும் பலனின்றிப் போய்விடும் அபாயமும் உள்ளது" என்று நம்மிடம் சொல்கிறார் மன்னார்குடி எஸ். ரெங்கனாதன்.

இரண்டு லட்சம் ஏக்கரில் குறுவை நெற்பயிர் சாகுபடி செய்யப்பட்டுள்ளது. இதில் 20,000 ஏக்கர் அறுவடை ஆகும் தறுவாயில் உள்ளது. இருபதினாயிரம் ஏக்கர் குறுவை நெற்பயிருக்கு இன்னும் இரண்டு அல்லது ஒருமுறைக்கான தண்ணீர் விட்டாக வேண்டும்.

விழித்துக் கொண்ட அரசின் செயல்பாடுகளினால் அந்த 20,000 ஏக்கர் குறுவை அறுவடை அரங்கேற்றம் ஆகிவிடும்.

மீதமுள்ள ஒரு லட்சத்து அறுபதினாயிரம் ஏக்கருக்கு இன்னும் மூன்று அல்லது நான்கு முறைகளில் தண்ணீர் விட்டாக வேண்டும் என்கின்றனர் விவசாயிகள். மேட்டூர் அணையின் கையிருப்பு இதற்குப் போதாது. கர்நாடகம்தான் கண் திறக்க வேண்டும்.

இல்லையேல், ஒரு லட்சத்து அறுபதினாயிரம் ஏக்கர் குறுவைப் பயிர்கள் குற்றுயிரும் குலையுயிருமாகப் போய்விடும். அடுத்து வரும் தாளடியோ தவிடுபொடியாகி விடும்.

நம்மிடம் பேசிக் கொண்டிருந்த அரசியல் கட்சிப் பிரமுகர் ஒருவர், "மழை நல்லாப் பெய்யணும்ன்னு ஆண்டவனை வழிபடுறதத் தவிர வேற வழி இல்லைங்க இப்போதைக்கு" என்றார் நம்மிடம்.

ஆண்டவனை நம்பிக் கொண்டிருப்பதா அல்லது ஆண்டு கொண்டிருப்பவர்களை (மத்திய, மாநில அரசுகளை) நம்புவதா என திகைத்துப் போயிருக்கின்றனர் தஞ்சை, நாகை, திருவாரூர் மாவட்ட விவசாயிகள்.

**— ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**

மும்பை மசாலா :

## சரித்திரம் மாறுமோ?

சத்ரபதி சிவாஜி தன்னை எதிர்த்து நின்றவர்களைத் தீர்த்துக் கட்டியபோது சரித்திரம் பாராட்டியதே என்று, பாவம், அவர் வழித்தோன்றலான உதயன் ராஜே போன்ஸ்லே தன் எதிரியான ஷரத் லெவே (NCP) வை முடித்து விட்டிருக்கிறார்! ஆனால் இவரை இப்படி அநியாயமாக ஜெயிலில் அடைத்திருக்கிறார்களே? (உடனே மார்வலி என்று ஆசுபத்திரியில் 'அட்மிட்' ஆகிவிட்டது வேறு விஷயம்.) இவர் பி.ஜே.பிகாரர் என்பதால், முண்டேவுக்கு பெருத்த தலைவலியாகி விட்டது; வழக்கின் முடிவு தெரியும் வரை (தேர்தல் முடிவு வரும்வரை என்றும் படிக்கலாம்) உதயன் ராஜேவை குற்றமற்றவராகத்தான் பார்க்க வேண்டும் என சமாளித்திருக்கிறார். சிவசேனையும் உதவிக் கரம் நீட்ட மறுக்கிறது. அவர்கள் ஆதரித்த பாபன்ராவ் கோலப், வங்கி ஊழல் வழக்கில் கைதான போது, பி.ஜே.பிகாரர்கள் குய்யோ முறையோ என்று அடித்துக் கொண்டார்களே? கோலப்பை தாங்கள் கட்சி நீக்கம் செய்தது போல் போலஸ் லேவையும் அவர்கள் நிராகரிக்க வேண்டும் என்றுதான் எதிர்பார்க்கிறார்கள். ஹூம்... எதிரியை முறியடித்ததற்கு சிவாஜி ராஜே சத்ரபதி ஆனார்; ஆனால் உதயன் ராஜேவுக்கோ இருப்பதும் (இவர் முன்னாள் மத்திய ரெவின்யூ மினிஸ்டர்) போய்விடும் போலிருக்கிறதே!

## காத்துக் கிடப்பதில் சுகம் உண்டா?

மகாராஷ்ட்ராவில் செப்-11 தேர்தல் முடிந்து விட்டது; ஆனாலும் முடிவுகள் அறிவிக்கப்படும் வரை, "எலெக்ஷன் கோட் ஆஃப் கான்டக்ட்" இருக்குமாமே? அமைச்சர்களுக்கும் அரசியல் பெருந்தலைகளுக்கும் தான் எத்துணை கஷ்டம்? தூர்தர்ஷனில் முகம் காட்ட முடியாது; விழாக்களில் சாமானியரோடு அமர்ந்து கொள்ள வேண்டும்; எதையும் 'திறந்து' வைத்து, ரிப்பன் கத்திரித்து, மாலை மரியாதைகளை ஏற்றுக் கொள்ள முடியாது; சொந்தக் காரிலேயே வேறு போய்த் தொலைக்க வேண்டும்... என்ன செய்வதென்று தெரியாமல் ராணே, மும்பையிலுள்ள கணேஷ் பந்தல்களை எல்லாம் விசிட் அடிக்கக் கிளம்பி விட்டார். முண்டே, தமது மனைவியின் பிறந்த நாளுக்குப் பரி




• ஆதி அந்தப் பிரபு...

சளிக்க, நல்ல புடைவைக் கடைகளை தன் மகளுடன் முற்றுகையிடத் துவங்கியுள்ளார். ஏனைய

## 'டைம்பாஸ்'

மாநிலங்களில் பணமும், மது வகைகளும் பிரசார காலத்தில் தண்ணீராய் செலவழிவதைக் கண்டு பெருமூச்சு விட்டுக் கொண்டிருக்கின்றனர் வேறு சில அமைச்சர்கள். இவர்கள் இப்படி 'டைம் பாஸ்' செய்வது பொறுக்காமல், சீஃப் செக்ரட்டரி போங்கிர்வார், தேர்தல் தலைமைக் கமிஷனர் கில்லுக்கு மனுப் போட்டிருக்கிறார் – மகாராஷ்ட்ரத்திலாவது தேர்தல் விதிகளைத் தளர்த்தும்படி. என்னமோ 'ஹங் ஹவுஸ்' அது இதென்று பயமுறுத்துகிறார்களே? முடிவுகள் வரும் வரையிலாவது வி.ஐ.பி. ஸ்டேடஸை அனுபவித்து விட்டுப் போகட்டுமே என்ற நல்ல எண்ணம்தான்!

### அஞ்சுக்கு அஞ்சி...

**மா**வீரனின் பெயரை வைத்துக் கொண்டு இப்படி ஒரு கோழைத்தனமான செயலில் ஈடுபடுவான் என யார் நினைத் தார்கள்? சிவாஜி காம்ப்லே, 11 வயதே நிரம் பியவன்; மலாடில், தான் வசிக்கும் பேட் டையில், அடுத்த வீட்டுப் பெண்ணான சுனிதா ஜோதாரே (14)வுடன் காதல் ராஜ்ஜி யம் அமைக்கும் அளவுக்கு முன்னேறியவன். ஆனால் அது ஒருதலைபட்சக் காதல் என்று தெரிந்தவுடன், சுனிதா மீது மண்ணெண் ணெய் ஊற்றிக் கொளுத்தி விட்டான். அந்தக் குடியிருப்புகளிலிருந்த தண்ணீர்க் கஷ்டம் வேறு அக்கம் பக்கத்திலிருந்தவர்களுக்கு, உத வித் தடையாகிவிட்டது. ஆனால் உயிர் பிரியு முன், சிவாஜியை போலீசுக்குக் காட்டிக் கொடுத்து விட்டாள் சுனிதா. இருந்தும் என்ன? 16 வயது கூட ஆகாததால், சிவா ஜியை ஒரு "வார்னிங்" கொடுத்து விட்டு விடப் போகிறார்கள்! திட்டமிட்டு கொலை செய்யுமளவுக்கு முதிர்ச்சியுள்ள ஒருவனை 'குழந்தை'யாகப் பாவிப்பது அபத்தம் என்பது ஒரு பக்கக் குமுறலாயிருக்க, இவன் 16 வயதை அடைவதற்கு இன்னும் 5 வருடங்கள் பாக்கியிருக்கின்றனவே என்ற கிலி மறுபக்க பயங்கரமாய் பயமுறுத்துகிறதே!

### சிவ சிவா...ஜி!

**சி**வாஜி மகாராஜாவை "இந்துத்வத்தை" நிலைநாட்டிய மகாபுருஷராக சிவசேனையும் பிஜேபியும் பிரகடனப்படுத்திக் கொண் டிருக்க, "இந்துத்வமா? சிவாஜிக்கும் அதற்கும் சம்பந்தமேயில்லை" என்று ஒரு புது வாதத் தைக் கிளப்பியிருக்கிறார் சரித்திர ஆராய்ச்சி யாளரான ஷரத் பாடீல்! "சிவாஜிக்கு ஆசார அனுஷ்டானங்களும், உயர்ஜாதிக் கொள்கை களும் பிடிக்கவேயில்லை; அவர் ராய்கட்டில் ராஜ்யாபிஷேகம் செய்து கொண்டதை யடுத்து, இன்னொரு இரகசிய மகுடாபிஷே கத்தை, சாக்த முறைப்படி செய்து கொண் டார். சாக்தர்கள் உயர்ஜாதி இந்துக்களை வெறுத்தவர்கள்; சிவாஜி, ஒரு தலித் பெண் ணையும் மணமுடித்திருக்கிறார். அவர் மகன் சம்பாஜியும் தாழ்த்தப்பட்டவர் இனத்துடன் ஒன்றி, மணமும் புரிந்திருக்கிறார். இதனா லெல்லாம் எரிச்சலடைந்த உயர்ஜாதியினர், சிவாஜியை விஷம் வைத்துக் கொன்று விட்ட னர். அவர் வயிற்று வலியாலெல்லாம் மரிக்க வில்லை" என்று புதுக் குழப்பத்தை கிளப்பி யிருக்கிறார். இந்த ஜாதிக் குப்பைகளைக் கிளறுவதை விட்டு விட்டு, கப்பற்படை, கோட்டைகள், கொரில்லாப் போர்முறை என, நாட்டின் பாதுகாப்புக்கு அவர் எடுத் துக் கொண்ட முயற்சிகளை ஆராய்ந்தால், மீண்டுமொரு கார்கில் சூழ்நிலை உருவாவ தையாவது தடுக்கலாமில்லையா?

### கணாஞ்சநேயர்

**பி**ள்ளையாருக்கு தன் 'ட்ரேட் மார்க்'கு கள் என்ன என்பது மறந்து விடுமளவுக்கு அவரை, ஒரு வழி பண்ணி வைப்பது, கணபதி உற்சவங்களின் போது, சகஜமாகி விட்டது! முண்டாசு கட்டி, தாடி வளர்த் திருக்கும் சாயிபாபா பிள்ளையார்; நீலமேனி யுடன் நாமமிட்டு, சங்கு சக்ரதாரியாக பாலாஜி பிள்ளையார்; கையில் வேலேந்தி, மயில் வாகனராயிருக்கும் முருகப் பிள்ளை யார்... இப்படி எவ்வளவோ... ஆனால் இம்முறை கேத்வாடியில் நின்றிருந்த 36 அடிப் பிள்ளையார்; (இந்த சீசனின் 'உயர்ந்தவர்' இவர்தான்) ஆளை அசத்தி விட்டார். கொஞ் சம் யானை முகம், கொஞ்சம் வானர முகம்; ஒரு பக்கம் யானைக் காது, மறுபக்கம் வானரக் காது; வலப்புறம் தும்பிக்கை; இடப் புறம் மூக்கு வாய், கதை ஏந்திய கரம். ஒரு பாதி பானை வயிறு, மறுபாதி ஒட்டிய வயிறு... 'ஆதி அந்தப் பிரபு' என்ற நாமகர ணம்! (சென்னை, அடையாறிலும் இதே தோற்றத்தில் இருந்தாராமே?) வர இருக்கும் உற்சவங்களில் இன்னும் என்னென்ன அவதாரங்களெல்லாம் எடுப்பாரோ?

# செய்யும் மகாராஷ்டிரா அமைச்சர்கள்!

— ஜெயஸ்ரீ ராஜ்

"எனக்கு சொந்த ஊர் திருவண்ணாமலைக்குப் பக்கத்திலுள்ள 'நெய்வாநத்தம்' என்ற கிராமம். நான் ஏழை விவசாயக் குடும்பத்தைச் சேர்ந்தவன். நான்தான் குடும்பத்தின் மூத்த பிள்ளை. எனக்கு இரண்டு தங்கைகள், ஒரு தம்பி.

என் அப்பா ஒரு சோக்காளி. கொஞ்சம் ஜாலியாக இருப்பார். குடும்பத்தில் கவனம் செலுத்தாமல் அவர் போக்கில் இருந்தார். என் அம்மா எங்கள் குடும்பத்தை நான்தான் முன்னுக்குக் கொண்டு வருவேன் என்று நம்பினார்கள். எங்களுக்கிருக்கும் குறைந்த சொத்தில் ஒரு பகுதியை விற்று, என்னைப் படிக்க வைத்தார்கள். நானும் நன்றாகத்தான் படித்தேன். உயர்நிலைப் பள்ளி இறுதிப் பரீட்சையில், பள்ளியிலேயே இரண்டாவது மாணவனாகத்

## மறுபிறவி

# இயக்குநர் வி. சேகர்

தேறினேன். பிறகு திருவண்ணாமலை கல்லூரியில் பி.யூ.சி. சேர்ந்தேன்.

நான் கிராமத்திலிருந்து வந்தவன். ஒரு நகரச் சூழல் எனக்குப் புதிதாக இருந்தது. கல்லூரி என்பது பள்ளிக்கூடம் மாதிரியில்லை. பள்ளியில் ஒருநாள் லீவு போட்டால், ஆசிரியர்கள் 'ஏன்? எதற்கு?' என்று குடைந்து எடுத்து விடுவார்கள். ஆனால், கல்லூரியில் எத்தனை நாட்கள் போகாவிட்டாலும் ஏனென்று கேட்க மாட்டார்கள்.

அப்போது நான் திருவண்ணாமலையில் ஒரு ரூம் எடுத்துத் தங்கியிருந்தேன். ஓட்டலில்தான் சாப்பாடு. நண்பர்கள் பத்துப் பேர் ஒன்றாக இருப்போம். அப்போது பிரபல ஹீரோ ஒருவரின் தீவிர ரசிகன் நான். என் நண்பர்களும் அப்படித்தான். போட்டி போட்டுக் கொண்டு சினிமா பார்ப்போம். ரசிகர் மன்றத்தில் மும்முரமாய் ஈடுபட்டேன். என் அபிமான நடிகருக்காக, ரசிகர் மன்றம் ஏற்பாடு செய்திருந்த லாரியில் ஏறி பிரசாரத்திற்கெல்லாம் (அரசியல்) போவேன். சினிமா என்னைப் பிடித்து ஆட்டியது. விளைவு? பி.யூ.சி.யில் மூன்று பாடங்கள் அவுட். பள்ளியில் இரண்டாவது மாணவனாக வந்த நான், ஃபெயிலாகி வீட்டுக்குத் திரும்பினேன். என் அம்மா கண்ணீர் விட்டார்கள். 'யூ டூ புரூட்டஸ்' என்கிற மாதிரி என்னைப் பார்த்தார்கள். என்னிடம், "உங்க அப்பாதான் இப்படி ஆய்ட்டாரு. நீயாவது சரியா இருப்பே, ஏழ்மைல இருக்கற குடும்பம் உன்னால முன்னுக்கு வரும்னு நெனைச்சேன். இப்போ அந்த நம்பிக்கையே இல்லாம போச்சே" என்று சொல்லி அழ ஆரம்பித்தார்கள். அப்போதுதான் நான்



குடும்பத்தைப் பற்றி நினைக்க ஆரம்பித்தேன்.

அக்கம் பக்கத்திலிருக்கும் யார் முகத்திலும் முழிக்கவே வெட்கமாய் இருந்தது. எல்லோரும் என் அம்மாவிடம், 'பெரிய இன்ஜினீயராவான்னு சொன்னீங்களே, ஃபெயிலாயிட்டானே' என்று கேட்க ஆரம்பித்து விட்டார்கள். அப்போதுதான் எனக்குள் ஒரு வைராக்கியம் தோன்ற ஆரம்பித்தது. 'பெரிய ஆளாக வளர்ந்த பிறகுதான் ஊருக்குத் திரும்புவேன்' என்ற முடிவுடன் சென்னைக்கு ஓடி வந்தேன். பத்து வருடங்கள் சினிமாவே பார்க்காமல் இருந்தேன். பார்க்க வேண்டிய சூழ்நிலைகளைத் தவிர்த்தேன். அப்பொழுதெல்லாம், சினிமா என்பது இளைஞர்களை இழுத்து, கெடுக்கிறது என்பது என் திடமான அபிப்ராயமாய் இருந்தது. நான் சினிமா பக்கமே திரும்பவில்லை.

# "இன்ஜினீயராக வேண்டியவன் இயக்குநரானேன்"

அப்போது நான் சென்னை மாநகராட்சியில் மலேரியா இன்ஸ்பெக்டராக வேலை பார்த்து வந்தேன். வருமானம் போதவில்லை. நினைத்தபடி ஓர் இன்ஜினீயராக ஆகி இருந்தால், இவ்வளவு கஷ்டம் இருக்காதே என்று தோன்றும்.

ஒருநாள் எடிட்டர் பி.லெனின் என்னை சினிமாவில் பணியாற்ற அழைத்தார். நான் மறுத்தேன். சினிமாவால்தான் நான் வாழ்க்கையில் கெட்டுப் போனேன் என்பதைச் சொன்னேன். லெனின் சொன்னார், "சினிமா யாரையும் கெடுப்பதில்லை. சினிமாவுக்குப் போய், அதைக் கையில் எடுப்பவன்தான் சினிமாவைக் கெடுக்கிறான்" என்று. அந்தக் காலத்தில் பீம்சிங், ஏ.பி. நாகராஜன் போன்ற இயக்குனர்களெல்லாம் எப்படி நல்ல விஷயங்களை மக்களிடம் கொண்டு சென்றார்கள என்பதை எடுத்துச் சொன்னார். நல்ல சினிமா எடுத்தால், மக்களுக்கு நல்லது பண்ணலாம் என்று சொன்னார். நான் அவரிடம் உதவி எடிட்டராக வேலைக்குச் சேர்ந்து இரண்டு வருடம் பணியாற்றினேன். பிறகு, பாக்யராஜிடம் இரண்டு வருடம் உதவியாளராக இருந்தேன்.

அன்றைக்கு இருந்த பெரிய ஹீரோக்களின் ரசிகர்கள், ரசிகர் மன்றங்களில் சேர்ந்து, படிப்பைக் கெடுத்துக் கொண்டதை மையமாக வைத்து, 'நீங்களும் ஹீரோதான்' என்ற படம் எடுத்தேன். சினிமாவை சினிமாவாகப் பார்க்க வேண்டும் என்பதுதான் அதன் மையக் கரு.

இன்றைக்கு பதின்மூன்று படங்கள் பண்ணி விட்டேன். ஓரளவிற்கு மெஸேஜ் சொல்கிற டைரக்டர் என்ற பெயரும் வாங்கி விட்டேன். ஒருநாள் என் தாயார் சொன்னார்கள். 'சினிமாவால ரொம்ப பாதிக்கப்பட்டு இன்ஜினீயராகாம கெட்டுப் போனே. ஆனா, இப்போ அதே சினிமாவுல்யே பெரிய இயக்குநராய்ட்டே. இது ஒரு மறுபிறவி" என்று சொன்னார்கள்– இதை நான் வெறும் 'மறுபிறவி' என்று சொன்னால் மூடநம்பிக்கை ஆகிவிடும். இதை 'மறுபிறவி' என்று சொல்வதை விட பழைமைவாதிகளுக்கு இது மறுபிறவி, பகுத்தறிவுவாதிகளுக்கு விடாமுயற்சியால் கிடைத்த வெற்றி என்று சொல்லலாம்.

சந்திப்பு : **கே. பாலசுப்ரமணியன்**

படம் : **ஸ்ரீஹரி**

மதுரையிலுள்ள டால்பின் பள்ளியில் ஆசிரியர்களுக்கே போட்டி வைத்துப் பரிசுகள் கொடுத்து வருகிறார்கள். 'சூரியனுக்கே டார்ச்சா?' டைப்பில்!

ஆசிரியர் தினத்தன்று நடக்கும் இந்தப் போட்டிகளில் கலந்து கொள்ள மதுரையின் 35 பள்ளிகளிலுமுள்ள ஆசிரியர்களும் ஆசிரியைகளும் குவிந்து விடுகிறார்கள்.

இந்த ஆண்டு, தேர்தலை ஒட்டி இந்தப் போட்டிகள் நடந்ததால் 'நாட்டு நடப்பு' என்று ஒரு போட்டி வைத்திருந்தார்கள். அதில் ஒரு கேள்வி: "செப்டெம்பர் 5ம் தேதி தமிழ்நாட்டில் மொத்தம் எத்தனை தொகுதிகளுக்குத் தேர்தல் நடக்கிறது?"

ஓர் ஆசிரியர் நம்மிடம் வந்து, "எத்தனை தொகுதிகளுக்கு சார் தேர்தல் நடக்குது?" என்று கேட்டார்.

"ஹலோ அவரு ரிப்போர்ட்டரு. 'ஆசிரியரே பிட் அடிக்கிறார்'னு நியூஸ் போட்டுடுவார்" என்று அவருடைய நண்பர் சொன்னதும் இடத்தைக் காலி செய்தார்.



• காய்கறி பொம்மை

# துரோணாசார்யர்களின் சந்திப்பு!

பலர் கூடிக் கலந்து, நாற்பதா? இல்லையே... பாண்டிச்சேரி தனியாச்சே... என்றெல்லாம் டிஸ்கஸ் செய்து "19 தொகுதிகள்" என்கிற முடிவுக்கு வந்தார்கள்.

காய்கறி அலங்காரம் என்பது பெண்களுக்கு மட்டும் சொந்தமா என்ன? என்று ஆண்களுக்குச் 'சம உரிமை' கேட்டு பெற்ற டி.வி.எஸ். பள்ளி ராஜ்குமார் மூன்றாவது பரிசு பெற்றார். புடலங்காய்களை கொம்புகளாகவும், தக்காளியைக் கண்களாகவும், வாயாகவும், முட்டைக்கோசை முகமாகவும், காரட்டுகளை பற்களாகவும் வைத்து உருவம் அமைத்து அங்கிருந்த பெண் ஆசிரியைகளையே அசத்தி விட்டார்.

'சினி க்விஸ்'ஸில் மாணவர்களை விட அதிக செய்திகளை ஆசிரியர்கள் தெரிந்து வைத்திருப்பதைக் காண முடிந்தது. வராத

• காய்கறி அலங்காரம்



படங்களின் பெயர்கள் எல்லாம் வகுப்புக்கு வராத மாணவர்களின் பெயர்களைப் போல் இவர்களுக்கு மனப்பாடமாக இருந்தது. 'நெஞ்சினிலே' படத்தை மௌன நடிப்பின் மூலம் கொண்டு வருவதற்குள் ஓர் ஆசிரியை சகல கலைகளையும் மேடையில் நடித்துக் காட்ட வேண்டியிருந்தது. அப்படியிருந்தும் குறிப்பிட்ட நேரத்துக்குள் அந்த பதிலை அவர்கள் குழுவிடமிருந்து வாங்க முடியவில்லையென்பதுதான் சோகம்.



• கவிதை எழுதுகிறார்கள்...

பரீட்சை எழுதுவதைப் போல சீரியசாக ஆசிரியர்கள் பேனாவோடும் பேப்பரோடும் ஓர் அறையில் 'கவிதை' வடித்துக்கொண்டிருந்தார்கள். 'குயிலப் புடிச்சுக் கூண்டிலடச்சு பாடச் சொல்லுகிற உலகம்' என்று சக ஆசிரியர்களின் கிண்டல்களையெல்லாம் புறந்தள்ளி, பெஞ்சிலமர்ந்து, இயற்கையாக வர வேண்டிய கவிதையை செயற்கையாக யோசித்து யோசித்து எழுதியது புதுமையாக இருந்தது!

மோனோ ஆக்ட்டிங், பூ அலங்காரங்கள், மெல்லிசை, பாட்டுக்குப் பாட்டு, கேலிச் சித்திரம் என்று எத்தனையோ போட்டிகள் இருந்தாலும் 'நாட்டுப் புற நடன போட்டி' தான் எல்லோருடைய கவனத்தையும் கவர்ந்தது.



• மோனோ ஆக்டிங்

விஜயலட்சுமி நவநீதகிருஷ்ணன், தேக்கம்பட்டி சுந்தர்ராஜன், புஷ்பவனம் குப்புசாமி பாடல்களுக்கு ஆசிரிய – ஆசிரியைகள் மேடையில் ஆடியபோது, "உங்க ஸ்டூடன்ட்ஸ் இதைப் பார்த்தா எப்படி இருக்கும்?" என்று கமெண்ட் அடித்த ஆசிரியர், மாணவர்களுக்கு ரொம்ப பயப்படுவார் போலத் தெரிந்தது.

பரிசளிப்பு விழாவில் பேசிய பேராசிரியர் இரா. மோகன், "புதுமையான விஷயங்களுக்கு எப்போதும் ஆதரவு தர வேண்டும். அதுவும் பாஸிடிவ்வா இருந்தா ரொம்ப பலமா ஆதரிக்கணும். எம்.ஜி.ஆர். பாட்டைப் பாருங்க. ரொம்ப பாசிடிவ்வா இருக்கும்.... 'நாளை உலகை ஆள வேண்டும்' 'மாபெரும் சபைதனில் நீ நடந்தால் உனக்கு மாலைகள் விழ வேண்டும்'னு எல்லாம் பாடுவார். சிவாஜி பாட்டோ 'ஏன் பிறந்தாய் மகனே'னு இருக்கும். எம்.ஜி.ஆர். 'நல்ல நல்ல பிள்ளைகளை நம்பி'னு பாடுவார்" என்று பேசி ஆசிரிய ஆசிரியைகளுக்கு நம்பிக்கை யூட்டினார்.

92ம் வருடத்திலிருந்து இந்த துரோணாச்சாரியார் சந்திப்பை நடத்தி வரும் டால்பின் பள்ளி தாளாளர் ராமனாதன், "இதை விரைவில் சென்னை, திருச்சி, கோயம்புத்தூர் நகரங்களில் நடத்துகிற எண்ணமும் இருக்கிறது!" என்றார்.

— பழ. **சேதுராமன்**

படங்கள்: **சார்லஸ்**



## சுமி சூப்பர்மார்க்கெட்

திருப்பதி பிரும்மோற்சவத்தை டீவில பார்த்தேன் – அப்பப்ப. பக்தர்கள் சௌகரியத்துக்காக பகவானே ஸாடிலைட் ஏறி, டிராயிங் ரூம் வரைக்கும் வர ஆரம்பிச்சுட்ட காலத்துலேயும் அங்க கூட்டம் ஒரு லட்சமாம். டைட் க்ளோஸப்ல உற்சவரைக் காட்டும்போதெல்லாம் தீவிர பக்தர்கள் இங்க கன்னத்துல போட்டுக்கறதையும் ஒனிடாவை விழுந்து சேவிக்கறதையும் பார்க்கறதுக்கு வித்தியாசமா இருக்கு. எங்க பக்கத்து வீட்டுக்காரர் ஒரு ஸ்டெப் மேல போயி, கற்பூர ஆரத்தியெல்லாம் காட்டிட்டார், டீ.வி.க்கு.

டெலிகாஸ்ட் விஷயத்துல 'சன்'னுக்கும் 'ஜெயா'வுக்கும்தான் குடுமிப்பிடி போட்டி. இவங்க ஸ்பீடுக்கு தெலுகு டிடியால போட்டி போட முடியலை. ப்ரைவேட் சானல்ஸுக்கு என்ன ஒரு சௌகர்யம்னா, ப்ரோக்ராமை போரடிக்காம காட்ட சில எக்ஸ்ட்ரா ஃபிட்டிங்ஸ் சேர்த்துக்க முடியறதுதான். 'சன்'ல பழைய பக்திப்பட பாட்டெல்லாம்கூட சேர்ந்து பவனி வந்தது கொஞ்சம் ஓவர். சமயத்துல 'மூட்' ஸ்பாயில் பண்றாப்பல கூட இருந்தது.

# ஜெயாவுக்கே முதல் மார்க்!

ஜெயால படு பயங்கர ப்ளானிங் தெரிஞ்சது. உருக்கமான வர்ணனை வேற. ஸ்கிரிப்ட் கொஞ்சம் சொதப்பல்னாலும் படிச்ச விதத்துல நல்ல பக்தி பாவம் காட்டிட்டாங்க. க்ளாரிடிலேருந்து சகல விஷயத்திலும் – இந்த நிகழ்ச்சியைப் பொறுத்தவரைக்கும் ஃபர்ஸ்ட் மார்க் ஜெயாவுக்குத்தான் கொடுப்பேன்.

● ● ●


• தி.க.சி.


• வண்ணதாசன்

உங்களுக்கு ஒரு பேங்க்ல வேலை கிடைக்கறது. கூடவே ஒரு பத்திரிகைலேயும் வேலை கிடைக்குது. எதை எடுத்துப்பீங்க?

நீங்க ஒரு பிரபல சினிமா க்ரிடிக். அந்த ஃபீல்டுல பலருக்கு சிம்ம சொப்பனமா இருக்கீங்க. திடீர்னு அதை விட்டுட்டு டோட்டலி நியூ ஃபீல்டு ஒண்ணு – ஸே, லிட்ரரி க்ரிடிஸிஸம் – அதுக்கு வந்துடுன்னு ஒருத்தர் கூப்பிடறார். புதுசா பிள்ளையார் சுழிலேருந்து ஆரம்பிக்கணும்; வருமானம்ங்கற பேச்சே கிடையாது. வருவீங்களா?

வாழ்க்கைக்கு ஓர் உயர்ந்த நோக்கம் வேணும்ங்கற முடிவோட செயல்படறவங்கதான் இது மாதிரியெல்லாம் போல்டா முடிவெடுப்பாங்க.

விமர்சகர் தி.க.சி. யோட வாழ்க்கை வரலாறு (தி.க.சி என்னுமொரு திறனாய்வுத் தென்றல், நர்மதா பதிப்பகம், சென்னை – 17) புஸ்தகம் வந்திருக்கு. பாரபட்சமில்லாத விமர்சனத்தைத் துணிச்சலா வெளிப்படுத்த அவர் மனசு எப்படிப் பக்குவப்பட்டதுங்கறதை இள வயசுக் காலத்துச் சம்பவங்கள்லேருந்து படிப்படியா, ரொம்ப அழகா தொடுத்துத் தந்திருக்கார் மு. பரமசிவம். (பரமசிவத்தோட விந்தன் வாழ்க்கை வரலாறு புஸ்தகம் இதே மாதிரி படு சுவாரசியமானது) 'தாமரை' ஆசிரியரா இருந்தபோது தமிழிலக்கியத்துக்கு தி.க.சி செய்திருக்கற தொண்டு ரொம்ப ஜாஸ்தி. ஒரு எக்ஸ்போர்ட் கம்பெனி அட்டெண்டன்ஸ் ரிஜிஸ்தர் பட்டியல் அளவுக்கு அவர் உருவாக்கியிருக்கிற ரைட்டர்ஸ் இன்னிக்குப் பெரிய ஆளாயிருக்காங்க.

இன்னிக்கும் அதே உற்சாகத்தோட அவர் எழுதிட்டிருக்கார்; செயல்பட்டுட்டிருக்கார்ங்கறதுதான் முக்கியமான விஷயம்.

சிறுகதைகள், சில கவிதைகள்கூட முயற்சி பண்ணியிருந்தாலும் தி.க.சின்னதும் ஞாபகத்துக்கு வர்றது அந்த அழுத்தமான விமர்சன முத்திரைகள்தான்.

தி.க.சியின் படைப்புகள் சில புஸ்தகமா வந்திருக்கு. அந்த விவரங்களை இந்தப் புஸ்தகத்துல தந்திருக்கலாம். நண்பர்களுக்கு அவர் எழுதின பல பிரசித்தி பெற்ற கடிதங்களைக் கேட்டு வாங்கிச் சேர்த்திருக்கலாம். இந்தக் குறைகளை மீறியும் இது ஒரு முக்கியமான புஸ்தகம்.

பை த வே, தி.க.சி.யோட படைப்புகள்ல எனக்கு ரொம்பப் பிடிச்சது வண்ண தாசன்.

— சுமி

# நீங்களும் கோடீஸ்வரர் ஆகலாம்

ஆம்! அதிர்ஷ்டமான பெயர் அமைத்தால் நீங்களும் கோடீஸ்வரர் ஆகலாம். பணம், பதவி, புகழ், யாவும் கிட்டும் வெற்றிமேல் வெற்றிகளைக் குவிப்பீர்கள். இவ்வுலகில் அனுபவிக்கத்தக்க அனைத்து சுகபோகங்களையும் அனுபவிக்கலாம் என்று ஆணித்தரமாக அடித்துக் கூறுகிறார் கோவை மாவட்டம் அன்னூர், பு.புளி யம்பட்டி அருகில் உள்ள கனுவக்கரையில் வசிக்கும் ஜோதிட விஞ்ஞானி கே.ஆர். பிரபாகர்ராஜ் அவர்கள். இவரது கருத்துக்கள் பின்வருமாறு:-



ஒரு மனிதனின் வெற்றிக்கும் தோல்விக்கும் மூலகாரணமாக இருப்பது பெயரும் கையெழுத்துமே ஆகும். ஒரு வருடைய பெயரை முழுவதுமாக மாற்றத் தேவை இல்லை. சிறு திருத்தம் மட்டும் செய்தால் போதும் அதிர்ஷ்டப் பெயரால் மனித வாழ்வில் ஏற்படும் அனைத்துப் பிரச்சினைகளுக்கும் மிக நல்ல முறையில் தீர்வுகாண முடியும்.

அதிர்ஷ்டப் பெயர் அமைக்க நியூமராலஜி, நேமாலஜி, சைன் தொழில் வசியம் சிக்னேச்சராலஜி பெயர் வசியம், ஆர்க்கோலஜி, கிராபாலஜி, ப்யூசராலஜி போன்ற 9 வகையான காரணிகளையும் 12 வகையான இயக்கங்களையும் ஆதாரமாக வைத்து பெயர் சூட்டினால் பிரபலம் உண்டாகும். இது பூரணமாக விஞ்ஞானத்தை அடிப்படையாகக் கொண்ட சாஸ்திரமாகும். அதிர்ஷ்டப் பெயர் எண் சாஸ்திரப்படி முறையாகப் பெயரை மாற்றினால் உடனே அதிர்ஷ்டம் உண்டாகும்.

அதிர்ஷ்டப் பெயரை அமைத்துக் கொண்டால் அன்பான மனைவி (நல்ல கணவர்) அறிவுள்ள குழந்தைகள் வசதிமிக்க வீடு, வளமான தொழில், குறைவில்லாச் செல்வம் ஆரோக்கியமான உடல், இன்பகரமான வாழ்வு அனைத்து அதிர்ஷ்டங்களையும் அள்ளித் தரும். தொழில் முடக்கம் வியாபார மந்தம் உத்தியோகத்தில் இடையூறு, கணவன் மனைவியர்க்கிடையே ஒற்றுமை இல்லாமை, செக்ஸ் கோளாறு, மனக்குழப்பம், போதைப் பொருளுக்கு அடிமை ஆகுதல்.

செய்வினை மாந்திரீக பாதிப்பு தீய சக்தியால் பாதிப்பு திருமணத்தடை குழந்தைபாக்கியம் இல்லாமை, முன்னேற்ற தடை, புகழ் இல்லாமை, மனநோய் போன்ற எண்ணற்ற வாழ்க்கைப் பிரச்சினைகளுக்கும் இக்கலையின் மூலம் நிரந்தரத் தீர்வுகாண முடியும்.

பெயர் மாற்றத்தால் பெருஞ்செல்வர் ஆகலாம். பெயரை எந்த வயதிலும் அதிர்ஷ்டமாக மாற்றி வெற்றிகளைப் பெறலாம். முறையாகப் பெயர் அமைத்தால் முன்னேற்றம் உண்டாகும். சிலர் கடைகளில் விற்கும் பல வகையான புத்தகங்களை வாங்கி தாங்களே பெயர் மாற்றி குழம்பி வாழ்வில் பெருந்துன்பத்தை அடைந்தவர்கள் ஏராளம். RAJINI KANT (ரஜினிகாந்த்) என்ற பெயரையோRAMBA (ரம்பா) என்ற பெயரையோ எல்லோரும் வைக்க முடியாது. இது பொருந்தி வருபவர்களுக்கு மட்டுமே வைக்க வேண்டும். அப்போதுதான் அதிர்ஷ்டம் தரும்.



VIJAY(விஜய்) என்ற பெயரையும் SIMRAN(சிம்ரன்) என்ற பெயரையும் ஆய்வு செய்தால் இதில் வசியம் இருக்கும். யாருக்கு எந்தப் பெயர் பொருந்தும் என்று நன்கு ஆய்வு செய்து பெயர் அமைத்தால் அதிர்ஷ்டம் உண்டாகும். செய்கின்ற தொழில் எதுவாக இருந்தாலும் அத் தொழிலில் வசியம் இருக்க வேண்டும். அப்படி தொழில் வசியம் இருந்தால்தான் தொழிலில் பெரும் பணம் சம்பாதிக்க முடியும்.

ஒரு மனிதனுக்கு விடாமுயற்சி, அயராத உழைப்பு, தர்ம குணம், தன்னம்பிக்கை போன்ற குணங்கள் இருந்தும் வாழ்வில் வெற்றி பெற முடியவில்லையெனில் அதிர்ஷ்டம் இல்லை என்பது நன்கு தெரிகிறது. இல்லாத அதிர்ஷ்டத்தை பெற இக்கலை வழிகாட்டும்.

ஜாதகம், கைரேகை, நாடி, வாஸ்து போன்ற ஜோதிடங்களை விட அதிர்ஷ்டப் பெயர் எண் ஜோதிடம் பல ஆயிரம் கோடி மடங்கு சக்தி வாய்ந்தது. என்னால் சவால்விட்டு நிரூபிக்க முடியும். இக்கலையின் மூலம் எம்மிடம் அதிர்ஷ்டப் பெயர் அமைத்தவர்கள் அனைவரும் இன்று வெற்றி பெற்றுக் கொண்டிருக்கிறார்கள். உடலின் காந்த சக்தி உயிர்ப்பு சக்திக்கு தக்கவாறு பெயரையும் கையெழுத்தையும் அமைத்தால் அபரிமிதமான அதிர்ஷ்டங்கள் கிட்டும்.





எம்.ஜி.ஆர்., சிவாஜி கணேசன், ரஜினி காந்த், பாக்கியராஜ், விஜய், சூர்யா, குஷ்பு, ரம்பா, சிம்ரன், ரோஜா, விஜயகாந்த் போன்ற சினிமா துறையினர்களும் பெயர் மாற்றத்திற்குப் பின்பு பிரபலமானவர்களே ஆகும். பெயரில் வசியம் கோபுராம்சம் இருக்க வேண்டும்.

அரசியலில் வெற்றி, சினிமாவில் புகழ், விளையாட்டில் சாதனை, தொழிலில் மேன்மைகிட்டும். அந்த கால இராஜ ராஜ சோழன், அக்பர், புத்தர், மகாவீரர், அசோகர், பொற்கை பாண்டியன், நெப்போலியன், பாரதியார், பாரதிதாசன், கண்ணதாசன், இந்திராகாந்தி, வீரமாமுனிவர், ஆதிசங்கர், காஞ்சி பெரியவர் போன்றோரும் பெயர் மாற்றத்திற்குப் பின்பு பிரபலமானவர்களே ஆகும்.

அதிர்ஷ்டப் பெயர் சாதாரண மனிதனையும் பெரிய சாதனையாளராக ஆக்கக் கூடியது. கையெழுத்தால் தலை எழுத்தை வெல்லலாம்.

ஆண்-பெண் எந்த தேதியில் பிறந்தவராக இருந்தாலும் அவர்கள் திருமணம் செய்த நாளின் கூட்டு எண், திருமணத் தேதி, மாதம், வருடம் மூன்றையும் கூட்டி வரும் எண் 2,4,5,7,8 வரும் நாளில் கண்டிப்பாக திருமணம் செய்யக் கூடாது. அப்படி செய்தால் சோதனைகளும், போராட்டங்களும் நடக்கும். இதிலிருந்து விடுபட மறு மாங்கல்ய பூஜை அதிர்ஷ்ட நாளில் செய்து கொண்டால் குடும்ப வாழ்க்கை சந்தோஷமுடனும், வெற்றியுடனும் இருக்கும்.

அதிர்ஷ்டப் பெயர், எண் சாஸ்திரம் எக்காலத்திலும் மாறாத சக்தி கொண்டது. பெயரையும் இடும் கையெழுத்தையும் வளமாக்கிக் கொண்டால் என்றென்றும் வெற்றிகள்தான். இக்கலையின் மூலம் நான் சவால்விட்டு நிரூபித்துக் காட்டிய அறிவியல் விஞ்ஞான சாஸ்திரமாகும்.

அதிர்ஷ்டப் பெயர் எண் சாஸ்திரப்படி பெயர் அமைத்தால் பதவி புகழ் உண்டாகும். வெற்றிகள் பல குவியும். நீங்களும் மிகப்பெரிய கோடீஸ்வரர் ஆகலாம்.

இவரது ''அதிர்ஷ்ட பெயர் எண் சாஸ்திரம்'' என்னும் புத்தகத்தை வாங்கிப் படித்து பயன் பெறுங்கள்.

# அந்த அமைச்சர் சொன்னதைக் கேட்டு அதிர்ந்து போனேன்!

**— தமிழகத் தலைமைத் தேர்தல் அதிகாரி நரேஷ்குப்தா**

**"நா**ன் வெகு சாதாரணமானவன். என்னைப் போல மாநிலத்துக்கு ஒருவர் இருக்கிறார். எனவே, என்னைப் பற்றிச் சொல்லிக் கொள்ள பெரிசாய் ஏதுமில்லை" என்கிறார் தமிழகத்தின் தலைமைத் தேர்தல் அதிகாரியான நரேஷ்குப்தா.

"அப்பாவின் விருப்பத்தின் பேரில்தான் ஐ.ஏ.எஸ். பரீட்சை எழுதினேன். நான் படித்தது எம்.எஸ்ஸி (கணிதம்). லக்னோ பல்கலைக்கழகத்தில் நாலு தங்கப் பதக்கம் பெற்றவன். கணிதத்திலேயே மேற்கொண்டு ஆராய்ச்சி செய்ய வேண்டும் என்பதுதான் என் விருப்பம். என் அப்பா, உ.பி. மாநில அரசாங்கத்தில், பிரிட்டிஷ் அதிகாரிகளிடம் உத்தியோகம் பார்த்தவர் என்பதால், அவருக்கு ஐ.ஏ.எஸ். மீது ஒருவித பற்று; மரியாதை.

''எனக்கு தமிழ்நாட்டில் போஸ்டிங் கிடைத்தபோது, என் அப்பாவுக்குக் கொஞ்சம் வருத்தம் ஏற்பட்டது. காரணம், நான் அதற்குமுன் தமிழ் நாட்டுக்கு வந்ததே கிடையாது. எங்கள் உறவினர்கள் யாரும் இங்கே இல்லை. பயிற்சி முடிந்து சென்னை சென்ட்ரல் ரயில் நிலையத்தில் வந்து இறங்கியபோது, கண்ணைக் கட்டிக் காட்டில் விட்டாற்போல இருந்தது. மொழிப் பிரச்னை வேறு. ரொம்பத் திண்டாடிப் போனேன்!

"முதல் போஸ்டிங், தேவகோட்டையில் துணைக் கலெக்டர். ஒருங்கிணைந்த ராமநாதபுரம் மாவட்டம். மதுரையில் கலெக்டர் ஆபீஸ். அங்கே மீட்டிங் என்றால் நூறு கிலோ மீட்டர் பயணம் போக வேண்டும். பின்னர், ராமநாதபுரம் மாவட்டம் மூன்றாகப் பிரிக்கப்பட்டபோது அதனை மேற்பார்வையிடும் பணி எனக்குத் தரப்பட்டது. பிரிக்கப்பட்டபின் சிவகங்கை மாவட்டத்தின் கலெக்டரானேன்.

"பீஷ்மநாராயண்சிங் மற்றும் சென்னா ரெட்டி காலத்தில் ராஜ்பவனில் எனக்குப் பொறுப்பு. கவர்னர் பல்வேறு நிகழ்ச்சிகளிலும் கலந்து கொள்ளுகிறபோது பேச வேண்டிய சொற்பொழிவை தயாரித்துக் கொடுக்கும் பணியை நான் ஏற்றிருந்தேன். பல்வேறு சப்ஜெக்ட்களிலும் பேச்சு தயார் செய்வது என்பது மிகவும் சுவாரசியமான வேலை!"

**த**மிழ்நாட்டுக்கு வந்து இரண்டாண்டுகள் கழித்துத் திருமணமாயிற்று. கோவையில் செட்டில் ஆன உ.பி. குடும்பத்தைச் சேர்ந்த சாயா மனைவியானார். திருமணத்



துக்குப்பின், மொழிப் பிரச்னைக்கு சௌகரியமான தீர்வு கிடைத்தது நரேஷ் குப்தாவுக்கு. சாயா குப்தா தம் கணவருக்கு இந்தி, ஆங்கிலம் வழியே தமிழ் சொல்லிக் கொடுத்தார்.

இப்போது நரேஷ்குப்தாவுக்கு, தமிழ் படிப்பதில் சிரமம் இல்லை. ஆனால் சரள மாகப் பேச வரவில்லை.

மார்ச் மாதம் தமிழ்நாட்டின் தலைமைத் தேர்தல் அதிகாரியாகப் பொறுப்பேற்றுக் கொண்டார். "போன லோக் சபா தேர் தலுக்கு முன்னரே, இந்தப் பொறுப்புக்கு நான் நியமிக்கப்பட்டுவிட்டேன். ஆனால் உடல் நலக் குறைவு காரணமாக லீவில் போக வேண்டியதாகிவிட்டது. லீவு முடிந்து பொறுப்பேற்றுக் கொண்டபோது, சீக்கிரமே தேர்தல் வரும் என்று நினைத்துப் பார்க் கவே இல்லை. எனவே, இந்தியாவின் தேர் தல் முறை பற்றி விரிவாக ஒரு புத்தகம் எழுதும் பணியில் இறங்கினேன். இப்போது புத்தகம் ரெடி! எந்தப் பதிப்பகத்தையும் நாடி வெளியிட எனக்கு மனமில்லை. கைக் காக செலவழித்து, புத்தகம் போட்டிருக்கிறேன்!"

"தேர்தல் பிரசார விதிமுறைகளைச் செயல்படுத்துவது சிரமமாக இருந்ததா?"

"அப்படியெல்லாம் இல்லை. பொதுவாக விதிமுறைகளை அனைவருமே கடைப்பிடித் திருக்கிறார்கள்!"

"எந்த விதிமுறை மீறப்படுவதாக அதிக அளவில் புகார் வந்தது?"

"இரவு பத்துமணிக்கு மேல் பிரசாரம் செய்யக் கூடாது என்பதுதான் கட்சி வேறு பாடு இல்லாமல் மீறப்பட்டது. மீறியவர்கள் பேரில் நடவடிக்கையும் எடுக்கப்படுகிறது!"

"அரசுப் பணியில் ஏற்பட்ட மறக்க முடியாத அனுபவம் ஏதாவது?"

"அரசு விதிமுறைகளின்படி, ஒரு குறிப்பிட்ட முக்கியமான பொறுப்பில் இருப் பவர்களுக்கு குடியிருக்க வீடு தரவேண்டியது அரசாங்கத்தின் கடமை. ஆனால் முந்தைய ஆட்சியினருக்கு, குறிப்பாக அந்தத் துறை சம்பந்தப்பட்ட அமைச்சருக்கு, குறிப்பிட்ட அரசு வி.ஐ.பி. ஒருவருக்கு வீடு ஒதுக்குவதில் விருப்பம் இல்லை. அந்த அமைச்சரிடம் என் கருத்தை-விதிமுறையை பல தடவை எடுத்துச் சொல்லி அந்த வி.ஐ.பிக்கு வீடு ஒதுக்கப்பட்டே ஆக வேண்டும் என்று வற் புறுத்தியும்கூட ஒரு பயனும் இல்லை.

"ஒரு நாள் மாலை அமைச்சரை நேரில் சந்தித்து, 'இந்தப் பிரச்னையில் இனியும் முடிவெடுக்காமல் நழுவிக் கொண்டிருப்பது சரியில்லை. எனவே விதிப்படி வீடு ஒதுக்க உத்தரவு கொடுங்கள்!' என்று கேட்டுக் கொண்டேன். என் தரப்பு வாதங்களைக் கேட்டபின், மறுக்க முடியாமல் வீடு ஒதுக்க ஒப்புக் கொண்டார். அத்துடன் சும்மா இல்லை. உடனே சம்பந்தப்பட்ட வி.ஐ.பிக்கு டெலிபோன் செய்து, 'மாநில அரசின் நிதித் துறையும், என் துறையைச் சேர்ந்த அதி காரிகளும்தான் உங்களுக்கு வீடு ஒதுக்கக் கூடாது என்று ரொம்பச் சொன்னார்கள். ஆனால், நான் உங்கள் மீது கொண்ட பாசத் தின் காரணமாக, உடனடியாக வீடு ஒதுக்க உத்தரவிட்டிருக்கிறேன்!' என்று உண்மைக்கு மாறாக அப்படியே பிளேட்டை மாற்றினார். எதிரில் உட்கார்ந்து கேட்டுக் கொண்டிருந்த எனக்கு எப்படி இருந்திருக்கும்? அதிர்ந்து போனேன். அரசியல்வாதிகள் எப்படியும் நடந்து கொள்ளலாம் என்பதற்கு இதுவே சாட்சி!"

நரேஷ் குப்தாவுக்கு காந்தியக் கொள்கை களில் மிகுந்த நம்பிக்கையுண்டு. ஐந்தாறு வருடங்களுக்கு முன்பு, மதுரை பல்கலைக் கழகத்தின் அஞ்சல் வழிக் கல்வி வாயிலாக இவர் காந்திய சிந்தனைகளில் எம்.ஏ. முடித் திருக்கிறார்.

— எஸ். சந்திரமௌலி

படம்: ஸ்ரீஹரி



"தனித்துப் போட்டியிட்டால் வெற்றி பெறுவோம்னு சொன்னீங்களே, உங்க கட்சிக்கு டெபாசிட்டே போயிடிச்சே...?"

"தனித்துப் போட்டியிட யார் விட் டாங்க... அதான் மூணு நாலு கட்சிகள் எங்களை எதிர்த்துப் போட்டியிட்டாங் களே!"

– சீர்காழி வி. ரேவதி

தேர்தல் நேரத்தில் மக்களிடையே ஒரு வித விழிப்புணர்ச்சியை ஏற்படுத்தும் அரிய பணியைச் செய்தது 'எலெக்ஷன் வாட்ச்'. ஆந்திர மாநிலத்தில் இயங்கியது இப் பொதுநல அமைப்பு.



• 'எலெக்ஷன் வாட்ச்' ஜெயபிரகாஷ் நாராயண்

பொது வாழ்க்கையில் தூய்மை, நேர்மையை ஏற்படுத்தும் நோக்கத்துடன் ஜெயபிரகாஷ் நாராயண் என்ற அதிகாரியால் துவக்கப்பட்டதுதான் இந்த அமைப்பு. இதற்கென்றே ஐ.ஏ.எஸ்.ஸிலிருந்து ராஜிநாமா செய்துவிட்டு வந்த இவருக்குக் கைகொடுத்து உதவ பல முன்னாள் ஐ.ஏ.எஸ், ஐ.பி.எஸ் அதிகாரிகளும், நீதித் துறையினரும் சமூகப் பொறுப்பு மிக்கவர்களும் முன் வந்திருப்பது சந்தோஷமான விஷயம்.

"இன்றுள்ள தரங்கெட்ட அரசியலுக்கு - கிரிமினல்களுடன் பிணைந்த அரசியலுக்கு வெறுமனே அரசியல்வாதிகளை மட்டும் குறை சொல்லிக்கொண்டிருப்பது தவறு; நாம் அனைவருமே அதற்குப் பொறுப்புதான்" என்கிறது எலெக்ஷன் வாட்ச். அதேநேரம் மக்களிடம் வாக்குறுதிகளை அள்ளிவிட்டு விட்டு, தேர்தல் முடிந்து வெற்றி பெற்றவுடன், மக்களை மறந்துவிட்டு, சுய நலத்துடன் சொத்து, அதிகாரம் இவற்றைக் குவித்துக் கொள்ளுகிற அரசியல்வாதிகளையும் இது சாடுகிறது.

வாக்காளர் பட்டியலில் இடம் பெறாமல் விட்டுப் போனவர்களது பெயர்களை, சேர்க்கப் பெரு முயற்சி எடுத்துக்கொண்டது இவ்வமைப்பு.

ஒரு புள்ளி விவரப்படி, நம் வாக்காளர் பட்டியலில் இடம் பெற்றுள்ளவர்களில் சுமார் முப்பது சதவிகிதத்தினர் விலாசம் மாறி விட்டார்கள். புதிய விலாசத்தில் பெயர் பதிவு ஆகவில்லை. இது கள்ள வோட்டுக்கு வழி வகுக்குமில்லையா? எனவே,

# குவிந்து விட்ட கிரிமினல் புராணங்கள்!

அது போன்ற வாக்காளர்களுக்குத் தங்கள் பெயரை பழைய முகவரியிலிருந்து நீக்கி விட்டு, புதிய முகவரியில் சேர்க்கும்படி கோரும் விண்ணப்பங்களை (நெ6 மற்றும் 8பி) ஐந்து லட்சம் பிரதிகள் அச்சிட்டு, விநியோகித்துள்ளது இவ்வமைப்பு.

தவிர, 'இந்தத் தேர்தலில் வேட்பாளர்களாக நிற்பவர்களுடைய கிரிமினல் நடவடிக்கைகள் பற்றி உங்களுக்கு ஏதாவது விவரம் தெரியுமா?' என்று இவர்கள் கேட்க, மாநிலம் முழுக்க பல்வேறு இடங்களிலிருந்தும், வேட்பாளர்களின் கிரிமினல் புராணம் சொல்லும் கடிதங்கள் குவிந்துவிட்டன! இவற்றை இப்போது பரிசீலித்துக் கொண்டிருக்கிறார்கள். விரைவில் தேர்தல் கமிஷனுடன் தொடர்பு கொண்டு உரிய நடவடிக்கை எடுக்கப் படுமாம்.

நேர்மையற்ற வேட்பாளர்களைத் தேர்தலில் நிறுத்த வேண்டாம் என்று அரசியல் கட்சிகளின் தலைவர்களுக்கு இவ்வமைப்பு விடுத்த வேண்டுகோளுக்கு என்ன பலன் இருக்க முடியும்!

ஒரே மேடையில் ஆந்திர முதல்வர் சந்திரபாபு நாயுடுவையும், ஆந்திர காங். கமிட்டி தலைவரான ராஜசேகர ரெட்டியையும் நேருக்கு நேர் விவாதம் நடத்தச் செய்து, டெலிவிஷனில் ஒளிபரப்ப முயற்சி எடுத்தது எலெக்ஷன் வாட்ச். ஆனால் நாயுடு தரப்பிலிருந்து, சரியானபடி பதில் இல்லாததால், செயல்படுத்த முடியாமல் போய்விட்டது.

— மானசா

# ரகசியங்கள் சொல்வதற்கு அல்ல

## 4

**ஈஸ்வர்**

**மே**னனுக்கு மூச்சு நின்றுவிடும் போல் இருந்தது.

ரமேஷ் கணிப்பொறியில் வந்த அந்தப் பெயரைப் படித்தான்.

"ஆர் யு ஷ்யூர், ரமேஷ்?" – மறுபடியும் வினவினார் மேனன்.

"ஆமாம் சார்... இந்தப் பேர்தான் வருது!"

"மிஸ்டர் ரமேஷ்... இந்த லிஸ்ட்டை எந்தெந்த மாதம் எடுத்திருக்காங்னு பார்த்துச் சொல்ல முடியுமா?"

ரமேஷ் இன்னும் கொஞ்ச நேரம் விரல்களால், மேனன் மேஜையில் இருக்கும் கம்ப்யூட்டரிடம் பேசினான்.

"சார்... கடந்த ஒரு வருஷமா இந்த லிஸ்ட் எடுக்கப்பட்டிருந்தாலும் இதை ப்ரிண்ட் அவுட் மூலமா எடுக்கலை. ப்ளாப்பிலதான் மாதா மாதம் வெளிலேர்ந்து ஏத்தியிருக்காங்க."

"அப்படின்னா?"

"இந்த விவரங்களை அப்படியே வெளில அதாவது பாங்கிங் ஹாலலயே இருக்குற பர்சனல் கம்ப்யூட்டர் மூலமா, உள்ளே ஒரு ப்ளாப்பி டிஸ்குல அப்படியே பதிவுபண்ணிக்கிறது. அப்படி எடுக்கப்பட்டிருக்கு..."

மணி உடனடியாகக் கேட்டார்.

"மிஸ்டர் ரமேஷ்... இதுபோல கம்ப்யூட்டர் நடவடிக்கைகளை கண்காணிக்க முடியும்ங்கறது, உங்க கன்ட்ரோல் ரூமைத் தவிர வெளில இருக்குற ஸ்டாஃபுங்களுக்குத் தெரியுமா?"

ரமேஷ் கொஞ்சம் தயங்கினான்.

"சொல்லுங்க மிஸ்டர் ரமேஷ்..."

"எங்க சீனியர் மானேஜர் மிஸ்டர் மேனனுக்கே இப்பத்தான் தெரியும்னா பாத்துக்குங்களேன்... கம்ப்யூட்டர் சிஸ்டத்தைக் கன்ட்ரோல் செய்யறவங்க அப்படிங்கற முறைல நாங்கதான் எல்லாத்துக்கும் ரெஸ்பான்சிபிள். அதனால அக்கௌண்டபிலிடியும் எங்களுக்குத்தான். ஸோ, ஸிஸ்டத்தோட ஃபுல் ஃபங்ஷனைப் பத்தி நாங்க வெளிலே பேசறதில்லை."

"ஓகே மிஸ்டர் ரமேஷ்... தேங்யு ஃபார் தி இன்பர்மேஷன். பட், இனிமேதான் உங்க ரெஸ்பான்சிபிலிடி கூடறது. எங்களுக்கு இது ஒரு இம்பார்ட்டண்ட் எவிடன்ஸ். இது கோர்ட்டுக்குக் கூட தேவைப்படும். அதனால எவிடன்ஸ் அழிஞ்சிடக் கூடாது. மிஸ்டர் மேனன் அதுக்கு வேண்டிய ஏற்பாடுகளை இனிமே நீங்கதான் செய்யணும். ஓகே. இப்போ அந்தக் கம்ப்யூட்டர்ல வந்த பேரு அது என்ன பேரு? ம்... ரமணன், அவனை நாங்க உடனடியா பார்த்தாகணுமே!"

"ரொம்ப நல்ல பையன் சார். அவன் ஏன் இது மாதிரி ஒரு காரியத்துல ஈடுபட்டான்னே புரியலை..."

"கவலைப்படாதீங்க. கண்டுபிடிச்சிருவோம்."

"காலமே சீக்கிரமே வந்துருவான். சாயங்காலம் கூட லேட்டா உக்காரணும்னா முணு முணுக்கவே மாட்டான். சின்ஸியர் பாய். கொஞ்சம் கஷ்டப்படற ஃபேமிலி வேற!"

"சரி... அந்தப் பையனைக் கொஞ்சம் கூப்பிடுங்க சார்..." மல்ஹோத்ரா அதிலேயே குறியாக இருக்க...

"டிஎஸ்பி. சார்... அவங்க அப்பா இன்டென்சிவ்கேர் யூனிட்ல அட்மிட் ஆயிருக்கார்னு தந்தி வந்தது... மெட்ராசுக்கு ப்ளைட்ல போயிருக்கான் சார்..."

மணியும், மல்ஹோத்ராவும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டனர்.

"மிஸ்டர் மேனன்... அவனுடைய லோக்கல் அட்ரஸ், மெட்ராஸ் அட்ரஸ் ரெண்டும் உடனடியா எங்களுக்கு வேணும்."

"சார், நான் அப்சர்வ் செஞ்ச சில விஷயங்களை இப்போ சொல்றேன். ஆனா எந்த அளவுக்கு அது உங்களுக்குப் பயன்படும்னு தெரியாது."

"சொல்லுங்க மிஸ்டர் ரமேஷ்..."

"ரமணன் நல்ல பையன்னு சார் சொன்னதை நானும் ஆமோதிக்கிறேன். ப்ரில்லியண்ட் கூட. ஆனா அவன் போக்குல கொஞ்ச நாளா சில மாற்றங்கள் இருந்தது. ஒரு ஆறேழு மாசத்துக்கு முன்னாடி ஒருநாள் அவன் ஒரு இருபத்தி அஞ்சாயிரம் ரூபா அவங்க அப்பா பேர்ல டிராப்ட்டா, இந்த ப்ராஞ்சுலேர்ந்து வாங்கி அனுப்பினான். என்ன ரமணா ஏதாவது லோன் போட்டியான்னு கேட்டேன். சிரிச்சிக்கிட்டே ஒண்ணும் சொல்லாம போயிட்டான். ரமணன் எந்த லோனும் பாங்குல அப்ளை பண்ணலேன்னாங்க. அதுக்கப்புறம் ரெண்டு மூணு மாசம் கழிச்சு எங்க ப்ராஞ்ச் மூலமா இல்லாம, எங்க பாங்கோட இதே மும்பைல இருக்குற இன்னொரு கிளை மூலமா ஒரு இருபத்தி அஞ்சாயிரம் டிராப்ட் அவன் சிஸ்டர் பேர்ல எடுத்து அனுப்பினது தற்செயலா தெரிய வந்தது. மும்பைல தனியா இருந்துக்கிட்டு, ஊர்ல இருக்குற குடும்பத்துக்கும் பணம் அனுப்பறதுங்கறது எவ்வளவு கஷ்டமா இருக்குன்னு எங்கிட்ட மொதல்ல புலம்பிக்கிட்டிருந்தான். ஆனா பணப் புழக்கம் வர ஆரம்பிச்சவுடனே ஒதுங்க ஆரம்பிச்சிட்டான். பக்கத்திலிருக்கற கூரியர் சர்வீஸ் ஆபீஸுக்கும் அடிக்கடி போய் வந்துக்கிட்டிருந்தான்."

"இது ஒரு முக்கியமான க்ளூவா இருக்கலாம். தேங்க்யூ."

இன்னும் சிறிது நேர விசாரணைக்குப் பிறகு, சிவாஜிராவ் உள்ளே வந்தான்.

ஐ.ஜி. ராபர்ட் ஃபெடரியோ அறை.

மணியும், மல்ஹோத்ராவும் எதிரே சில ஆவணங்களுடன் உட்கார்ந்து ஒவ்வொன்றாக, அவருக்கு விளக்கிக் கொண்டிருந்தனர்.

"ஐ.ஜி. சார்... இந்தக் கொலைகளுக்கு எல்லாம் பின்னாடி ஒரு 'மாப்பியா' இருக்குன்னு



க்ளியரா தெரியறது. சின்னச் சின்ன கேங்கா வேலை செய்யறாங்க. இப்ப விசாரிச்ச இந்த ரெண்டு கொலைங்க பின்னணில மத்த மூணையும். மிஸ்டர் மல்ஹோத்ராவும் நானும் உடனடியா விசாரிக்க முடிஞ்சது."

"அந்த மூணு கொலைங்களுங்கூட இதே மாதிரிதானா?" – ஐஜி.

"மோடஸ் ஆபரண்டி இஸ் தி சேம். கிட்டத்தட்ட இதே வழிமுறைகள்தான். ஆனா இன்னும் ரெண்டு பாங்க். வேற வேற."

"இன்னும் கொஞ்சம் க்ளியரா சொல்லுங்க, மிஸ்டர் மணி..."

"சார்... இந்தப் பொருளாதாரக் குற்றங்களைச் செய்யறவங்க ரொம்பவே புத்திசாலிங்களா இருக்குறாங்க. சின்னச் சின்னக் கூட்டமா ரெண்டு மூணு ஆளுங்களை வேற வேற வேலைக்குத் தயார் பண்ணிடறாங்க. ஒரு கூட்டத்தைப் பத்தியோ, அதனுடைய நோக்கம், செயல்பாடு, நேரம் இதெல்லாம் அடுத்த கூட்டத்துக்குத் தெரியாம பாத்துக்கறாங்க. அதனால இந்தச் செயல்களோட தொடர்ச்சி, இதுக்குப் பின்னால இருக்கறது யார் அப்படிங்கற விவரம், இவங்கள்லயே நிறைய பேருக்குத் தெரியறது இல்லே. காட்டிக் கொடுக்கணும்னு நெனைச்சாலும், தலைமை பீடம் எதுன்னு தெரியாது."

"எப்படிச் சொல்றீங்க?"

"இந்த அஞ்சு கொலைங்களையும், வேற வேற ரெண்டு கும்பல் செஞ்சிருக்கு. ஆனா ஒரு கும்பல் செஞ்சது இன்னொண்ணுக்குத் தெரியாது. அந்தந்த ஃப்ளாட்டுல வேலை செய்யறவங்க, முதல்ல உபயோகப்படுத்தப் படறாங்க. இரகசிய விசாரணைகள். யார் யாருங்க கூட இருக்காங்கன்னு தெரிஞ்சிக்கிறது. விவரங்கள் தெரிஞ்சிகிட்ட கொஞ்ச நாளைக்கு அப்புறம் இவங்க ரெண்டு மூணு நாள் விடுப்புல போறா மாதிரியான ஏற்பாடுகள். அதுக்கும் பணம் கொடுக்கப்படறது. பிறகு யாரும் பார்க்காத நேரமா குறி வச்சவங்களுடைய வீட்டுக்குள்ள புகுந்துக்க வேண்டியது. ரெண்டே நாட்கள்ல அந்த வயசானவங்களைத் துன்புறுத்தி, இரண்டு செல்ஃப் செக்குங்கள்ல விவரமா, சந்தேகமே வராத மாதிரி கையெழுத்து வாங்கிட வேண்டியதுதான். அப்புறமா, பேப்பர்காரப் பையனாவோ, ப்ரொவிஷன் எடுத்துக்கிட்டு வர ஆளாவோ, சந்தேகத்துக்கே இடம் இல்லாம ஒரு ஆள் அந்தக் காசோலைங்களை அந்த வீட்டுக்கே வந்து வாங்கிக்கிட்டுப் போயிட வேண்டியது. அப்புறமா ரெண்டு நாள் கழிச்சு போன் வரும். இந்த வயசானவங்களை சைலண்ட்டா தீத்துட்டு, முடிஞ்ச மட்டும் ரேகை, எவிடன்ஸ் எதையும் விட்டு வைக்காம நகர்ந்துட வேண்டியது. இது ஒரு கூட்டத்தோட வேலை. அதோட அவங்க பார்ட் ஓவர்.

"இந்த செல்ஃபு செக்குங்களை பாங்குல சந்தேகம் வராத மாதிரி முறையா மாத்தி, பாங்க் வாசல்லயோ, ஓரமாவோ கார்ல காத்துக்கிட்டு இருக்குற இன்னொரு ஆளுகிட்ட பணத்தை ஒப்படைச்சுடறது. ராம்லக்கன் சிங்காவோ, நாணாவாகவோ இருப்பான். எவ்வளவு மெரட்டினாலும், பணம் யாருகிட்டப் போவுதுன்னு அவனுக்குத் தெரியாது. செல்ஃப் செக்குங்க க்ளீனா இருக்கு. C/o அட்ரஸ் வேற கணக்கா தராங்களே. அப்படியே சந்தேகம் வந்து பாங்குலேர்ந்து வீட்டுக்கு போன் பண்ணிக் கேட்டாலும், அங்க இருக்குற கேங்குக்குப் பயந்துக்கிட்டு, அந்த வயசானவங்க, நாங்கதான் செக்கை, கொடுத்து அனுப்பிச்சோம்னு சொல்லிடுவாங்க. வங்கிகளைப் பொறுத்த வரை இந்த மாதிரி பேரர் செக்குங்களுக்குப் பணம் கொடுக்கறதுல எந்த சிக்கலும் இல்லே. வாங்கிக்கிட்டுப் போனவனையோ, பணம் போன எடத்தையோ ட்ரேஸ் பண்ண முடியாது."

"ஜீஸஸ்..." ராபர்ட் பெருமூச்சு விட்டார்.

"ஆனா இந்த மாதிரியெல்லாம் நடக்கும்னே தெரியாம இந்த வலைகள்ல மாட்டிக்கிறதுதான் ரமணனைப் போல சில, படிச்சவங்களும் செய்யற தப்பு. ரியல் எஸ்டேட் பிசினஸே ரொம்ப டல்லாயிருக்கு. இன்ஃபேக்ட் நசிச்சுகிட்டே வருது. கொஞ்சம் பசையான வெளிநாட்டுப் பணம் வர்ற பணக்கார வயசானவங்களை அடையாளம் காட்டினாப் போதும். நாங்க அவங்களை கன்வின்ஸ் பண்ணி, கொஞ்சம் ப்ளாட்டுங்களை வித்துருவோம். இந்த மாதிரி லிஸ்ட் மாத்திரம் கொடுத்தாப் போதும்னு ரமணனை மாதிரி ரெண்டு, மூணு முக்கியமான வங்கிகள்ல, கொஞ்சம் பணமுடை இருக்குற ஊழியர்களாப் பார்த்துத் தேர்ந்தெடுத்து, அவங்க மூலமா, அந்த விவரங்கள் மூலமா மொதல்ல பணம் இருக்குற எடம், தேர்வு ஆறது. வயசானவங்க மொதல் குறி. அதுவும் தனியா இருக்கறவங்க. ஏன்னா, இவங்க புள்ளைங்க பொண்ணுங்க வெளிநாட்டுல இருக்காங்க. சாவுக்கு வந்தாலும் ரொம்ப நாள் பின்னாடி இருக்க மாட்டாங்க. கொலையை பர்ஸ்யூ பண்ண நேரம் இருக்காது. வழக்கு, விசாரணைன்னு அலைய முடியாது. அதுவே

இந்தக் கொலைக் கூட்டத்துக்கு ரொம்ப உதவியா இருக்கும்...." ரமணனை மாதிரி பசங்களை அப்ரோச் பண்றவங்கதான் இதுல லீடே கொடுக்க முடியும். ஏன்னா அவங்க தான் தலைமைப் பீடத்துக்குக் கொஞ்சம் பக்கத்துல இருக்கறவங்க."

"போகப் போக இந்த மாதிரி பொருளா தாரக் குற்றங்கள் மும்பை, டெல்லி இந்த மாதிரி பெருநகர்கள்ல அதிகமாயிடும் போல இருக்கே..." கவலை தெரிவித்தார் ஐஜி.

"உண்மைதான்" - மணி, தொடர்ந்தான். "கொலையாளி, குற்றவாளிங்களை விட வேகமா! சி.பி.ஐ., மாநிலப் போலீஸ், மற்ற குற்றப் புலனாய்வுத் துறை எல்லாத்துக்குமே இன்னும் சொபிஸ்டிகேட்டட் டிரெய்னிங் வேணும்."

"ஆமா, இப்போ நாம எந்தக் கட்டத்துல இருக்கோம்?" - ஐஜி. வினவினார்.

"சார்... முதல்ல மும்பை போலீசுக்கு என் பாராட்டுதல்கள். இந்த அஞ்சு கொலை கேசுங்கள்லயும், கொலையானவங்க உபயோகிச்ச காசோலைகள்ல, கையெழுத்துப் போட்டு, பணம் வாங்கின, ராம் லக்கன் சிங், நாணா மாதிரி ஆளுங்களை, உங்க போலீஸ் உடனே பிடிச்சாச்சு. போலீஸ் ரெக்கார்டுங் கள்ல ஏற்கெனவே இருந்த சில குற்றவாளிங்க கையெழுத்து, அந்தக் காசோலைங்க பின் னாடி இருக்குற கையெழுத்து, இதெல்லாம் ஒண்ணாயிருக்கு. ஃபோரன்சிக் டிபார்ட் மெண்ட் உறுதி செஞ்சிருக்கு."

"வெரி குட்."

பாங்க் கம்ப்யூட்டர்-இன்-சார்ஜ் ரமேஷ் கொடுத்த சில டிப்ஸ் மூலமா, ரமணன் அனுப்பின அந்தக் கூரியர் சர்வீஸ் ஆபீசை வச்சி, அந்த இன்பர்மேஷன் ஃப்ளாப்பிங்க போன விலாசம், அதை வாங்கின ஆளுங்க இவங்களை மடக்கிட்டோம்"

"வெல்டன்!"

"கடைசியா தைரியமா யூனியன் ஒப்புத லோட, கேஷியர் சிவாஜிராவ், நாணாவா வந்த ஆளையும், குத்தவாளிங்க பரேட்ல அடையாளமும் காமிச்சுட்டான். போலீஸோட கவனிப்புத் தாங்காம அவனே சில விவரங்களையும் சொல்லிட்டான்."

"நைஸ்.... ப்ரொஸீட்..."

"கொலையான அஞ்சு பேர் வீட்டு வேலைக்காரங்க, வாட்ச்மேன், இவங்களைத் துருவித் துருவி விசாரிச்சதுல, அந்தந்த வீட்டுல, நுழைஞ்சவங்களையும் ஓரளவுக்கு அடையாளம் கண்டுபிடிச்சிட்டோம். ரெண்டு பேரு ஒத்துக்கிட்டு, அப்ரூவரா மாறிட்டாங்க."

"யூ மீன், கொலை செஞ்சவங்களையே பிடிச்சாச்சுங்கறீங்க. அப்புறம் என்ன?"

மணி, மல்ஹோத்ராவைப் பார்த்தான். மல்ஹோத்ரா அறைக்கு வெளியே இன்ஸ் பெக்டர் பாதுகாப்பில் இருக்கும், சாதுவான இளைஞனை அழைத்து வந்தார்.

"ஐஜி. சார்... இதுதான் ரமணன். நேத் தைக்கே மெட்ராசுக்கு ப்ளைட்ல போய், ஆஸ்பத்திரில அப்பாவை கவனிச்சுக்கிட்டி ருந்த இவனை, இரக்கமே இல்லாம கூட்டிக் கிட்டு வரவேண்டியதாயிருச்சு. பாங்க் சீக்ரஸி க்ளாசையெல்லாம் மீறி, திடீர்னு வந்த பெரும் பணத்துக்காக, ஆசைப்பட்டு, வெறும் இன் பார்மரா செயல்பட்டிருக்கான். கொலைல



"என்னது அந்த வேட்பாளருக்கு ஒரு வோட்டுக்கூட விழலையா?"
"ஆமா. அவரோட வோட்டைக் கூட நடுங்கிக்கிட்டே பக்கத்து சின்னத் தில் குத்திட்டார்னா பார்த்துக்கோ..."
- செ.க. புதூர் குமார்

நேரிடையா சம்பந்தம் இல்ல, ஆனா, தெரி யாத்தனமா, என்ன நடக்கப் போறதுன்னே தெரியாம, உடந்தையா இருந்திருக்கான். ஏதோ ரியல் எஸ்டேட்காரங்க, பிசினஸ் படுத்துட்டதனால, சில பணக்காரங்களை அணுகி, ப்ளாட்டுங்களை விக்கற முயற்சிக்குத் துணை போறதா நெனைச்சு, பணத்துக்காக இதை செஞ்சிருக்கான். அதுக்கான தண் டனை தப்பாது.

"மத்த பாங்க்குல இவனை மாதிரி செயல்பட்ட ரமணன்கள், அவங்க அவங்க காண்டாக்ட்சை காமிச்சுத் தந்தாச்சி. இவனும், இவனை மொதல்ல சந்திச்சவனை, அடையாளம் காமிச்சிட்டா போதும். மூல வரை நாம வளைச்சிடலாம். டி.எஸ்.பி. இனிமே, இவனைக் கவனிச்சிப்பாரு. தட் இஸ் ஆல். என் வேலை ஓவர்."

ஐஜி. மணியின் கைகளை நேசத்துடன் குலுக்கினார்.

(முற்றும்)

**கோ**டிக்கணக்கான மக்களின் எதிர்பார்ப்புகளை முடிச்சுகளாக வேட்டியில் வாரி முடிந்து கொண்டு, நூற்றுக்கணக்கான கட்சிகள் ஓர் அணியாகத் திரண்டு தந்த ஆதரவில், அரியணை ஏறுவதற்கு ஆயத்தம் செய்து, வலது காலை எடுத்து வைத்த தலைவரை அச்சுறுத்தும் வகையில், அங்கே 'ஓஹோ ஹோ' என்ற ஆவேசமான, பரிகாசம் கலந்த சிரிப்பொலி ஒன்று கேட்டது.

அச்சத்தைச் சமாளித்துக் கொண்டு, கோபம் கலந்த வெண்கலத் தொனியில் நான்கு பொதுத் தேர்தல்களை ஒரே ஆண்டில் சந்தித்த வீராதி வீரராகிய அந்த மாபெரும் தலைவர் கர்ஜித்தார் : "சிரிப்பவர் யார்? தைரியம் இருந்தால் முன்னால் வா..."

மறுபடியும் எக்காளம் கொப்புளிக்கும் ஓங்காரச் சிரிப்பு.

தலைவருக்குப் பாதுகாவலாக இருந்த வீரர்கள் துப்பாக்கியைத் தயாராகக் குறி வைத்துக் கொண்டு அங்குமிங்கும் பார்த்தார்கள்.

"தலைவரே, நாங்கள் யார் தெரியுமா?"

"சொல்லுங்கள் சீக்கிரம். ராகு காலம் வந்துவிடப் போகிறது" என்றார் தலைவர்.

"சுதந்திரம் பெற்ற நாளிலிருந்து நீங்கள் போட்டு வருகிற ஐந்தாண்டுத் திட்டங்கள், விசாரணைக் கமிஷன் அறிக்கைகள், தேர்தல் பிரகடனங்கள், வாக்குறுதிகள், இன்னும் ஏராளமானவற்றை உண்டு, ஜீரணித்து, சுதந்திரத்தின் உண்மையான பலன்களை அனுபவித்து வருபவர்கள் நாங்கள். இந்தச் செயலகத்தின் நீண்ட நாட்களாகக் குடி உரிமை பெற்று வசித்து வரும் பிரஜைகள் நாங்கள்..."



## இந்திரா பார்த்தசாரதி

"யார் நீங்கள்?"

" 'கரையான்கள்' என்று நீங்கள் எங்களைக் கொச்சையாக அழைக்கிறீர்கள். ஆனால் நாங்கள் எங்களை 'ஏட்டுப் பிரியர்கள்' என்று அழைத்துக் கொள்ள விரும்புகிறோம். பேசிக் கொண்டிருக்கும் நான் ஏட்டுப் பிரியர்களின் தலைவன். பிரதிப்புசி ராஜன் என்பது என் பெயர்."

"என்ன வேண்டும் உனக்கு?" தலைவரின் குரலில் சீற்றம் சற்றுத் தணிந்திருந்தது.

"உலக நாட்டாண்மை தனக்குத்தான் என்று கொக்கரிக்கும் அமெரிக்காவின் யோசனையைக் கேட்டு, 'உலகமயமாக்குதல்' என்பதின் பேரில், எப்படியெப்படியோ செயல்பட்டு வருகிறீர்கள். அமெரிக்கா, ஜப்பான் ஆகிய இரு நாடுகளும் எங்கள் எதிரிகள். 'இன்டர்நெட்' புரட்சியில் எங்களுக்குக் காகிதம் கிடைக்காமல் எங்களைப் பட்டினி போட்டு சாகடிக்க முயல்கிறார்கள். அது கிடக்கட்டும். நான் போடும் புதிரை விடுவித்தால்தான் நீங்கள் அரியணை ஏற முடியும். இல்லாவிட்டால்..."

"இல்லாவிட்டால்?"

"எல்லா அரசியல் தலைவர்களின் இல்லங்களில் உள்ள கறுப்புப் பண நோட்டுக்களை எல்லாம் நாங்கள் சாப்பிட்டு..."

"வேண்டாம், வேண்டாம்... தலைவர் கெட்டிக்காரர், நீ போடும் புதிருக்கு விடை சொல்வார். சீக்கிரம் போடு புதிரை, ராகு காலம் வந்து கொண்டிருக்கிறது..." என்றார்கள் எல்லா அரசியல் கட்சித் தலைவர்களும் ஒற்றுமையான குரலில்.

பிரதிப்புசிராஜன் கம்பீரமான குரலில் பேச ஆரம்பித்தார். அவருடைய மற்றைய ராஜ்ய பரிவாரங்கள் 'ஓஹோ'வென்று குரல் எழுப்பி ஆரவாரித்தன.

"தருமமிகு சென்னைப் பட்டினத்தில், நடுத்தரத்துக்கு சற்று மேலான வகுப்பில் பிறந்து வளர்ந்து பட்டம் பெற்ற நளினி என்ற பெண்ணுக்கு இருபத்திரண்டு வயதாகும் போது கனவுகள் வந்தன. கனவுகள் பச்சை நிறத்தில் வந்ததைக் கண்டு பயந்து போனாள். அதே தெருவில் ஆளுயர விளம்பரப் பலகையுடன் மந்திரிகளுக்கும் பிரபணக்காரர்களுக்கும் ஜோஸ்யம் சொல்லி வந்த சாஸ்திர மித்ரர் என்பவரிடம் இதைப் பற்றிக் கேட்டாள். அவர் சொல்வார்: 'பெண்ணே, நீ அமெரிக்கா போக இருக்கிறாய். முப்பத்திரண்டு சாமுத்ரிகா லட்சணங்களுடன் ஆஜானுபாகுவாக ராஜகுமாரன் போல் ஒருவன் புஷ்பக விமானத்தில் வருவான். உன் அழகில் மயங்கி உன்னைக் கொத்திக் கொண்டு போவான். இதுதான் அதன் அர்த்தம். கல்யாணமான பிறகு அந்தப் பச்சைப் பணத்தில் எனக்கும் கொஞ்சம் கொடுத்தால் போதும். இப்போது ஒன்றும் தர வேண்டாம்.'

தில்லை எப்போது போவோம் என்று எண்ணி எண்ணி ஏங்கிய திருநாளைப் போவாரைப் போல், அமெரிக்கா எப்போது போகலாம் என்று எண்ணி எண்ணி ஏங்கிய நளினி திருநாளைப்



போவான் அம்மையார் ஆனாள்.

தமிழ்நாட்டு இளைஞர்களை விட அமெரிக்கத் தமிழ் இளைஞர்கள் நளினியின் மூலநட்சத்திரத்தைக் கண்டு பயந்தார்கள். 'அழகான பெண்தான், ஆனால் கல்யாணத்துக்கு தோதுப்படாது' என்றார்கள். ஆனாலும் நளினி நம்பிக்கையுடன் காத்திருந்தாள்..."

"கதையைச் சீக்கிரம் சொல்லி முடி, ராகுகாலம் வந்து விடப் போகிறது," என்றார் தலைவர்.

பிரதிப்புசி ராஜன் மந்தகாசத்துடன் மேலே சொல்ல ஆரம்பித்தார்.

"நளினியின் நம்பிக்கை வீண் போகவில்லை. சாஸ்திர மித்ரர் சொன்னது சாஸ்தோத்திரமான சத்திய வார்த்தை. நளினியைப் பார்க்க வந்த இளைஞனின் கைகள் அவன் தொடைகளைத் தொட்டன. ஆஜானுபாகு. நீண்ட நாசி. அவன் சிரிக்கும் போது கண்களும் சிரித்தன..."

"வருணனை போதும், கதை தொடரட்டும்," என்றார் தலைவர்.

"நளினியும் நோக்கினாள். அவனும் நோக்கினான். இருவரும் பேசவில்லை. விவேக் பிறந்து வளர்ந்ததெல்லாம் அமெரிக்காவில்தான். அவனுக்குப் பெற்றோர்களும் உறவினர்கள் என்று யாருமே இல்லையென்று தெரிந்ததும் நளினியின் பெற்றோர்கள் முதலில் இந்தக் கல்யாணத்திற்கு சம்மதிக்கவில்லை. நளினிதான் பிடிவாதமாக ஒற்றைக்காலில் நின்று சாஸ்திர மித்ரர் சொன்னது பொய்க்காது என்று நிரூபித்துக் காட்டினாள். அவர் எதிர்பார்த்ததற்கு மேலாகவே பச்சைப் பணத்தால் அவருக்குத் தன் நன்றியைத் தெரிவித்துக் கொண்டாள்.

இப்படி இருவரும் கண்டதும் காதலாகி, இதயம் மாறிப் புகுந்து, கல்யாணம் செய்து கொண்டு அவளுக்கு விசா வாங்கி அமெரிக்கா போகத் தயார் ஆனார்கள்.

முதலிரவு மட்டும் நடக்கவில்லை. நளினி ஏமாற்றத்துடன் கேட்டாள், 'ஏன் வேண்டாம் என்றீர்கள், விவேக்?'

'இது என் சென்டிமென்ட் சம்பந்தப்பட்டது. இதைப் பற்றி விவாதம் தேவையில்லை.' கண்டிப்பாகச் சொல்லி விட்டான் விவேக். நளினி அதற்கு மேல் ஒன்றும் பேசவில்லை.

அமெரிக்காவின் கலிஃபோர்னியாவிலுள்ள ஸான் ஹோஸே போய்ச் சேர்ந்தார்கள். கலிஃபோர்னியா என்றாலே தன் நினைவுக்கு வருவது பூகம்பமும் ஹாலிவுட்டும்தான் என்றாள் நளினி. இனி அவள் நினைவுக்கு வர வேண்டியது ஸிலிக்கோன் வாலியும் (silicon valley) உலகத்தின் எதிர்காலமே அங்கு இருக்கிறது என்பதும்தான் என்று சிரித்தான் விவேக். அவன் உலகமே கம்ப்யூட்டர்கள்தான் என்பது புரிந்த நளினி ஒன்றும் சொல்லவில்லை.

மூன்று படுக்கை அறைகள், விவேக் வேலை செய்ய ஒரு ஆபீஸ் அறை, ஒரு பெரிய ஹால் என்று அவர்கள் அப்பார்ட்மெண்ட் ரம்மியமாக இருந்தது.

'நம் இரண்டு பேருக்கும் ஆளுக்கொரு படுக்கை அறை,' என்று அவன் சொன்ன போது அவள் திடுக்கிட்டாள் : 'அப்படியென்றால்?'

'என் விரதம் முடியும் வரை அப்படித்தான்.'

'விரதமா? யாருக்கு வேண்டிக் கொண்டீர்கள்?'

'என் அப்பாவுக்கு.'

'பகவானுக்கு வேண்டிக் கொள்வார்கள். அப்பாவுக்கு வேண்டிக் கொள்பவர்கள் உண்டா?'

'இதோ நான் இருக்கிறேனே! எனக்கு தெய்வ நம்பிக்கை கிடையாது.'

மற்றப்படி அவளிடம் மிகவும் பிரியமாக இருந்தான் விவேக். அவளைக் கொஞ்சினான், கட்டியணைத்து முத்தமிட்டான், சுவாரஸ்யமான கதைகள் சொன்னான். அமெரிக்கச் சின்னங்களான டிஸ்னி உலகம், மக்டானல்ட், கோலா யுத்தம் என்று பலவற்றைப் பற்றியும் விவரித்துச் சொன்

---

**"தலைவரே! எலெக்ஷன் முடிந்து ரிசல்டை ஒரு மாசம் தள்ளி வைச்சதுக்கு ஏன் இவ்வளவு கவலைப்படறீங்க?"**

**"வயிற்றெரிச்சலா இருக்கு. ரிசல்ட் வந்திருந்தா இதுக்குள்ளே ஆட்சியை கவிழ்த்திருக்கலாமே!"**

**— மங்கை**

னான். முகர்ந்தால் வாடி விடுவாள் என்று நினைப்பது போல் மிக நளினமாக, இதமாக, பரிவாக அவன் அவளிடம் பழகியது அவளுக்கு மிகவும் பிடித்திருந்தது. ஆனால் 'அந்த' விஷயம் மட்டும் அவள் மனதை நெருடிக் கொண்டே இருந்தது.

தேனிலவு போகலாம் என்று விவேக் சொன்னான். நயாகரா நீர்வீழ்ச்சியைப் பார்த்த நளினிக்கு மெய்சிலிர்த்தது. இவ்வளவு அற்புதமான ஒரு காட்சியும் இருக்க முடியுமா என்று அவளுக்குத் தோன்றியது. சிவபெருமான சடையில் தாங்கிக் கொள்வதற்கு முன் வந்த கங்கை இப்படித்தான் ஆகுவாசமாக, ஆகாசத்திலிருந்து பெருகிப் பாயும் சமுத்திரமாக..."

"வருணனை வேண்டாம், கதையைச் சொல் என்று எத்தனை தடவைதான் சொல்வது?" என்றார் தலைவர் அலுத்துக் கொண்டே.

"சரி, மன்னிக்கவும்," என்று தொடர்ந்தார் பிரதிப்புசி ராஜன்.

" 'ஆண்மையின் நினைவாகத் தெரிகிறது நயாகரா, இல்லையா?' என்றான் விவேக்.

'பெண்மையின் சிற்றமாகத் தெரிகிறது,' என்றாள் அவள்.

தங்கியிருந்த ஹோட்டலுக்குத் திரும்பியதும் விவேக் அவளிடம் கேட்டான் : 'ஏன் பெண்மையின் சிற்றமென்று சொன்னாய்?' அவள் பதில் சொல்லவில்லை. மௌனமாகவே இரவு உணவு முடிந்தது. விளக்கு அணைந்ததும் அதே மௌனம் தொடர்ந்தது.

ஒரு மணி நேரம் கழித்து அவள் திரும்பிப் பார்த்தாள். விவேக் தூங்குவது போலிருந்தான். அவன் தூங்கவில்லை என்று அவளுக்குத் தோன்றியது. இப்படித்தான் அவன் எப்போதும் தூங்குகிறான் என்ற எண்ணம் அவளுக்கு வந்தது. அவன் தூங்கும் போது அவள் பார்த்ததில்லை.

'விரதம் முடிந்து விட்டதா?' என்று கேட்டான் அவள்.

**(தொடர்ச்சி 65-ம் பக்கம்)**

# "ரசித்து ரசித்துப் படித்தேன்!"

● இப்படியொரு மலரை, 'கல்கி'யால் மட்டுமே கொண்டு வர முடியும். அமரர் கல்கி காலத்திய சுவாரஸ்யமான சம்பவங்கள் பல சிறப்பாகப் பதிவாகி உள்ளன. மிகவும் ரசித்து ரசித்துப் படித்தேன்!
சி. சுப்ரமணியம்,
(முன்னாள் மகாராஷ்டிர ஆளுனர்) சென்னை - 85.

● அமரர் கல்கி நூற்றாண்டு விழா மலர், ஒவ்வொரு நூலகத்திலும் இருக்க வேண்டிய ஓர் இலக்கியப் பொக்கிஷம். இப்படிப்பட்டதொரு மலரை வெளிக் கொணர்ந்த தங்கள் முயற்சியைப் பாராட்டுகிறேன்.
பி.ஆர். ராமசுப்ரமணிய ராஜா,
சேர்மன், மெட்ராஸ் சிமெண்ட்ஸ். சென்னை - 4

● மலரை, விழாவன்றே ஒருமுறை புரட்டிப் பார்த்து விட்டேன். இப்போது நிதானமாகப் பார்க்க வாய்ப்புக் கிடைத்தது. சிறப்பாக இருக்கிறது. வாழ்த்துகள்! மனமார்ந்த பாராட்டுகள்!
அசோகமித்திரன்,
சென்னை-17.




● இது காலப் பெட்டகம். சிவகாமியின் சபதத்துடன் பொன்னியின் செல்வனுடன் அலை ஓசையுடன் சேர்த்துப் பாதுகாத்து வைக்க வேண்டிய புத்தகம். இருபத்தைந்து வருஷங்களுக்குப் பிறகு கல்கியின் சரித்திர நாவல்களை இன்னும் பெருமளவில் படிப்பார்கள். அப்படிப் படிக்கும் பல ஆர்வலர்களுக்குக் கல்கி யார்? என்று தெரிந்து கொள்ளவும் ஆராய்ச்சி செய்யவும் இந்த மலர் பேருதவியாக இருக்கும்!
வ.சா. நாகராஜன், சென்னை - 61.

● என்னவொரு நேர்த்தியான அட்டைப்படம்! 'கல்கி'யின் காவல் தெய்வமான விநாயகப் பெருமானின் தெய்வீக முகப்புப் படம், மூதறிஞர் ராஜாஜி, ரசிகமணி டி.கே.சி., நட்புக்கும் பண்புக்கும் இலக்கணமான இனிய நண்பர் சதாசிவம் மற்றும் பல தலைவர்களுடன் கல்கியுள்ள போட்டோக்கள், வண்ணப்படங்கள், கவிதைகள், கதைகள், அப்பப்பா! அவ்வளவும் நல் முத்துக்கள்.
ஸ்ரீக்ருபா, திருச்சி - 17.

● மலரில் பக்கத்துக்குப் பக்கம் நுட்பம், ஆழ்ந்த கவனம், அக்கறை, நேர்த்தி இவையெல்லாம் காணக் கிடைக்கின்றன. எவ்வளவோ தவம் செய்து, இதை சிருஷ்டி செய்திருக்கிறீர்கள்! அது நன்றாகவே புலப்படுகிறது.
எம்.கே. ராமஸ்வாமி, சென்னை - 41.

# பொன்னியின் செல்வன்

## நாற்பதாம் அத்தியாயம்

## ஆனைமங்கலம்

நம் கதாநாயகிகளில் ஒருத்தியான வானதி அடிக்கடி நினைவு இழக்கும் வழக்கம் வைத்துக் கொண்டிருக்கிறாள் அல்லவா? இந்த ஒருதடவை மட்டும் நேயர்கள் அதைப் பொறுக்கும்படி வேண்டுகிறோம். ஏனெனில், அவளுடைய நோய் நீங்கும் காலம் நெருங்கி விட்டது.

வானதிக்கு நினைவு சிறிது வந்தபோது முதலில் அவள் ஊசலாடுவது போலத் தோன்றியது. பின்னர் அவள், தான் வானவெளியில் பிரயாணம் செய்து கொண்டிருப்பதாக எண்ணினாள். "ரிம் ரிம்" "ஜிம் ஜிம்" என்று மழைத் தூறலின் சப்தம் கேட்டது. குளிர்ந்த காற்று குப் குப் என்று உடம்பின் மீது வீசிற்று. அதனால் தேகம் சிலிர்த்தது. சரி, சரி, மேக மண்டலங்களின் வழியாக வானுலகிற்குப் போய்க்கொண்டிருக்கிறோம் என்று எண்ணினாள். சுற்றிலும் இருள் சூழ்ந்திருந்தது. இடையிடையே மின்னல் வெளிச்சம் பளிச்சிட்டு மறைந்தது.

முதன்மந்திரி கடைசியாகக் கஜேந்திர மோட்சத்தைப் பற்றிக் கூறியதும், யானை அதன் துதிக்கையினால் தன்னைச் சுற்றி வளைத்துத் தூக்கியதும் இலேசாக நினைவு வந்தன. முதன்மந்திரி அநிருத்தர் கூறியபடியே நடந்துவிட்டது. மண்ணுலகில் என் ஆயுள் முடிந்து

இப்போது மோட்சத்துக்குப் போய்க் கொண்டிருக்கிறேன். மோட்ச உலகில் தேவர்களையும் தேவிகளையும் பார்ப் பேன்.

ஆனால் எல்லாத் தேவர்களிலும் என் மனத்துக்குகந்த தெய்வமாகிய அவரை அங்கே நான் பார்க்க முடியாது. மனத் துக்கு இன்பமில்லாத அத்தகைய மோட்ச உலகத்துக்குப் போவதில் என்ன பயன்?

"அடேடே! இது என்ன ஊசலாட் டம்! உடம்பை இப்படித் தூக்கித் தூக்கிப் போடுகிறதே! ஆனால் தலை வைத்திருக் கும் இடம் மெத்தென்று சுகமாயிருக் கிறது. தாயின் மடியைப் போல் இருக் கிறது. ஏன்? தாயைக் காட்டிலும் என்னிடம் பிரியம் வாய்ந்த இளைய பிராட்டியின் மடியைப் போலவும் இருக்கிறதே...! ஆ! குந்தவைதேவி இப் போது பழையாறையில் என்ன செய்து கொண்டிருக்கிறாரோ? என்னைப் பற்றிய செய்தி அவருக்கு இதற்குள் எட்டி யிருக்குமா?

மோட்ச உலகத்துக்கு வானவெளியில் மேக மண்டலங்களின் வழியாகப் பிர யாணம் செய்வது சரிதான். ஆனால், என்ன வாகனத்தில் பிரயாணம் செய் கிறேன்? சொர்க்க லோகத்துப் புஷ்பக விமானமா இது? அல்லது தேவேந் திரனுடைய ஐராவதம் என்ற யானையா? அப்பா! யானை என்றாலே சிறிது பய மாகத்தானிருக்கிறது! யானையும் அதன் துவண்டு வளையும் துதிக்கையும்! – அப் படித் துவளும் துதிக்கையில்தான் எவ்வளவு பலம் அதற்கு? – போனது போயிற்று! இனி அதைப் பற்றிப் பயம் என்ன? கவலை என்ன?

ஆனால் தலை வைத்திருக்கும் இடம் இவ்வளவு பட்டுப் போல் மிருது வாயிருக்கும் காரணம் யாது? சுற்றிலும் இருளாயிருப்பதால் ஒன்றும் தெரிய வில்லை. கையினால் துழாவிப் பார்க் கலாம். உண்மையில், பட்டுத் திரைச் சீலை மாதிரிதான் தோன்றுகிறது. கொஞ்சம் ஈரமாயும் இருக் கிறது.

ஆகா! இது என்ன? என் கன்னங் களை யார் தொடுகிறது? மல்லிகைப் பூவைப் போன்ற மிருதுவான கரம் அல்லவா தொடுகிறது?"

"வானதி! வானதி!"

இளையபிராட்டி குந்தவை தேவியின் குரல் அல்லவா இது? என்ன விந்தை! இப்படியும் இருக்க முடியுமா? அக்காவும் ஒருவேளை என்னுடன் சொர்க்கத்துக்கு வருகிறார்களா?

"வானதி! வானதி!"

"அக்கா! நீங்கள்தானா?"

"நான்தான்! வேறு யார்?"

"நீங்கள் கூட என்னுடன் மோட்ச உலகத்துக்கு வருகிறீர்களா?"

"மோட்ச உலகத்துக்குப் போக அதற்குள் உனக்கு என்னடி அவசரம்? இந்த உலகம் அதற்குள்ளே வெறுத்துப் போய் விட்டதா?"

"பின்னே, நாம் எங்கே போகிறோம்?"

"என்னடி? அதுகூட மறந்து போய் விட்டதா? ஆனைமங்கலத்துக்குப் போகிறோம் என்று தெரியாதா?"

" என்ன ஊர்? இன்னொரு தடவை சொல்லுங்கள்!"

"சரியாப் போச்சு! ஆனைமங்கலத் துக்குப் போகிறோம்! ஆனையின் முதுகில் ஏறிக்கொண்டு போகிறோம்!"

"ஐயோ! யானையா?"

"அடி பைத்தியமே, உன் உடம்பு ஏனடி நடுங்குகிறது! யானை என்ற பெய ரைக் கேட்டாலே பயப்படத் தொடங்கி விட்டாயா?"

"அக்கா! சற்று முன் நான் தூங்கிப் போய் விட்டேனா?"

"ஆமாம், ஆமாம்! யானை மேல் அம்பாரியில் பிரயாணம் செய்கிற

அமரர் கல்கி



சொகுஸில் ஆனந்த மாய்த் தூங்கி விட்டாய்!''

"ஆனந்தம் ஒன்றுமில்லை, அக்கா! பயங்கரமான கனவுகள் கண்டேன்!''

''அப்படித்தான் தோன்றியது! ஏதேதோ பிதற்றினாய்!''

"என்ன அக்கா பிதற்றினேன்?"

''காளாமுகர் என்றாய்! பலி என்றாய்! கஜேந்திர மோட்சம் என்றாய்! யானைத் துதிக்கை என்றாய்! அப்புறம் முதன் மந்திரி அநிருத்தரைப் 'பாவி, பழிகாரன்' என்று திட்டினாய். அந்தப் பிரம்மராயருக்கு நன்றாய் வேண்டும்! நீ தூக்கத்தில் அவரைப் பற்றித் திட்டியதையெல்லாம் அவர் கேட்டிருந்தால், பல நாள் தூங்கவே மாட்டார்!"

''அதெல்லாம் நடந்தது நிஜமாகக் கனவுதானா, அக்கா!"

''நிஜமாகக் கனவா? பொய்யாகக் கனவா? எனக்கு என்ன தெரியும்? நீ என்ன சொப்பனம் கண்டாய் என்பதே எனக்குத் தெரியாது."

"காளாமுகர்கள் என்னைப் பிடித்துக்கொண்டு போனார்கள். முதன் மந்திரி என்னிடம் இளவரசரைப்



பற்றிய இரகசியத்தைக் கேட்டார். நான் சொல்ல மறுத்துவிட்டேன். உடனே யானையை அழைத்து என்னைத் தூக்கி எறிந்து கொல்லும்படி கட்டளையிட்டார். அப்போது நான் கொஞ்சங்கூடக் கலங்காமல் தைரியமாக இருந்தேன், அக்கா! அப்போது உங்கள் ஞாபகமும் வந்தது. நீங்கள் அங்கே இல்லையே, என்னுடைய தைரியத்தைப் பார்ப்பதற்கு என்று."

"போகட்டும்; சொப்பனத்திலாவது அவ்வளவு தைரியமாக நடந்து கொண்டாயே? அதன் பொருட்டுச் சந்தோஷம்!"



வானதி சற்றுச் சும்மா இருந்துவிட்டு "என்னால் நம்ப முடியவில்லை!" என்றாள்.

"உன்னால் என்னத்தை நம்ப முடியவில்லையடி?"

"நான் கண்டதெல்லாம் கனவு என்று நம்ப முடியவில்லை."

"சில சமயம் சொப்பனங்கள் அப்படித்தான் இருக்கும். நிஜமாக நடந்தது போலவே தோன்றும். நான்கூட அப்படிப்பட்ட சொப்பனங்கள் பலமுறை கண்டிருக்கிறேன்."

"அப்படி என்ன சொப்பனம் கண்டிருக்கிறீர்கள்? சொல்லுங்களேன்?"

"ஏன்? என் தம்பிகூடத்தான் அடிக்கடி என் கனவில் வருகிறான். இலங்கைக்கு அவன் போய் எத்தனை மாதம் ஆயிற்று? ஆனால் இரவில் கண்ணை மூடினால் அவன் தத்ரூபமாக என் முன்னால் வந்து நிற்கிறான்..."

"நீங்கள் அதிர்ஷ்டசாலி, அக்கா!"

"என் அதிர்ஷ்டத்தை நீதான் மெச்சிக் கொள்ள வேண்டும். அவன் கடலில் குதித்த செய்தி வந்ததிலிருந்து என் மனம் எப்படித் துடித்துக் கொண்டிருக்கிறது என்று உனக்குத் தெரியாது."

"அப்படியானால் அதுவும் ஒரு பயங்கர சொப்பனம் அல்லவா? அவர் கடலில் முழுகியது மட்டும் நிஜமான செய்திதானா?"

"அதுவும் ஒரு துர்ச் சொப்பனமாயிருந்தால் எவ்வளவோ நன்றாயிருக்குமே? அது மட்டும் நிஜந்தானடி, வானதி! இளவரசன் கடலில் குதித்ததை நேரில் பார்த்தவர் வந்து சொன்னாரே! அதை நம்பாமல் என்ன செய்வது?"

"வாணர்குல வீரரைத்தானே சொல்கிறீர்கள்? அவரே இளவரசரைப் பற்றி வேறு ஏதோ சொல்லவில்லையா? ஓடக்காரப் பெண்ணைப் பற்றியும் நாகைப்பட்டினம் சூடாமணி விஹாரத்தைப் பற்றியும் ஏதோ சொல்லவில்லையா?"

"இதெல்லாம் உன் சொப்பனமாயிருக்க வேண்டும். ஆம், ஓடக்காரி பூங்குழலியைப் பற்றியும் நாகைப்பட்டினம் சூடாமணி விஹாரத்தைப் பற்றியும் நீ தூக்கத்தில் பிதற்றினாய்! புத்த பிக்ஷுணி ஆகப் போவதாகக்கூட உளறினாய்! அதற்குள் உனக்கு என்னடி இந்த உலக வாழ்க்கையின் மீது அவ்வளவு வெறுப்பு? எதற்காக நீ புத்த பிக்ஷுணி ஆக வேண்டும்!"

"அக்கா! என் மனது உங்களுக்குத் தெரியாதா? அவரைக் கடல் கொண்டு விட்டது என்று கேட்ட பிறகு எனக்கு இந்த உலகில் என்ன வாழ்வு வைத்திருக்கிறது? சொப்பனத்தில் கண்டபடியே யானை என்னைத் துதிக்கையால் தூக்கி எறிந்து கொன்றிருக்கக் கூடாதா என்று தோன்றுகிறது!"

"அடி பாவி! நீயும் போய்விட்டால் என் கதி என்னடி ஆகிறது?"

"உங்கள் விஷயம் வேறு, அக்கா! நீங்கள்..."

"ஆமாம், ஆமாம்! அருள்மொழியிடம் என்னைக் காட்டிலும் உனக்கு அதிக ஆசை! இல்லையா?"

"அக்கா! அப்படி ஒன்றும் நான் சொல்லவில்லை. தங்களைப் போல் நான் மனோ தைரியம் உள்ளவள் அல்ல. அவர் இறந்து விட்ட பிறகு..."

"சிச்சி! என்ன வார்த்தை சொல்கிறாய்? அவன் 'இறந்தான்' என்று நீ ஏன் சொல்ல வேண்டும்? உனக்கு நிச்சயமாய்த் தெரியுமா? பழுவேட்டரையர்களும், பழுவூர் ராணியும், பேதை மதுராந்தகனும் அப்படிச் சொல்லிக் கொம்மாளம் அடிப்பார்கள். நீயும் நானும் அப்படி ஏன் சொல்ல வேண்டும்? அல்லது ஏன் நினைக்கத்தான் வேண்டும்?"

"பின்னே, என்ன சொல்கிறீர்கள்? அவர் சுழிக்காற்றில் கடலிலே குதித்த பிறகு.. வேறு என்ன ஆகியிருக்க முடியும்? பிழைத்திருந்தால் இத்தனை நாள் வந்திருக்க மாட்டாரா?"

"அடி பைத்தியமே! கடலில் குதித்தால், அவனைக் கடல் கொண்டு விட்டது என்று அர்த்தமா?"

"கரை ஏறியிருந்தால் இத்தனை நாள் தெரியாமலா இருக்கும்?"

"என் தகப்பனாரின் கதை உனக்குத் தெரியுமா? அவர் இளம் பிராயத்தில் பல மாத காலம் இருக்குமிடமே தெரியாமலிருந்தது. தேடிப் பிடித்துக் கொண்டு வந்து இளவரசுப் பட்டம் கட்டினார்கள். என் பாட்டனார் அரிஞ்சய சோழர் தக்கோலம் யுத்தத்துக்குப் பிறகு அடியோடு மறைந்து விட்டார். பல வருஷங்களுக்குப் பிறகுதான் அவர் இருக்குமிடம் தெரிந்தது.

நான் சொல்கிறேன், கேள், வானதி! காவேரித் தாய் ஒரு சமயம் என் தம்பியைக் காப்பாற்றிக் கரை சேர்த்தாள். அது மாதிரியே சமுத்திர ராஜனும் பொன்னியின் செல்வனைக் கரை சேர்த்திருப்பார். நமது கடற்கரைக்கும் இலங்கைத் தீவுக்கும் மத்தியில் எத்தனையோ சிறிய சிறிய தீவுகள் இருக்கின்றன. அத்தீவுகளில் ஒன்றில் அருள்மொழி ஒதுங்கியிருக்கக் கூடும் அல்லவா? அவனைத் தேடும் வேலையை நன்றாய்ச் செய்யும்படி தூண்டுவதற்காகவே நான் இந்தப் பிரயாணம் புறப்பட்டேன், உன்னையும் அழைத்துக்கொண்டு. உனக்கு இதெல்லாம் ஞாபகமே இல்லை போலிருக்கிறது. உன் பேரில் தப்பு இல்லை. இளவரசனைப் பற்றிய செய்தி வந்ததிலிருந்து உன் புத்தியே பேதலித்துவிட்டது. இப்போது தான் கொஞ்சம் தெளிவாகப் பேச ஆரம்பித்திருக்கிறாய்!"

வானதி சிறிது நேரம் மௌனமாயிருந்து விட்டு, "அக்கா! நாம் எந்த ஊருக்குப் போகிறோம் என்று சொன்னீர்கள்!" என்றாள்.

"ஆனைமங்கலத்துக்கு."

"அது எங்கே இருக்கிறது?"

"நாகைப்பட்டினத்துக்கு அருகில் கடற்கரை ஓரத்தில் இருக்கிறது. நீ ஏதோ சொப்பனம் கண்டு உளறினாயே? அந்தச் சூடாமணி விஹாரத்துக்கும் ஆனைமங்கலத்துக்கும் கொஞ்ச தூரந்தான். நீ புத்த பிக்ஷுணியாவதாயிருந்தால்கூட, அதற்கும் சௌகரியமாகவேயிருக்கும். ஆனால் நீ மணிமேகலையாவதற்கு அவசரப்பட வேண்டாம். பொன்னியின் செல்வனைப் பற்றித் திடமான செய்தி கிடைத்த பிறகு முடிவு செய்து கொள்ளலாம்!" என்று குந்தவை கூறிவிட்டு இலேசாகச் சிரித்தாள்.

"அக்கா! இது என்ன நீங்கள் சிரிக்கிறீர்கள்! சிரிப்பதற்கு எப்படி உங்களுக்கு மனம் வருகிறது? இளவரசர் பிழைத்திருப்பார் என்று உங்களுக்கு அவ்வளவு நம்பிக்கை இருக்கிறதா?"

"நம்பிக்கை இல்லாவிட்டால், நான் இப்படி இருப்பேனா வானதி! நான் பார்த்து வைத்திருக்கும் ஜோசியங்கள் எல்லாம் பொய்யாகப் போவதில்லை. என் தம்பியின் கையில் உள்ள சங்கு சக்கர ரேகைகளும் பொய்யாகப் போவதில்லை. இது வரையில் எல்லாம் சரியாகத்தான் நடந்து வந்திருக்கிறது."

"என்ன சரியாக நடந்து வந்திருக்கிறது? எனக்கு ஒன்றும் தெரியவில்லையே?" என்றாள் வானதி.

"உனக்கு ஏன் தெரியப் போகிறது? நீதான் சித்தப் பிரமை பிடித்து அலைகிறாயே? அருள்மொழிக்கு இளம் வயதில் பல கண்டங்கள் நேரும் என்று சொன்னார்கள். அதன்படி நேர்ந்து வந்திருக்கின்றன. பின்னே, மற்றவையும் நடந்து தானே ஆக வேண்டும்?"

"மற்றவை என்றால்?"

"எத்தனையோ தடவை நான் சொல்லியாகி விட்டது. நீயும் கேட்டிருக்கிறாய். மறுபடியும் எதற்காகச் சொல்லச் சொல்கிறாய்? பேசாமல் தூங்கு! பொழுது விடிந்து பார்த்துக் கொள்ளலாம்."

வானதி மீண்டும் சிறிது நேரம் சிந்தனையில் ஆழ்ந்திருந்து விட்டு, "இராத்திரியெல்லாம் யானை மீது பிரயாணம் செய்யப் போகிறோமா, அக்கா! எதற்காக?" என்று கேட்டாள்.

"அதுகூடவா உனக்கு ஞாபகம் இல்லை? பகலில் நாம் பிரயாணம் செய்தால் வழியில் உள்ள ஊர்களிலெல்லாம் ஜனங்கள் நம்மைச் சூழ்ந்து கொள்வார்கள். 'பொன்னியின் செல்வன் எங்கே?' 'சோழ நாட்டின் தவப் புதல்வன் எங்கே?' என்று கேட்பார்கள். பழுவேட்டரையர் மீது குற்றம் சுமத்துவார்கள். பழுவூர் இளையராணியைச் சபிப்பார்கள். சக்கரவர்த்தியைக் கூட நிந்தித்தாலும் நிந்திப்பார்கள். அதையெல்லாம் நாம் எதற்காகக் காதினால் கேட்க வேண்டும்? நான்தான் ஜனங்களை அப்படியெல்லாம் தூண்டி விட்டதாகப் பழுவேட்டரையர்கள் சொன்னாலும் சொல்லுவார்கள். எதற்காக அந்த வம்பு என்றுதான் இராத்திரியில் புறப்பட்டேன். இதையெல்லாம் பழையாறையிலிருந்து புறப்படும் போதே உனக்குச் சொன்னேன். மறுபடியும் கேட்கிறாய். நல்ல சித்தப் பிரமை பிடித்து உன்னை ஆட்டுகிறது! சூடாமணி விஹாரத்துப் புத்த பிக்ஷுக்களிடம் சொல்லித்தான் உன் சித்தப் பிரமையைப் போக்க வழி தேட வேண்டும்! போனால் போகட்டும்; நீ இப்போது தூங்கு! எனக்கும் தூக்கம் வருகிறது. இந்த ஆடும்



குன்றின் மீது உட்கார்ந்தபடியேதான் இன்று இரவு நாம் தூங்கியாக வேண்டும்" என்றாள் இளையபிராட்டி.

வானதி இனி ஒன்றும் பேசக் கூடாது என்று தீர்மானித்து மௌனமானாள். அவளுடைய உள்ளம் ஒரே குழப்பமாயிருந்தது. அன்று நடந்ததையெல்லாம் ஒவ்வொன்றாக நினைத்துப் பார்த்துக்கொண்டாள். எல்லாம் உண்மையாக நிகழ்ந்த சம்பவங்களாகவே



தோன்றியது. 'எனக்குச் சித்தப் பிரமை ஒன்றுமில்லை; அக்காதான் என்னைப் பைத்தியமாக அடிக்கப் பார்க்கிறாள்' என்று சிலசமயம் எண்ணினாள். யானை தன் னைத் துதிக்கையினால் சுற்றித்

தூக்கிய பிறகு என்ன நடந்தது என்பதை எண்ணி எண்ணிப் பார்த்தாள். ஒன்றும் நினைவுக்கு வரவில்லை. என்னதான் நடந்திருக்கும்? தன் உயிருக்கே ஆபத்தான அந்த வேளைக்கு அக்கா சரியாக அங்கே வந்து தன்னைக் காப்பாற்றியிருக்க வேண் டும். அக்காவைப் பார்த்ததும் முதன் மந்திரி நடு நடுங்கிப் போயிருக்க வேண் டும். ஆயினும் யானைத் துதிக்கையின் பிடியிலிருந்து காப்பாற்றுவது என்பது அவ்வளவு சுலபமான காரியமா...? ஒருவேளை இவ்வாறு இருக்குமோ...? தன்னைத் துதிக்கையால் கட்டித் தூக்கிய யானைதானா இது? மேலே அம்பாரி இருந்தது. அந்த இருட்டிலும் சிறிது தெரிந்தது. இளையபிராட்டி அந்த அம்பாரியிலேயே இருந்திருக்கலாம். யானை துதிக்கையினால் தூக்கித் தன்னைத் தூர எறிவதற்குப் பதிலாக மேலே அம்பாரியில் விட்டிருக்கக் கூடும். அந்த மாதிரி செய்ய யானைகள் பழக்கப் பட்டிருப்பதை வானதி பலமுறை பார்த் ததுண்டு. முதன்மந்திரியும் இளையபிராட் டியும் சேர்ந்து இம்மாதிரி சூழ்ச்சி செய் திருக்கிறார்களோ? எதற்காக? நான் தனி யாகப் பிரயாணம் செய்வதைத் தடுக்கும் பொருட்டுத்தான். என்னுடைய தைரியத் தைச் சோதிப்பதற்காகவும் இளைய பிராட்டி இம்மாதிரி செய்திருக்கலாம். பொம்மை முதலையை என் அருகிலேயே விட்டு ஒருசமயம் சோதனை செய்யவில் லையா? எப்படியாவது இருக்கட்டும்; நான் இன்று தனி வழியே புறப்பட்டது பெருந் தவறு. இப்போது அக்காவின் மடியில் தலையை வைத்துப் படுத்திருப்பது எவ் வளவு நிம்மதியாயிருக்கிறது? அக்காவின் வார்த்தைகள் எவ்வளவு தைரியமும் உற் சாகமும் அளிக்கின்றன? பொன்னியின் செல்வர் எங்கேயோ பத்திரமாயிருக்கிறார் என்பதில் சந்தேகமில்லை. ஒருவேளை இந் தப் பிரயாணத்தின் முடிவில் அவரைச் சந்திப்போமா...? இவ்வாறு எண்ணிய போது வானதியின் உள்ளத்தில் அளவில் லாத கிளர்ச்சி ஏற்பட்டது. மனச் சோர் வுக்கு நேர்மாறான உற்சாக இயல்பு இப் போது அவளை ஆட்கொண்டது.

யானை கம்பீரமாக நடந்து சென்று கொண்டிருந்தது.

யானை மேல் அம்பாரி ஆடி அசைந்து கொண்டிருந்தது.

முன்னும் பின்னும் காவற்படைகள் போய்க் கொண்டிருந்தன.

மழை சிறு தூறலாயிற்று. பிறகு தூறலும் நின்றது.

வானத்தில் மேகக் கூட்டங்கள் சிதறிக் கலைந்தன.

நட்சத்திரங்கள் எட்டிப் பார்த்தன.

வானதி யானையின் அம்பாரிக் கூரை வழியாக மேலே வானத்தில் தெரிந்த நட் சத்திரங்களைப் பார்த்தாள்.

வான வெளியில் சஞ்சரிக்கும் நட் சத்திரங்களுக்கும் பூலோகத்தில் வாழும் மனிதர்களின் வாழ்க்கைக்கும் ஏதேனும் சம்பந்தம் இருக்க முடியுமா என்று அதி சயப்பட்டாள்.

பொன்னியின் செல்வர் உதித்த நட் சத்திரத்துக்கும் தான் பிறந்த நட்சத்திரத் துக்கும் உள்ள பொருத்தத்தைப் பற்றி ஜோதிடர்கள் சொல்வதில் ஏதேனும் உண்மையிருக்குமா?

தன் வயிற்றில் பிறக்கும் மகன் மூன்று உலகத்தையும் ஆளப் போகிறான் என்று ஜோதிடர்களுடன் சேர்ந்து அக்காவும் சொல்வது உண்மையாகுமா?

வால் நட்சத்திரம் தோன்றுவது ஏதோ உற்பாதத்துக்கு அறிகுறி என்று ஜனங்கள் பேசிக் கொள்கிறார்களே, அது எவ்வளவு தூரம் நிஜமாயிருக்கும்?

அப்படி என்ன உற்பாதம் நடக்கும்?

பொன்னியின் செல்வர் கடலில் முழுகி யதுதான் அந்த உற்பாதமா?

அக்கா கொண்டுள்ள நம்பிக்கையின் படி அவர் திரும்பி வருவாரா?

அப்படியானால், வேறு என்ன உற் பாதம் நடக்கக் கூடும்...?



ம்மாதிரியெல்லாம் வெகு நேரம் சிந்தனை செய்து கொண்டிருந்த பிறகு வானதி இலேசாகக் கண் ணயர்ந்தாள்.

அவள் கண் விழித்துப் பார்த்தபோது, பொழுது புலர்ந்திருந்தது.

புள்ளினங்கள் உதய கீதம் பாடின.

இளையபிராட்டியும் விழித்துக் கொண்டிருந்தாள். அம்பாரியின் பட்டுத் திரையை விலக்கிக்கொண்டு வெளியே பார்த்து, "இதோ ஆனைமங்கலம் வந்து



அங்கே ஆயத்தமாயிருந்த அரண்மனைத் தாதிமார்கள் இளவரசிகள் இருவரையும் மாளிகையின் எல்லாப் பகுதிகளுக்கும் அழைத்துச் சென்று காட்டினார்கள்.

கடைசியில், மாளிகையின் கீழ்ப்புறத்துக்கு வந்து, அங்கிருந்த அலங்கார முன்றின் முகப்பில் நின்றபடி கடலுடன் கலந்த கால்வாயைப் பார்த்துக்கொண்டு நின்றார்கள்.

"அக்கா! இளவரசரைத் தேடுவதற்கு ஏற்பாடு செய்யப் போவதாகச் சொன்னீர்களே? என்ன செய்திருக்கிறீர்கள்?" என்றாள் கொடும்பாளூர் இளவரசி.

"ஆமடி வானதி! தேடுவதற்கு ஏற்பாடு ஆரம்பமாகி விட்டது. அதோ பார் ஒரு படகு வருகிறது! அதில் வருகிறவர்கள் ஒரு வேளை ஏதேனும் செய்தி கொண்டு வந்தாலும் கொண்டு வருவார்கள்!" என்றாள் குந்தவை.

விட்டோம். சோழ மாளிகையின் வாசலுக்கே வந்து விட்டோம்" என்றாள்.

இரு இளவரசிகளும் யானை மீதிருந்து இறங்கினார்கள்.

மாளிகைக்குள்ளே பிரவேசித்தார்கள்.

வானதி திரும்பிப் பார்த்தாள். சற்றுத் தூரத்தில் மரக் கிளைகளின் இடைவெளியில் ஒரு சிறிய படகு வருவது தெரிந்தது. அதில் இருவர் இருந்தார்கள்.

"அக்கா! அந்தப் படகில் வருவது

யார்?" என்று வானதி கேட்டாள்.

"படகு தள்ளுகிறவன் சேந்தன் அமுதன். தஞ்சாவூர்ப் பாதாளச் சிறையிலிருந்து நாம் அன்றொரு நாள் விடுதலை செய்தோமே, அவன்! உட்கார்ந்திருப்பவள் பூங்குழலி!"

வானதிக்கு உடம்பு சிலிர்த்தது.

"அக்கா! நான் அந்தப் பெண்ணைப் பார்க்க விரும்பவில்லை. உள்ளே போகிறேன்!" என்றாள்.

"என்னடி அவளைக் கண்டு அவ்வளவு பயம்! உன்னை அவள் விழுங்கி விடுவாளா, என்ன? நான் பார்த்துக் கொள்கிறேன். நீ பயப்படாமல் சும்மா இரு!" என்றாள் குந்தவை.

படகு நெருங்கி வந்து கொண்டிருந்தது.

யானைத் துதிக்கையில் அகப்பட்ட வானதி எப்படி உயிர் பிழைத்தாள்? இதைக் குறித்து அவள் இரண்டாவதாகச் செய்த ஊகந்தான் சரியானது. யானை துதிக்கையைச் சுழற்றி அவளைத் தூர எறியவில்லை. மேலே தூக்கி அம்பாரியின் அருகில் இலேசாக வைத்தது. அங்கே திரை மறைவில் ஆயத்தமாயிருந்த குந்தவை அவளை வாரி அணைத்து மடியில் போட்டுக்கொண்டாள்.

பிறகு முதன்மந்திரியும் பல்லக்கில் ஏறினார். "தேவி! போய் வரட்டுமா? உன் பிரயாணம் இனிதாயிருக்கட்டும். அதன் முடிவும் இனிதாயிருக்கட்டும்!" என்று சொன்னார்.

"ஐயா! தங்கள் உதவிக்கு மிக்க நன்றி!" என்றாள் இளையபிராட்டி.

"கொடும்பாளூர்க் கோமகளைக் கோழை என்றாயே? அவளைப் போல் நெஞ்சழுத்தக்காரப் பெண்ணை நான் பார்த்ததேயில்லை."

"முன்னேயெல்லாம் அவள் கோழையாகத்தானிருந்தாள். கொஞ்ச நாளாகத்தான் அவளுக்கு இவ்வளவு தைரியம் வந்திருக்கிறது" என்றாள் குந்தவை.

"எல்லாம் உன்னுடைய பயிற்சிதான். அந்தப் பெண் என்னைப் பயங்கர ராட்சதன் என்று எண்ணியிருப்பாள். போனால் போகட்டும். என்னைப் பற்றி எவ்வளவோ பேர் எத்தனையோ விதமாக எண்ணிக் கொண்டிருப்பார்கள். நான் அதற்காகவெல்லாம் கவலைப்படுவதில்லை. போய் வருகிறேன், அம்மா!"

இவ்விதம் முதன்மந்திரி கூறியதும் அவருடைய பல்லக்கும் நாலு வீரர்களும் மட்டும் மேற்குத் திசையில் செல்ல, யானை குதிரை பரிவாரங்கள் எல்லாம் கிழக்கு நோக்கிச் சென்றன.

முதன்மந்திரியின் பல்லக்குப் புறப்பட்ட சிறிது நேரத்துக்கெல்லாம் மழை பிடித்துக் கொண்டது. மழையைப் பொருட்படுத்தாமல் சிவிகை தூக்கிய ஆட்களும் சிவிகையைக் காத்த வீரர்களும் சென்று கொண்டிருந்தார்கள்.

மழை குறைந்து தூறல் நிற்கும் சமயத்தில் திடீரென்று பல்லக்கு நின்றது.

"ஏன் நிற்கிறீர்கள்?" என்று முதன்மந்திரி கேட்டார்.

"சுவாமி! அந்த மரத்தடியில் யாரோ கிடப்பது போலத் தெரிந்தது" என்றான் முன்னால் சென்ற காவலர்களில் ஒருவன்.

முதன்மந்திரி அவன் சுட்டிக் காட்டிய திசையை உற்றுப் பார்த்தார். பளிச்சென்று ஒரு மின்னல் மின்னியது.

"ஆமாம்; யாரோ கிடக்கிறதாகத்தான் தெரிகிறது. இறங்கிப் பார்க்கிறேன்" என்றார் முதன்மந்திரி.

சிவிகையிலிருந்து இறங்கி அருகில் சென்றபோது மரத்தடியில் கிடந்த மனிதன் முனகும் சத்தம் கேட்டது.

"யார் இங்கே?" என்றார் அநிருத்தர்.

அதற்குப் பதிலாக "முதன்மந்திரி போலிருக்கிறதே!" என்ற தீனமான குரல் கேட்டது.

"ஆம்; கேட்பது முதன்மந்திரிதான்! இங்கே கிடப்பது யார்?"

"ஐயா! தெரியவில்லையா? நான்தான் மதுராந்தகன்!"

"இளவரசே! இது என்ன கோலம்? இங்கே எப்படி வந்தீர்கள்? என்ன நேர்ந்தது?" என்று பரபரப்புடன் கேட்டுக் கொண்டே முதன்மந்திரி மதுராந்தகரைத் தூக்கி நிறுத்த முயன்றார்.

(தொடரும்)

## நல்ல சேதி

தேர்தலின்போது, வன்முறை, கலவரம் போன்ற அசம்பாவிதங்கள் வாடிக்கையாகி விட்டன. ஆனால் அவை தேர்தலுக்குத் தேர்தல் குறைந்து வருவது நல்ல சேதி.

1991ம் வருட தேர்தலின்போது, 3363 அசம்பாவிதங்கள் நடந்தன. 96 தேர்தலில் இது 2467 ஆகக் குறைந்தது. 98 தேர்தலின்போது இது 2450 ஆகக் குறைந்தது.

அது போலவே தேர்தல் சம்பந்தப்பட்ட கலவரத்தில் இறந்தவர்கள் விவரம்

91 தேர்தல் – 272

96 தேர்தல் – 213

98 தேர்தல் – 65

இந்தத் தேர்தலில் எண்ணிக்கை சேர்த்து வைத்துக் கூடும் போலிருக்கிறது!

## அட அப்படியா?

சிக்கலே இல்லாத தேர்தல் என்று 1962 அக்டோபர் எட்டாம் தேதி வட கொரியாவில் நடந்த தேர்தலைக் குறிப்பிடலாம். நூறு சதவீத வாக்குப்பதிவு என்பது மட்டுமில்லை; அத்தனை பேரும் கொரிய தொழிலாளர் கட்சிக்குத்தான் வாக்களித்தார்கள்!

நன்றி: புக் ஆஃப் அமேசிங் ஃபாக்ட்ஸ்

## ஒரிசாவிலும் ஒரு லாலூ...

ஒரிசா முதலமைச்சர் கிரிதர் கோமாங் எட்டு தடவை ஒரிசாவின் கோரபட் தொகுதியிலிருந்து தேர்ந்தெடுக்கப் பட்டு பாராளுமன்ற உறுப்பினராக இருந்தவர். தற்போது ஒரிசா முதலமைச்சராக இருப்பதால், பாராளுமன்றத்துக்குப் போட்டியிட வாய்ப்பு இல்லை. பார்த்தார். ஹேமா என்கிற பெண்மணியை தமக்குப் பதிலாக தமது தொகுதியில் நிறுத்தி விட்டார். ஹேமா வேறு யாருமில்லை. கிரிதர் கோமாங்கின் திருமதியேதான்!



• ஜே.ஆர்.டி. டாட்டா



• கோமாங்

## கவிதை கார்னர்

தேர்தல்
ஐந்தாண்டுகளுக்கு
ஒருமுறை
இது அரசியல்
சாசனச் சட்டம்;
ஆண்டுக்கு
ஒருமுறை
இது அரசியல்
கட்சிகளின்
சதித்திட்டம்!

– போக்ரோடு புதுக்கவிஞன்

## அரசியல்வாதிகள் சிறந்த மனிதர்கள் இல்லையா?

### நடிகர்களுக்கு இன்னமும் மவுசுதான்!

**வா**ரன் பெடி.
அடுத்த ஆண்டு நடைபெறவிருக்கும் அமெரிக்க ஜனாதிபதித் தேர்தலில் இடதுசாரி ஜனநாயகக் கட்சியின் சார்பில் போட்டியிடப் போகிறார் இவர்.
இவர் ஒரு ஹாலிவுட் நடிகர்.

### இண்டர்நெட் தேர்தல். ஆனால்... அரசியல்வாதியா...? ஸாரி...

**மு**ம்பையின் பிரபல மிட்டே இதழ் இந்த நூற்றாண்டின் மிகச் சிறந்த மும்பைவாசி யார் என்று வோட்டளிக்கும்படி இண்டர்நெட்டில் ஒரு தேர்தலை அறிவித்தது. இவ்வருடம் டிசம்பர் நள்ளிரவு வரை யாரும் தமது வாக்கைப் பதிவு செய்யலாம். இதுவரை பதிவாகியுள்ள வாக்கு நிலவரப்படி, அதிக பட்ச வாக்குகள் பெற்று முதலிடம் வகிப்பவர் யார் தெரியுமா? பிரபல தொழிலதிபரான ஜே.ஆர்.டி. டாட்டாதான்! கணிசமான வாக்குகள் பெற்ற பிற மும்பைவாசிகளின் பட்டியல் இதோ!

- பாலகங்காதர திலகர்
- ரிலையன்ஸ் அம்பானி
- அமிதாப் பச்சன்
- லதா மங்கேஷ்கர்
- சச்சின் டெண்டுல்கர்

பட்டியலில், அரசியல்வாதிகளுக்கு இடமில்லையே! ஏன்?


• வாரன் பெடி


• நானா பல்சாவர்

### மிஸ் இந்தியா!

**நை**னா பல்சாவர். இவர் முன்னாள் மிஸ் இந்தியா, மாடல் மற்றும் அழகுக் கலை நிபுணர். இவரும் இந்தத் தடவை தேர்தலில் களமிறங்கியிருக்கிறார். நைனிடால் (உ.பி) தொகுதியின் பகுஜன் சமாஜ் கட்சி வேட்பாளர் இவர். இவர் கணவர் அக்பர் அகமத், பி.எஸ்.பி. கட்சியின் முக்கிய பிரமுகர். அவரும் அசம்கர் (உ.பி) தொகுதியில் போட்டியிடுகிறார். "என் கணவரது செல்வாக்கினால் கட்சி எனக்கு சீட் தரவில்லை. எனது பாபுலாரிடி காரணமாக, மாயாவதியே என்னை வேட்பாளராக்கினார்" என்கிறார் இந்த அழகிய வேட்பாளர்.

"வெற்றி வாய்ப்பு எப்படி?"

"இளைய தலைமுறையும், பெண்களும் எனக்கு வாக்களிப்பார்கள். வெற்றி நிச்சயம்" என்கிறார்.

# போட்டிக் கதை – 6



அவியூரில் இறங்கி பஸ் போன திக்கைப் பார்த்துக் கொண்டு நின்றேன். பஸ்ஸே தெரியாத மாதிரி புழுதி. புழுதி அடங்கும் வரை நின்று பார்த்தேன்; தெரியுமா என்று. அதற்குள் பஸ் புள்ளியாய்த் தேய்ந்து போனது. இந்த விளையாட்டு நான் சின்ன வயசிலிருந்து விருப்பமாய் ஆடிவரும் கண்ணாமூச்சி. எத்தனை முறை ஆடியும் பாட்டி வீட்டுக்கு அம்மாவுடன் வரும் போதெல்லாம் அலுக்காத விளையாட்டு. சின்ன வயசில் புகை விளையாட்டுப் போல் தெரிந்த மண் புழுதி, முப்பது வயதில் – அதுவும் இன்றுதான் தனியாக வருகிறபோது – எதையெதையோ ஞாபகப்படுத்தி விடுகிறது!

சாணம் தெளித்து, வீடு மெழுகிக் கோலம் போட்டு, விடியற்காலை நாலு மணிக்கே இட்டிலி சுடுவதற்கு அடுப்புமுன் அமர்ந்து கொண்ட என் பாட்டியின் அந்தக் காலம், பஸ்ஸை மூடுகிற புழுதியாய் மூடிக் கொள்கிறது.

வாழுகிற வரையிலும் நெருப்பில்



# அடிவாரம்

நா. வே. அருள்

வெந்துபோன பாட்டியை வாழ்ந்து முடிந்து போனதும் வேகவைப்பதற்காக மூட்டப் பட்ட சிதையின் புகையாய்க் கலைந்தும் போகிறது!

மனசு கிடந்து எப்படித்தான் துடித்தா லும் என்ன ஆகிவிடப் போகிறது? இறந்து போன பாட்டி "பேரா" என்று வாய்குளிர மீண்டும் கூப்பிடத்தான் கூடுமா?

இறக்க முடியாத பூட்டால் இதயத்தைப் பூட்டிவைத்து, இது என்ன நாடகம்?

என் சிதை வளர்வதற்குள் எத்தனை முறை எரியூட்டப்படுவனவோ என் பாழாய்ப் போன பழைய ஞாபகங்கள்?

அறுத்து எறிந்து விடுவது அவ்வளவு சுலபமாயில்லாதபோது இணைத்து ஏன் கட்டி வைக்க வேண்டும்? யார் கட்டி வைத் தது?

இந்த ஊரை நினைக்கும்போதெல்லாம் ஏன் கள் ஊறுகிறது?

ஒவ்வொரு அதிகாலையிலும் கூவி எழுப்பிய குயில்களின் ராக ஆலாபனையா என் மனசைப் பிழிந்து கொண்டிருப்பது?

நண்பர்களோடு தின்று சப்பிப் போட்ட மூக்குச் சளிப் பழங்கள் இன்னுமா ஜீரணமா காமல் என் வயிற்றில் அப்படியே தங்கி விட்டன?

செங்கற்களை அடுக்கி ரயில் விளை யாட்டு ஆடிய வீரப்பன் யாரையோ இழுத் துக் கொண்டு ஓடிவிட்ட பின்பும் ஏன் இந்த ஊருக்குள் நுழைகிறேன்?

தெருக்களில் 'லாரி' - ராலி - விளை யாட்டு ஆடிய நண்பன் இந்த ஊரைத் திரும்பியே பார்க்காமல் சென்னையில் செட்டிலாகிவிட்ட பின்பு, நான் மட்டும் ஏன் இன்னும் இந்த ஊரில் பாதத் தடங் களைத் தேட விரும்புகிறேன்?

ஊருக்கு வந்ததும் வராததுமாய்ப் பனந் தோப்புக்குக் கூட்டிச் செல்லும் பழைய ஆட்கள், சிதறு தேங்காயாய் ஊருக்கு ஓர் ஆளாய்ப் போன பிறகும் எந்த நுங்கு உறிஞ்ச இப்போது போய்க் கொண்டிருக்கிறேன்?

எதுவோ எங்கேயோ சிக்கிக் கொள்கிறது! சிக்கலை அவிழ்க்கும் முன் வாழ்க்கை முடிந்து விடுகிறது. ஒரு ஜீவநதியில் சிரங் கைத் தண்ணீர் கூட வாய்க்காமலும் போக லாம். தாகத்திற்கு சாந்தி விதிக்கப்பட்டுத் தான் இருக்கணுமா என்ன?

அவியூரில் பாட்டி கலந்திருக்கிறாள். அவள் கடைசியாய் விட்டுச் சென்ற மூச்சு

எந்தத் திசையில் ஓட்டிக் கொண்டிருக்குமோ? அதற்குத்தான் நுரையீரல் விரிய விரிய தில்லியிலிருந்து வந்திருக்கிறேன்.

நிழல்களுக்காக நட்டு வளர்த்தவள் எந்த மரத்தின் கீழும் இளைப்பாறாமலேயே போய் விட்டாள்.

பாட்டி போட்டோவே கிடையாது.

ஆனால் இதையாவது பத்திரமாய் வைத்திருக்கிறேன். வயிற்றைக் கழுவ தில்லியில் எல்.டி.சி.யாய் எழுதி வைக்கப்பட்ட என் தலையெழுத்தைத் தொலைத்துக் கொண்டிருந்தபோது, பாட்டியின் வைத்தியத்திற்காகப் பணம் அனுப்பினதுக்காகப் பாட்டியின் இடதுகைப் பெருவிரல் பதிந்த பண



"எங்கள் கட்சித் தொண்டர்கள் கள்ள வோட்டுப் போட முயன்றதாகக் கைது செய்யப்பட்டார்கள் என்பதைத் திட்டவட்டமாக மறுக்கிறேன்! கள்ள வோட்டுப் போட பல மாதம் பயிற்சி பெற்ற அவர்கள், நிச்சயம் மாட்டி இருக்க மாட்டார்கள்!"

– சக்தி. சரவணன்

விடை ரசீது.

பேண்ட் பாக்கெட்டிலிருந்து எடுத்துப் பெருவிரல் ரேகையைப் பார்த்து மீண்டும் பத்திரமாக வைத்துக் கொள்கிறேன். நாம் தொலைந்து போகிறவர்களாக இருந்தும் எதையாவது பத்திரப்படுத்தத் தோன்றி விடுகிறது.

பாட்டியின் விரல் ரேகையில் அவளது ஆஜானுபாகுவான அழகும் கம்பீரமும் மின்னும் கறுப்பு வண்ணத்தில் விஸ்வரூபமெடுத்து வளர்ந்து கொண்டேயிருக்கிறது!

நான் பச்சை மண்ணாய் விழுந்தது பாட்டி வீட்டில்தானாம்! அம்மா சொல்வாள். பாட்டியின் கைக்கதகதப்பு என் சதைக்குள் ஊறிவிட்டிருக்கிறது.

வீட்டு முகப்பில் பெரிய திண்ணை. திண்ணையை ஒட்டி நீண்ட கொட்டடி. கதவுக் குப்பின் நடை. நடை முடியுமிடம் இடது புறம் திரும்பினால் சமையலறை. அடுத்தடுத்து இரண்டு அறைகள். நடையைத் தாண்டி வாசல் பக்கம் போனால் பெரிய தோட்டம். அவரை, புடலை படலைகள். கொஞ்சம் தள்ளிக் கத்தரிப் பாத்திகள். வலதுபுறம் பூசணி, சுரைக் கொடிகள். இடப்பக்கக் கோடியில் சாக்கடை. பித்தளை அண்டாக்களும் பானைகளுமாய் நிறைந்திருக்கும்.

பாட்டிக்குக் கல்யாணம் வெகு விமரிசையாய் நடந்திருக்கிறது. வெத்திலைச் சுருட்டு, நெத்திச்சுட்டி, புடைதாங்கி, பில்லணை, ஒட்டியாணம், குவலை, அலுக்கு, முருக்கு என்று அத்தனை நகைகளைப் போட்டுக் கல்யாணம் செய்தது அந்தச் சுத்துப்பட்டுக் கிராமங்களிலேயே அவங்க வீட்டில்தானாம்.

பாட்டி சொன்னதில்லை. தாத்தாதான் சொல்லியிருக்கிறார். சிலர் ஏன் சொல்லவில்லை என்பதும் சிலர் ஏன் வலியச் சொல்லுகிறார்கள் என்பதும் பூடகமாகத்தான் இருக்கிறது.

தன் ஒரே மகளுக்கு – என் அம்மாவுக்கு – நிச்சயதார்த்தம் நடக்கிற நாளில் பெரிய அசந்தர்ப்பம் நடந்து விட்டிருக்கிறது. வெற்றிலை பாக்கு, மாலை, மனிகையெல்லாம் வாங்கி வர தாத்தா மைத்துனனுடன் – பாட்டியின் தம்பியுடன் – செஞ்சி போயிருக்கிறார். மைத்துனருடன சேர்ந்து தாத்தாவும் ஃபுல் குடி. அப்போதெல்லாம் கெடுபிடி ஜாஸ்தி. வாயை ஊதச் சொல்லி போலீஸ் ஜீப்பில் ஏற்றிக் கொண்டு சென்று விட்டது. நதி தேவைப்படுபவர்களுக்கு நாணல்களைப் பற்றி என்ன கவலை?

இரண்டு பிள்ளைகளும் 'நஞ்சானும் குஞ்சானுமாய்' இருந்திருக்கிறார்கள்.

"பொறுப்பில்லாதவனுங்க போய்த் தொலையட்டும்.

நான் இருக்கேன் என் மவளுக்கு!"

சேலையைத் தூக்கிச் செருகிக் கொண்டு அத்தனை பேருக்கும் இனுக்குக் குறையாமல் பந்தி நடத்தி ஒப்புத் தாம்பூலம் மாற்றி அனுப்பியிருக்கிறாள்!

என்ன மாயமோ அது? சுடரும் கற்பூரத்தையெடுத்து வாயில் போட்டுக் கொள்கிறவர்கள் நாக்கு சுட்டுக் கொள்வதில்லை. பார்க்கிறவர்கள் என்னபாடு படவேண்டியிருக்கிறது?

பாட்டியின் தம்பி அக்கான் வீட்டுக்காரனுக்குத் தண்ணியை ஊத்தி நகைகளையும் சொத்துக்களையும் எழுதி வாங்கிக்

கொண்டு வீட்டை விட்டே துரத்தியடித் திருக்கிறான்.

ரெண்டு ஆம்பிளைப் பிள்ளைகளோடு குளத்தங்கரை மலையடிவாரத்தில் குடிசை போட்டுக் கொண்டு நிர்க்கதியாக வந்து விட் டிருக்கிறாள்.

'வத்திப்பெட்டி' மாதிரி வீடு.

அப்போது குடும்ப ஜீவனத்துக்காக ஆரம்பித்ததுதான் பாட்டியின் இட்டிலிக் கடை.

கண்ணிமை காலத்தில் அடுப்படிப் பக் கமே போகாதவள், கடைசி வரைக்கும் இட்டிலி வியாபாரத்தில் குடும்பத்தைக் கரைசேர்த்திருக்கிறாள்.

எத்தனை நாக்குகளைச் சுழலவைத்திருக் கும் தெரியுமா பாட்டியின் நளபாகம்?

இட்டிலியைப் பிட்டு சாம்பாரில் முங்கி வாயில் போட்டால் போதும். வழுக்கிக் கொண்டு வயிற்றுக்குள் விழும். இட்டிலி யைச் சாக்கு வைத்து சாம்பார் சாப்பிட்ட வர்கள் அதிகம் பேர்.

மீந்த சாம்பாரில் சோற்றைக் கலந்து ஒரு வாய் போட்டால் தேவாமிர்தம்!

அவள் எதைச் செய்தாலும் அது மணக் கும். இட்டிலிப் பொடி செய்தால் ஏழு வீடு தாண்டி வாசமடிக்கும்.

அடுப்பே கதி என்று கிடந்ததால் ராமுழுக்க சாக்கடைப் பக்கம் போய் முதுகில் தண்ணீர் ஊற்றியபடியும் முனகிய படியுமே கிடப்பாள்.

சொற்பொழிவு வெறும் முனகலாய் முடிந்து போவதற்கு 'விதி' என்று ஒரு வார்த் தையிலேயே விளக்கத்தைத் தேடப் பிரயாசைப்படுகிறோம்.

ஒரு விஷயம் கடைசி வரையிலும் எனக்குப் புரியவேயில்லை. எல்லாவற்றுக் கும் காரணத்தை அறிந்து வைத்திருக் கிறோமா என்ன? வீட்டுக்குப் போகும் போது பாட்டி 'வா' என்று கூப்பிட்டதே யில்லை! ஆனால் பிறகு அவள் பேசும் வார்த்தை வரவேற்றபின் அடுத்துப் பேசும் வார்த்தையாயிருக்கும். மிக அன்யோன்ய மாக; உணர்ச்சி மீறலேயற்று.

முதன் முதலாய்ப் பலாப்பழமும், கொய் யாப்பழமும், முந்திரிப்பழமும் பாட்டி கையால்தான் சாப்பிட்டது. இப்போது அந்தப் பழங்களெல்லாம் பாட்டியின் ஞாபகங்களாகி விட்டன.

இன்னும் சிறிது நேரத்தில் பாட்டி புழங்கிய வீட்டில் நடந்து பார்த்து விடப் போகிறேன். எத்தனை பாதைகளை உரு

வாக்கிய காலடித் தடங்கள்?

நான் அனுப்பி வைத்த பணம் என் பாட்டியைப் பிழைக்க வைத்து விடும் என்று நம்பினேன். பிழைத்துவிட வேண்டுமென்று பிரார்த்தனை செய்தேன்.

சில நேரங்களில் நமது ரகசிய வேண்டுதல்கள் செவிடர்களின் காதுச் சவ்வுகளில் ஒட்டிக் கொள்ளுமோ என்னவோ?

பாட்டி வீட்டுக்கு முன் வீடுதான் கண்ணப்பன் அண்ணாச்சி வீடு. ஊருக்குப் போயிருந்தபோதெல்லாம் கதை சொன்னவர் இப்போது எதைச் சொல்லப் போகிறார்?

எல்லாமே முடிந்து விட்ட பிறகும் ஏதோ ஒரு தொடக்கத்தைத் தேடிக் கொண்டேயிருக்கிறோம்.

அவர் கவலை இறைத்தபடியே சொன்ன கதைகளும் நான் இட்டிலி சாப்பிட்டுக் கொண்டே கேட்ட பாட்டியின் பெருமூச்சுகளும் ஏதோ ஒரு புள்ளியில் சந்தித்துக் கொண்டன!

திண்ணையில் உட்கார்ந்தபடியே என்னை ஏறிட்டுப் பார்த்தார்.

"இப்போ எதுக்கு வந்தே?"

இந்தக் கேள்விக்குப் பதில் அவசியமேயில்லை.

பதிலை எதிர்பார்த்தும் அவர் கேட்கவில்லையே!

அவருக்கு ரகசியங்கள் பிடிக்காது. எல்லாவற்றையும் உடைத்துப் போடுவார்.

"புள்ளைங்க காப்பாத்தும்னு பாட்டி நெனைக்கலப்பா..."

வழுக்கு மரத்தில் ஏறி கொடிகட்ட முடியவில்லை; இறங்கி விழுந்தேன்.

"வைத்தியம் பலன் கொடுக்கலையா?"

இதைத் தவிர என்னால் எதைப் பேச முடிந்தது?

"நீ அனுப்புன பணத்துக்கு அவனுங்க ரெண்டு பேரும் அடிச்சிக்கிட்டானுங்க. பகுந்து குடுத்துட்டா மவராசி. அப்புறம் வைத்தியம் எப்பிடி பாக்கறது?"

இனி சொல்வதற்கும் கேட்பதற்கும் என்ன இருக்கிறது?

துளிர்த்த கண்ணீரைத் துடைத்துக் கொள்ளக் கைக்குட்டையை உருவி எடுத்தேன்.

பணவிடை ரசீது கீழே விழுந்தது.

பாட்டியின் கட்டை விரல்.

என் கண்ணீரைத் துடைக்கத்தான் நீளுகிறதோ?

# தேர்தல் மசாலா

எழுதிக் கொடுத்ததைப் படிக்கும் சோனியா காந்திக்கு பெல்லாரி எந்த மாநிலத்தில் இருக்கிறது என்பது கூட தெரியவில்லை. அவருடைய தனி 'வெப் சைட்டி'ல் (சோனியா காந்தி ஆன்லைன் காம்) ஒரு பெங்களூர் மாணவர், "நீங்கள் தெற்கில் குறிப்பாகப் பெல்லாரியை ஏன் தேர்ந்தெடுத்தீர்கள்?" என்று கேட்டபோது, "இந்திராஜியின் காலத்திலிருந்தே ஆந்திர மக்களிடம் எங்கள் குடும்பத்துக்கு இருந்து வரும் நெருக்கம், பாச உணர்வே காரணம்" என்று பதிலளித்தார்.



பெல்லாரி தொகுதியில் சில பகுதிகளில் கடுமையான வறட்சியும் வறுமையும் நிலவுகிறது. பூமியிலிருந்து வெட்டி எடுக்கப்படும் தாதுப் பொருள் கட்டிகளை ஆண்களும் பெண்களும் நாள் முழுவதும் சம்மட்டிகளால் உடைத்துத் தூளாக்குகிறார்கள்.

அக்குவியலில் இரும்புச் சத்து இருந்தால் கூலியாக நபருக்கு ரூ.25 கிடைக்கும். இல்லாவிடில் எதுவுமே இல்லை. அன்று பட்டினிதான். இப்பகுதிகளில் பசியாற அரிசிப் பொரியை வஞ்சமாகக் கொடுத்து வேட்பாளர்கள் அப்பாவிகளிடம் வாக்குகளைப் பெற முடிகிறது!

ஆதாரம்: 'இந்தியன் எக்ஸ்பிரஸ்'

அ. ஷண்முகசுந்தரம்

(43-ம் பக்கத் தொடர்ச்சி)

பதில் வரவில்லை. மெதுவாக அவனைத் தொட்டாள். 'விரதம் முடியவில்லையா இன்னும்?' என்றாள் புன்சிரிப்புடன்.

அவன் எழுந்து உட்கார்ந்தான். அவள் அவனை ஆசையுடன் அணைத்துக் கொண்டாள். அவன் அவள் கைகளை மெதுவாக விலக்கிவிட்டு சற்று ஒதுங்கி நின்றான். 'விரதம் முடியவில்லை. முடியவும் முடியாது.'

'ஏன்?'

அவன் மௌனமே பதில்.

'பதில் சொல்லுங்கள், சொல்லுங்களேன்.' அவனருகில் நின்று அவனை உலுக்கினாள் நளினி. அவன் மௌனமே பதிலாய்த் தொடர்ந்தது.

'புரிகிறது– நன்றாகப் புரிகிறது. பின் எதற்காகக் கல்யாணம் செய்து கொண்டீர்கள்?' அவள் குரல் ஓங்கி வெடித்து விம்மலாய் முடிந்தது.

'உனக்கு நான் என்ன குறை வைத்தேன், சொல். நம் இருவருக்கும் இடையே உள்ள அன்பு உனக்குப் புரியவில்லையா...'

'புரிகிறது. ஆனால் எனக்குக் குழந்தை வேண்டும்.'

'வித்து வங்கியில் வாங்கிக் கொள்ள முடியும்.'

'உங்களுக்கு வெட்கமாக இல்லை இப்படிச் சொல்ல...? அப்பாவுக்கு விரதம் என்று சொல்லி என்னை எதற்காக ஏமாற்றினீர்கள்?'

'எனக்கு அப்பாதான் உண்டு. அம்மா கிடையாது.'

'புரியவில்லை. நீங்கள் பிறந்ததும் இறந்து விட்டாரா?'

'இல்லை. அம்மா எனக்குக் கிடையவே கிடையாது.'

'அப்படியென்றால் அப்பா வயிற்றில் பிறந்தீர்களா?' உரக்கச் சிரித்தாள் நளினி. அவனுக்குப் பைத்தியம் பிடிக்கும் போலிருந்தது.

'அப்பா வயிற்றில் பிறக்கவில்லை. ஆனால் அவர்தான் என்னைத் தோற்றுவித்தவர்.'

'எப்படி?'

'நான் ஒரு ரோபோட்...'

அவள் அதிர்ச்சியில் சிலையாக நின்றாள்.

'என் அப்பா ஒரு கம்ப்யூட்டர் நிபுணர். ஒரு ரோபோட்டை மனிதப் பிரதியாக உருவாக்குவதை ஒரு சவாலாக ஏற்று என்னைப் பிறப்பித்தார். அவரால் எனக்கு உணர்ச்சிகளைத் தர முடிந்தது. தன்னுணர்வு (consciousness) ஏற்படுத்தித் தர முடிந்தது. தன்னுடைய அரிய கண்டுபிடிப்பை உலகுக்கு அறிவிக்கலாம் என்று நினைத்தவர், அது என்னை எந்த அளவுக்கு பாதிக்கும் என்று உணர்ந்தார். என்னை வளர்ப்பு மகனாக ஏற்று, அவரது சாதனையை உலகத்துக்குச் சொல்லாமலேயே போய் விட்டார். அவர் ஒரு இந்தியர், தமிழர் என்பதால் நான் ஆறு இந்திய மொழிகள் பேச படிக்க ப்ரோக்ராம் செய்யப்பட்டிருக்கிறேன். மனிதர்கள் செய்கிற எல்லா காரியங்களையும் என்னால் செய்ய முடியும், 'அந்த'

## குவிஸ் போட்டி – 6 முடிவு!

### சரியான விடைகள்:

1) பச்சேந்த்ரி பால் 2) மீரா நாயர் 3) பம்பாய் 4) அருந்ததி ராய் 5) ஆர்த்தி சாஹா 6) நவீன நாட்டியம் 7) அன்னை தெரஸா 8) இந்தியாவின் முதல் பெண் உயர் நீதிமன்ற நீதிபதி

சரியான விடைகளை ஏராளமான வாசகர்கள் எழுதியிருந்தார்கள். அவர்களுள் குலுக்கல் முறையில் தேர்ந்தெடுக்கப்பட்டு ரூ. 200 பரிசு பெறும் அதிர்ஷ்டசாலி:

திருமதி ராஜேஸ்வரி ரவிசங்கர்,
பிளாட் 80, ராஜீவ் காந்திநகர்,
சௌரிப்பாளையம்,
கோயம்புத்தூர் - 641 028

ஒன்றைத் தவிர. நான் செய்தது தவறுதான். என்னை மன்னித்து விடு, நளினி.'

சிறிது நேர அமைதிக்குப் பின் நளினி பேச ஆரம்பித்தாள். 'நான் சொர்க்க பூமியாகிய அமெரிக்காவுக்கு வர வேண்டும் என்று அபிலாஷைப்பட்டேன். உன்னால்... மன்னிக்கவும், உங்களால், அது நிறைவேறியது...'

விவேக் இடைமறித்தது. 'நீ என்றே சொல். நான் இயந்திரம்தான், மனிதனாக முடியாது.'

'என்னதான் 99.9% மனிதனாக இருந்தாலும், உன்னிடம் இல்லாத அந்த .1% என் போன்ற சாதாரணப் பெண்களுக்குப் பெரும் குறையாக இருக்க முடியும் என்பது உண்மை. நான் காரைக்கால அம்மையார்

இல்லை. அதே சமயத்தில் உன் மென்மையான அன்பை என்னால் உணர முடிகிறது. நான் வரித்த கணவன் மூலம் எனக்குக் குழந்தை வேண்டுமே தவிர, வங்கியில் பெற வேண்டிய சமாச்சாரம் இது இல்லை என்பதை நீ உணர வேண்டும்.'

விவேக் சிறிது நேரம் மௌனமாக இருந்தான். 'நான் ஒரு யோசனை சொல்கிறேன். ஸெயின்ட் லூயிஸ் என்ற நகரத்தில் என் ஆத்மார்த்த நண்பன் ஒருவன் இருக்கிறான். என் அப்பாவின் தலை மாணாக்கன். கல்யாணம் ஆகாதவன். நான் சொன்னால் தட்ட மாட்டான். அவனை நீ...' அவன் சொல்லி முடிப்பதற்குள் அவள் இடைமறித்தாள் : 'அதெப்படி உன்னைக் கல்யாணம் செய்து



"வேட்பாளர் பின்னால பெரும் கூட்டமே அலையுதே. தொண்டர்களா?"
"தேர்தல் செலவுக்கு அவருக்கு கடன் கொடுத்தவங்க!"
— அம்பை தேவா

கொண்டபின் வேறொருவனை...'

'ப்ளீஸ்... நீ தமிழ்ப் பெண்தான், ஒப்புக் கொள்கிறேன். கல்லென்றாலும் கணவன், புல்லென்றாலும் புருஷன் என்ற பரம்பரையில் வந்தவள். வாஸ்தவம்தான். ஆனால் உங்கள் சாஸ்திரத்தில் ரோபாட்டைப் பற்றிக் குறிப்பு ஏதும் இல்லை. அதனால், உன் கற்புக்கு எந்தவிதக் களங்கமும் இல்லை. விவாகரத்து செய்ய வேண்டிய அவசியமும் இல்லை. ரோபாட்டைக் கல்யாணம் செய்து கொள்வது அமெரிக்கச் சட்டத்தில் செல்லாது. சரி, சொல். ஸெயின்ட் லூயிஸ் போகலாமா? உன் சந்தோஷம்தான் எனக்கு முக்கியம்.'

அவள் சிறிது நேரம் யோசித்து விட்டு சம்மதித்தாள். இருவரும் ஸெயின்ட் லூயிஸ் போனார்கள்."

"கதைதான் முடிந்து விட்டதே, இதில் என்ன புதிர் இருக்கிறது?" என்றார் தலைவர்.

"முடியவில்லை. இனிமேல்தான் தொடங்குகிறது" என்றார் பிரதிப்புசி ராஜன்.

"தொடங்குகிறதா? புதிரும் வேண்டாம், குதிரும் வேண்டாம். நான் நாற்காலியில் உட்காரப் போகிறேன்," என்றார் தலைவர்.

"சரி, உங்கள் கறுப்புப் பண நோட்டு..." என்று பிரதிப்புசிராஜன் இழுக்கவும், "வேண்டாம், வேண்டாம், கதையைச் சொல்..." என்று நூற்றுக்கணக்கான குரல்கள் ஒலித்தன.

பிரதிப்புசி ராஜன் தொடர்ந்தார்.

"ஸெயின்ட் லூயிஸ் மெரிலின் ஹைட்ஸ் என்ற இடத்தில் ஓர் அப்பார்ட்மெண்ட்டில் தானுண்டு தன் கம்ப்யூட்டர் உண்டு என்று வசித்து வந்த விவேக்கின் நண்பன் ரவியைச் சந்தித்து விவரத்தையெல்லாம் விளக்கமாகச் சொல்லி முடித்தது விவேக். ரவி சற்று நேர மௌனத்திற்குப் பிறகு கேட்டான் : 'கல்யாணம் அவசியம்தானா, இரண்டு பேரும் சேர்ந்து வாழ்ந்தால் போதாதா? நான் கல்யாணம் செய்து கொள்வதில்லை என்றிருந்தேன். என் குருநாதருக்காக உன்னை ஏற்றுக் கொள்ள வேண்டும். இதுதான் நான் அவருக்குச் செய்யும் கைம்மாறு...'

'நோ... தயவுசெய்து கடமை என்று எதையும் செய்ய வேண்டாம். கடமை ஒரு பெரும் சுமை. உங்கள் விருப்பப்படி....' என்று நளினி கூறுவதற்குள் அவன் கைகளை உயரத் தூக்கி ஆட்சேபித்து விட்டுச் சொன்னான் : 'சரி, உன்னை ஏற்றுக் கொள்கிறேன். கல்யாணமும் செய்து கொள்கிறேன். போதுமா?'

"ஸெயின்ட் லூயிஸ் கோவிலில் திருமணமும் நடந்தது. இருவரும் குடும்பம் நடத்தத் தொடங்கினார்கள். விவேக் ஸான் ஹோஸே போய் விட்டது."

இவ்வாறு சொல்லிவிட்டு சற்று நேரம் மௌனமாக இருந்தார் பிரதிப்புசி ராஜன்.

"இதிலென்ன புதிர்?" என்றார் தலைவர்.

"கல்யாணமான ஆறு மாதத்துக்குள் நளினி ஸான் ஹோஸேயிலிருந்த விவேக்கிடம் திரும்பிப் போய் விட்டாள். ஏன் அப்படிப் போனாள்? இந்தப் புதிரை நீங்கள் விடுவிக்காவிட்டால், அந்த நாற்காலியில் உங்களால் உட்கார முடியாது... ஹூம்... பதில்

சொல்லுங்கள்."

தலைவர் யோசித்தார்.

"ரவியும் ஒரு ரோபோட்" கூட்டத்தி லிருந்து ஒரு குரல் கேட்டது.

"உங்கள் யாரையும் நான் கேட்கவில்லை. தலைவரைக் கேட்கிறேன். நீங்கள் சொன்ன பதிலும் தவறு."

தலைவர் கண்களை மூடிக் கொண்டு சிந்தித்தார்.

"சீக்கிரம் பதில் சொல்லுங்கள். ராகு காலத்துக்கு இன்னும் பத்து நிமிஷங்கள் தான் இருக்கின்றன," என்றார் அரசாங்க ஜோஸ்யர்.

தலைவர் சொன்னார் : "எனக்குப் பதில் தெரியவில்லை."

பிரதிப்புசி ராஜன் பெரிதாக நகைத்து விட்டுச் சொன்னார். "சரி, நானே புதிரை விடுவிக்கிறேன். காலையில் 5:20க்கு எழுந்திருப்பான் ரவி. பதினைந்து நிமிஷம் தேகப் பயிற்சி. பிறகு ஸ்நானம். 7:10க்கு காலை உணவு. 7:30க்கு அலுவலகம். சாலை விதிகளையெல்லாம் அனுசரித்து, அதே வீதியில், அதே வேகத்துடன் சென்று, எல் லோருக்கும் 'குட்மார்னிங்', 'தாங்க்யூ' என்று அதே தொனியில் சிறிது கூட குரல் ஏற்றத் தாழ்வில்லாமல் சொல்லிவிட்டு, வேலை முடிந்ததும், மாலை 6:15க்கு வீட்டுக்கு வந்து, தினசரி பார்க்கும் அதே நகைச்சுவை நிகழ்ச்சிகளைப் பார்த்துச் சிரித்து, 9:30க்குப் படுக்கப் போய், 10:30க்கு நளினியை எழுப்பி, எல்லாம் முடிந்ததும் 10:40க்குத் தூங்கப் போய், அடுத்த நாள் காலை 5:20க்கு எழுந்து, பதினைந்து நிமிடங்கள் தேகப் பயிற்சி செய்து விட்டு, பிறகு ஸ்நானம்..."

"போதும், போதும், 'போர்' அடிக்காதே," என்ற கூக்குரல்கள் எழுந்தன.

குரலில் குதூகலம் பொங்க தலைவர் திடீரென்று குறுக்கிட்டார். "நான் புதிரை விடுவித்து விட்டேன்... பதில் சொல்லவா?"

"சொல்லுங்கள்..."

"மனித இயந்திரத்தைக் காட்டிலும் இயந்திர மனிதனே தேவலாம் என்று நளினி விவேக்கிடம் போய் விட்டாள்... சரிதானே?"

"ரொம்ப சரி. இயந்திரத்திடம் அன்பு இருந்தது. பரிவு இருந்தது. தன்னுணர்வு இருந்தது. .1%ஐத் தியாகம் செய்து விட்டு 99.9% போதும் என்று போய் விட்டாள் நளினி."

"உங்கள் கறுப்புப் பணம் இந்த முறை தப்பித்தது. நாற்காலியில் உட்காருங்கள்," என்றார் பிரதிப்புசி ராஜன். ◯

# மாணவர்கள் காட்டும் இலக்கியக் காட்சிகள்...


• ஸ்ரீகாந்த்


• சதீஷ்


• ஸ்ரீராம்


• ஜெகதீஷ் பட்

**வா**சகர்களுக்காக 'இலக்கியத்திலிருந்து' இம்முறை கேள்விகளைத் தேர்வு செய்த அந்த நால்வரும் சென்னை சமஸ்கிருத கல்லூரி மாணவர்கள். "உங்கள் மனதைக் கவர்ந்த இலக்கிய காட்சி அல்லது வர்ணனை எது?" என்று கேட்டோம்.

ஸ்ரீஹர்ஷன் எழுதியுள்ள 'நைஷதம்' என்ற நூலில் நளனை அற்புதமாக வர்ணிக்கும் கவியின் திறனை எண்ணி வியந்தார் சதீஷ். நளனிடம் உள்ள நல்ல குணங்கள் எவை என்றறிய பிரம்மா ஒவ்வொரு நல்ல குணத்தையும் எண்ணிப் பார்த்து, அது அவனிடம் இருந்ததால் ஒரு 'டிக்' செய்தாராம். சகல நல்ல குணங்களும் நிரம்பிய நளனின் உடலில் அத்தனை 'டிக்' குறிகளும் தான் ரோமங்களாகக் காட்சியளிக்கின்றனவாம். ரோமங்களின் வேர்ப்பகுதியில் சின்னதாகக் கரும்புள்ளிகள் இருக்கின்றனவே அவை, ஒவ்வொரு தீய குணத்தையும் பட்டியலிட்டு அவற்றில் நளனிடம் இல்லாதவற்றுக்கெல்லாம் வைத்த சிறு புள்ளிகள் தான்."

சாகுந்தலத்தில், கணவனுடன் சகுந்தலை வாழக் கிளம்பும்போது கண்வமகரிஷி "செடிகளுக்கு நீர் விடாமல் நீ சாப்பிட மாட்டாய்; அவற்றில் பூக்கள் உருவாகும்போது அவற்றைப் பறிக்காது செடியிலேயே இருக்கவிட்டு அதைக் கொண்டாடுவாய்" என்றெல்லாம் அவள் மென்மையை எடுத்துக் கூறிவிட்டு, கணவன் வீட்டில் அவள் நடந்து கொள்ள வேண்டிய முறைகளைப் பற்றியும் உபதேசிப்பார். பெரியோரிடம் மரியாதை, துஷ்யந்தனின் மூத்த மனைவிகளிடம் தோழமை

இவற்றுடன் அங்குள்ள வேலையாட்களிடமும் விட்டுக் கொடுத்துப் பழக வேண்டும் என்பது வரை கூறுவது தமக்குப் பிடித்தமான பகுதி என்றார் ஸ்ரீராம்.

அதே காளிதாசனின் ரகுவம்சத்தில் காமதேனுவின் பெண்ணான நந்தினிக்கு திலீபன் சேவை செய்வதை ஸ்ருதிகளை ஸ்ம்ருதிகள் தொடர்வது போல் திலீபன் நந்தினியைத் தொடர்ந்தான் என்று கூறுவதும், ஒருவருக்கு ஆபத்து எனும்போது வேறு எதைப் பற்றியும் யோசிக்காமல் காப்பாற்றுபவனே க்ஷத்ரியன் என்று குறிப்பிடுவதையும் ரசித்து நினைவு கூர்ந்தார் ஸ்ரீகாந்த்.

தவம் செய்யும் பார்வதி தேவியின் மீது சில மழைத்துளிகள் விழுகின்றன. அவை புருவங்களின் மீது சிறிது நேரம் தங்கி, பிறகு கண்ணோரமாக முத்துக்கள் போலிறங்கி, மார்புப் பகுதியில் பட்டுத் தெறித்து வயிற்றுப் பகுதியில் உள்ள மூன்று சிறு ரேகைகளின் புறமாக வந்து சேருகின்றன என்கிறது குமாரசம்பவம். அதாவது அகன்ற இமைகள் என்பதிலிருந்து பிற அத்தனை சாமுத்ரிகா லட்சணங்களும் பெற்றிருந்தால்தான் மழைத்துளியால் அப்படியொரு பாதையைத் தேர்ந்தெடுக்க முடியுமாம். இந்த இலக்கிய இன்பத்தை எண்ணி மகிழ்ந்தார் ஜெகதீஷ்.

இலக்கியங்களின் இன்றைய பயன்களையும் விவரித்தனர். "ஹரிச்சந்திரனின் நாடகம்தானே காந்தியின் வாழ்வில் ஒரு திருப்புமுனையாக அமைந்தது? வேதங்கள் பயில்வது சுலபமல்ல. ஆனால் அவற்றின் சாரத்தைக் கதைகளாகக் கொடுக்கும்போது எளிதாக மனதில் பதிகிறது. துன்பம் வரும்போது எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பதை நேரடியான நீதி போதனைகள் மூலமாகவும், கதாபாத்திரங்களின் நடைமுறை மூலமாகவும் இலக்கியக் காவியங்களிலிருந்து தெரிந்து கொள்ளலாமே."

அருகே உள்ள கூப்பனில் கேள்விகளும் நீங்கள் 'டிக்' செய்து தேர்ந்தெடுக்க வேண்டிய பதில்கள் அடங்கிய தொகுப்பும் உள்ளன. அத்தனை கேள்விகளுக்கும் சரியான விடையை 'டிக்' செய்பவருக்கு ரூ. 200 பரிசு. பலர் செய்து விட்டால் குலுக்கல். ஜெராக்ஸ் கூப்பன் செல்லாது என்பதும் ஆசிரியர் தீர்ப்பே இறுதி என்பதும் உங்களுக்குத் தெரியாததா என்ன?

**கடைசி தேதி : 11.10.99**

— ஜி.எஸ்.எஸ்.

படங்கள் : வெங்கடேஷ்

## குவிஸ் கூப்பன் – 9

1. நகுலனின் தாயின் பெயர் என்ன?

☐ காந்தாரி ☐ குந்தி ☐ மாத்ரி

2. ஆஞ்சநேயருக்கு அவரது தாய் தந்தையர் வைத்த பெயர் என்ன?

☐ சுந்தரன் ☐ சத்ருக்னன் ☐ வீரசூரன்

3. வால்மீகி ராமாயணத்தில் விபீஷணனின் மகள் பெயர் சரமா. அவளைக் கம்பர் எப்படிக் குறிப்பிடுகிறார்?

☐ பதுமகோமளை ☐ ஊர்மிளை

☐ திரிசடை.

4. ராமாயணத்தைத் தழுவி காளிதாசரால் இயற்றப்பட்ட நூல் எது?

☐ மேகசந்தேசம் ☐ சாகுந்தலம்

☐ ரகுவம்சம்

5. அர்ஜுனனுக்கும் சித்ராங்கதைக்கும் பிறந்த மகனின் பெயர் என்ன?

☐ பப்ருவாகனன் ☐ அபிமன்யு

☐ கடோத்கஜன்

6. அசோகவனத்தில் ராமன் கொடுத்தனுப்பிய எந்த ஆபரணத்தை அனுமன் சீதையிடம் அளிக்கிறான்?

☐ சூடாமணி ☐ மேகலை ☐ கணையாழி

7. சகுந்தலையின் தாய் யார்?



☐ ஊர்வசி ☐ மேனகை

☐ திலோத்தமை

8. கிருஷ்ணருடைய தேரோட்டியின் பெயரென்ன?

☐ அர்ஜுனன் ☐ விதுரன் ☐ தாருகன்

பெயர்: ..............................................

முகவரி: ..............................................

..............................................

..............................................

# பதற்றத்தில் ஆளும் கட்சி எம்.எல்.ஏக்கள்!

●● "அமைச்சர் துரைமுருகன் சுறுசுறுப்பானவர். புள்ளி விவரங்களை விரல் நுனியில் வைத்திருப்பவர். அப்படிப்பட்ட திறமைசாலியான துரைமுருகன், தேர்தல் பிரசாரத்தில் பிஸியாக இருந்த காரணத்தினாலோ என்னவோ, காவிரிப் பிரச்னை இப்படி விஸ்வரூபம் எடுக்கும் என்பதைக் கணிக்கத் தவறிவிட்டார்" என்று குற்றம் சாட்டுகிறார்கள் ஆளும் கட்சிப் பிரமுகர்கள். இந்த நிலையில், பொதுப்பணித் துறையிலிருந்து 'நீர்ப்பாசனத்தை' தனியாகப் பிரித்து அதற்கென தனி அமைச்சர் ஒருவரை நியமித்தால் நன்றாக இருக்கும் என்ற எண்ணம் உயர் அதிகாரிகள் மத்தியில் இருக்கிறது. கர்நாடகத்தில் நீர்ப்பாசனத்துக்கென்று தனி அமைச்சர் இருக்கிறார். "பொதுப்பணித்துறை கடல் போன்ற துறை. அதிலிருந்து நீர்ப்பாசனத்தைப் பிரித்தால்தான் காவிரி போன்ற விவகாரங்களில் தீவிர தொடர் கண்காணிப்பு இருக்க வாய்ப்பு உள்ளது" என்றார் ஓர் அதிகாரி.

●● தனி நீதிமன்றங்களிலுள்ள ஊழல் வழக்குகளில் அரசாங்க சாட்சிகள் பல்டி அடிப்பது கண்டு ஆளும் கட்சித் தலைமை அதிருப்திக்கு உள்ளாகி இருக்கிறது. சமீபத்தில் செங்கோட்டையன் மற்றும் சத்தியமூர்த்தி வழக்குகளில் அரசுத் தரப்பு சாட்சிகள் பல்டி அடித்தார்கள். இது தவிர, நிலக்கரி மற்றும் கலர் தொலைக்காட்சி ஊழல் வழக்குகளில், முறையே ஜெயலலிதாவும் நெடுஞ்செழியனும் விடுவிக்கப்பட்டதும் புலனாய்வு ஏஜென்ஸிகளின் திறமையின்மையை பளிச்சென்று எடுத்துக் காட்டியிருப்பதாக ஆளும் கட்சியினர் சொல்கிறார்கள். "அடிக்கடி தேர்தல் வரும் நிலையில் - அரசியல் காற்று எந்தப் பக்கம் வீசும் என்று தெரியாத நிலையில் சில 'அழுத்தமான' நடவடிக்கைகளை மேற்கொள்ள சற்று தயக்கமாகத்தான் உள்ளது" என்று நம்மிடம் சொன்னார் இடைநிலையிலுள்ள புலனாய்வு அதிகாரி ஒருவர். இதற்கிடையில் குற்றப் புலனாய்வுத் துறையை பலப்படுத்தி, ஊழல் வழக்குகளை 'நன்றாக'க் கையாள திறமையான அதிகாரிகளை தேடிக் கொண்டிருக்கிறார்களாம்.

●● தூத்துக்குடி ஆளும் கட்சி சட்டமன்ற உறுப்பினர் பெரியசாமி மீது 'சொத்து சேர்ப்பு வழக்கு' தாக்கல் செய்யப்பட்டிருக்கிறது. இதைப் பற்றி விசாரிக்குமாறு உயர்நீதிமன்றம் போலீஸுக்கு உத்தரவிட்டிருக்கிறது. பெரியசாமி தூத்துக்குடி மாவட்ட மத்திய கூட்டுறவு வங்கியின் தலைவராகவும் இருக்கிறார். வேறு பல அரசு மற்றும் வங்கி நிறுவனங்களிலும் கடன் வாங்கி இருக்கிறார். இப்படிக் கடன் பெற்றவர்கள் மத்திய கூட்டுறவு வங்கித் தலைவர் பொறுப்புக்கு வரக் கூடாது என்று விதிகள் உள்ளனவாம். இது தவிர தாம் தலைவராக இருக்கும் வங்கியில் அவரே கடன் வாங்கி இருக்கிறார். இதுவும் ஒரு முறைகேடு என்கிறார்கள். தாம் கடன் வாங்கியுள்ளதை பெரியசாமியே ஒப்புக் கொண்டிருக்கிறார்.



• துரை முருகன்

'சாதாரணக் கூலியாக வாழ்க்கையைத் துவக்கிய பெரியசாமிக்கு இவ்வளவு சொத்து ஏது?' என்று வழக்கு போடப்பட்டிருக்கிறது. வழக்கை தாக்கல் செய்திருப்பவர் பி.ஹெச். பாண்டியன். இந்த வழக்கைத் தொடர்ந்து ஆளும் கட்சிப் பிரமுகர்களிடம் ஒரு பதற்றம் ஏற்பட்டுள்ளது. அந்தப் பதற்றத்துக்கு மற்றொரு காரணம் ஆளும் கட்சி எம்.எல்.ஏக்களின் சொத்துப் பட்டியலை எடுக்க உள்ளூர் அ.தி.மு.க.வினர் கேட்டுக் கொள்ளப்பட்டிருக்கிறார்கள். குறிப்பாக வட மற்றும் தென் சென்னையைச் சேர்ந்த இரண்டு ஆளும் கட்சி எம்.எல்.ஏக்கள் மீது சொத்துக் குவிப்பு வழக்கு தாக்கல் செய்யப்படலாம்.

●● செய்தி வாசிக்கும் 'வணக்கம்' பெண்மணிக்கு சமூக சேவகி என்ற அடிப்படையில் நிலம் ஒதுக்கியது வீட்டு வசதி வாரியம். இவர் எப்போது செய்தார் 'சமூக சேவை' என்று ஒதுக்கீட்டை எதிர்த்து கோர்ட்டில் வழக்கு தாக்கல் செய்யப்பட்டிருக்கிறது.

— சஞ்சயன்

**காதில் விழுந்தவை**

● ஏ.சுகுமார்,
காட்டுக்காஜனூர்.

? தீவிரவாதிகளின் வெடி குண்டுகளிலிருந்து தங்களைக் காத்துக் கொள்ள, தரையில் தவழ்ந்தபடியே வாக்குச் சாவடிக்குச் சென்று வாக்களித்த ஜம்மு பகுதி மக்கள் பற்றி?

! தலைவணங்குவோம், அவர்களுடைய வீரத்துக்கு. எல்லா வசதிகளும் பாதுகாப்பும் இருந்தும் வாக்குச் சாவடிக்குப் போகாதவர்கள் அவர்களைப் பற்றி அறிந்த பிறகாவது திருந்த வேண்டும்.

● வி.எஸ்.கோவிந்தன்,
மதுரை-1.

? ஆட்சியைப் பிடித்துவிடுவோம் என்ற நம்பிக்கை வந்தபோது, தி.மு.க. திராவிட நாட்டுப் பிரிவினைக் கொள்கையை நாட்டுநலன் கருதி கைவிட்டது. அதே போல், தற்பொழுது அதிவேகமாக உயர்ந்து வரும் பாரதீய ஜனதா கூட்டணி மூலம் ஆட்சியைப் பிடித்து விடும் பட்சத்தில், 'இந்துத்வா' கைவிடப்படுமா?

! கைவிட்டால் நல்லது; ஆனால் கட்சித் தலைவர்கள் அதற்குத் தயாரானாலும் அவர்களை ஆட்டி வைக்கும் சக்திகள் அதை அனுமதிக்காது. நமக்கிருக்கும் ஒரே நம்பிக்கை கூட்டணிக் கட்சிகள் லகானை இழுத்துப் பிடிக்கும் என்பதுதான்.

● சூர்யநிலா, சேலம்-2

? சிற்றிதழ்களில் தங்களைக் கவர்ந்தது?

! கணையாழி-முன்பு; காலச்சுவடு-இன்று.

● என். பாலகிருஷ்ணன்,
மதுரை-1.

?உண்மையிலேயே ஊழலை ஒழிக்க வேண்டும் என்று நினைத்துச் செயல்படும் கட்சி எது?

! அ.தி.மு.கவும் ராஷ்ட்ரீய ஜனதா தளமும்தான்; போதுமா!

● ப. இராம் முருகன், சிவகங்கை.

? இந்த ஆண்டு சுதந்தர தினம் ஞாயிற்றுக் கிழமை வந்ததால் சில பள்ளிக் கூடங்களில் சனிக் கிழமையே (ஆகஸ்ட் 14) கொடியேற்றியதைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்?

! இதேபோல் ஆயுத பூஜை திங்கள் கிழமையன்று வந்தால், சனி-ஞாயிறு விடுமுறை என்பதால் வெள்ளிக் கிழமையே ஆயுதபூஜை கொண்டாடுவது அரசு அலுவலகங்களின் வழக்கம். ஆக, தேச பக்தியும் இல்லை; தெய்வ பக்தியும் இல்லை. இது மிகவும் ஆபத்தானது.

## பா.ஜ.க. ஆட்சிக்கு வந்தால் இந்துத்வா கைவிடப்படுமா?

● எஸ். முரளி, குறிஞ்சிப்பாடி.

? அரசியல் வியாபாரமாகி விட்டது என்கிறாரே சோனியா காந்தி?

! தவறு! அரசியல் வியாபாரமாக வில்லை; அரசியல்வாதிகள் தான் வியாபாரிகள் ஆகிவிட்டார்கள்.

● எஸ். ராஜாராமன், ஆறுபாதி.

? வறுமையை ஒழிக்க வேண்டுமென்றால் ஐ.ஏ.எஸ். அதிகாரிகளை நீக்கினால் போதும் என மணி சங்கர் அய்யர் கூறுவது பற்றி...?

! 'எய்தவன் இருக்க அம்பை நோவது' என்பது இதுதான்.

● எல். துர்காதேவி, மங்கநல்லூர்.

? முன்பு ஒரு கல்கி இதழில் மேஜிக் பற்றிய கேள்விக்கு, 'ஆணை வெட்டி இரண்டாக்குவதும், பெண்ணைப்



• எழாத ஆட்சேபனை!



• கடப்பா ஞாபகத்தில்...



• 'மணி'யான பேச்சு!



• வரவால் வரவா?

பெட்டியில் வைத்துக் கத்திகளால் குத்துவதும் போஸ்டரில் பார்க்க அருவருப்பாயிருக்கிறதே என்று பதில் அளித்திருந்தீர்கள். ஆனால் இப்போது அதே மேஜிக்கை செய்யும் லால், கல்கியில் எழுதுகிறாரே. அது எப்படி?

! இப்போதும் சொல்கிறேன். போஸ்டரில் பார்க்க அருவருப்பாகத்தான் இருக்கிறது. ஆனால், லால் கல்கியில் எழுதுவதும் அதற்குப் போடப்படும் படங்களும் அப்படி இல்லையே!

● கே. பழனியப்பன், சென்னை – 33.

? தற்போதைய சூழலில் கல்கி இருந்தால் நாட்டின் நிலைமை குறித்து என்ன நினைப்பார்?

! நாசமாப் போச்சு!

● நா. இராதாதேவன், சங்கரன்பாளையம். ☐

? விநாயகருக்கு விழா எடுக்கும் வேளையில் ரிகார்ட் டான்ஸ், சினிமா பாடல்கள் கச்சேரி, இழிவைத் தரக் கூடிய மேடைப் பேச்சுக்கள், தராதரமில்லாமல் விளம்பரத் தட்டிகள்... இவையெல்லாம் தேவையா? கட்டாயப்படுத்தி நன்கொடை வசூல் என்கிற பேரில் பகல் கொள்ளை வேறு.... இதையெல்லாம் தராசு எடை போட்டு எவ்வளவு கிராம் நன்மை என்று சொல்லுமா...?

! உற்சாக பானம் அருந்திவிட்டு நடத்திய ஊழல் பிரசங்கங்களை விட்டு விட்டீர்களே! கௌரவமாக, பக்தி சிரத்தையுடன் வீட்டோடு நடந்த வழிபாட்டை வீதிக்குக் கொண்டுவந்து இப்படி நாறடிப்பதோடு போக்குவரத்துக்கு இடைஞ்சலும் செய்வதில் என்ன நன்மை? பூஜ்யம் தான்!

• ஊழல்...



• ...ஒழிப்போர்



● புளியரை கணேசன், சென்னை – 30.

? கிளின்டன் இந்தியா வருவதால் அமெரிக்காவுடனான பொருளாதார உறவுகள் மேம்படும் என்று எதிர்பார்க்கலாமா...?

! அமெரிக்க அதிபரின் வருகை என்பது சரித்திர முக்கியத்துவம் வாய்ந்தது. புதிய அரசு அதைத் திட்டமிட்டு சாமர்த்தியமாகவும் முன்யோசனையுடனும் பயன்படுத்திக் கொண்டால் நீங்கள் குறிப்பிடும் மேம்பாட்டை எதிர்பார்க்கலாம்.

● த. சத்தியநாராயணன், சென்னை – 23.

? பெல்லாரி தொகுதி ஆந்திராவில் இருக்கிறதென்று சோனியா கூறினாராமே?

! கடப்பா ஞாபகத்தில் சொல்லியிருப்பார், விட்டுடுங்க!

• பழசும், புதுசும்!

● அரு.சொர்ணலட்சுமி, ஈரோடு–3.

? புதிய பிரதமர் யார்?

! பழைய பிரதமர்தான்!

● கே.ஆர். வேலுச்சாமி, அன்னூர்.

? பெட்ரோல், டீசல், சமையல் எரிவாயு, மண்ணெண்ணெய், ஆவின் பால் போன்ற அத்தியாவசியப் பொருள்களின் விலை விரைவில் உயரவிருப்பது பற்றி தராசு என்ன நினைக்கிறார்?

! நினைக்க என்ன இருக்கிறது! எப்படிச் சமாளிப்பது என்று ஆட்டைத் தூக்கி மாட்டில் போட்டு கணக்குப் பார்த்து, தலையைப் பிய்த்துக் கொண்டிருக்கிறேன்!

● வே. கோகிலன், திருவாரூர்.

? அம்பிகாபதிபோல் நான் காதலை அனுபவித்துள்ளேன்–தங்கள் கருத்து?

! ஆழ்ந்த அனுதாபங்கள்!

● வைகை வளவன், மதுரை–17.

? 'சோனியா காந்தி ஒரு நிழல் பிரதமராகவோ எதிர்க்கட்சித் தலைவராகவோ இருக்கட்டும்; எங்களுக்கு ஆட்சேபமே இல்லை' என்று சொல்லும் தகுதி அத்வானிக்கு இருக்கிறதா?

! இதைச் சொல்ல என்ன தகுதி வேண்டும்! எதிர்க்கட்சித் தலைவர், நிழல் பிரதமர் என்பவை முக்கியமான பதவிகள் அல்லவா?

● இரா. பார்த்திபன், சேத்துப்பட்டு.

? ஒரு ஜென் கதை கூறுவீர்களா?

! ஜென் குரு ஒருவர் ஆற்றுப் பாலத்தின் மீது நின்று நதியை ரசித்துக் கொண்டிருந்தார். அவ்வழியே வந்த ஒரு பணக்காரன், கிண்டலாக குருவிடம் "ஜென், நதியின் ஆழம் எவ்வளவு?" என்று கேட்டான். குரு யோசிக்கவில்லை. அவனை குண்டுக் கட்டாகத் தூக்கி "நீயே அளந்து பார்!" என்று நதியில் போட்டார்!

☐ ரூ. 50 பரிசு பெறுபவர்: நா. இராதா தேவன், 33, வெங்கிடாசலப்பிள்ளைதெரு, சங்கரன்பாளையம், வேலூர்–632 001.

முதல் நாள், மக்கள் மத்தியில், தந்திரங்கள் செய்து காட்டினார் கழைக் கூத்தாடி.. கயிறு ஒன்றைத் துண்டுகளாக வெட்டி, மறுபடியும் ஒட்டவைப்பது, பந்துகளையும், 'கப்'களையும் வைத்துக் கொண்டு, ஒரு 'கப்'புக்குள் இருக்கும் பந்தை, கையால் தொடாமல், இன்னொரு கப்புக்குள் மாற்றுவது, சீட்டுக்கட்டை வைத்துக் கொண்டு ஒருசில மேஜிக் ஐட்டங்கள்... என்று அவர் ஒவ்வொன்றாகச் செய்து காட்டிக் கொண்டே இருக்க, எனக்கு ஆச்சரியம் அதிகரித்துக் கொண்டே போனது. இதுதான் மேஜிக் மீது எனக்கு ஏற்பட்ட முதல் பரிச்சயம்.

அன்றே, அந்த கழைக்கூத்தாடியிடம், மேஜிக் கற்றுக் கொள்ளுகிற என் ஆர்வம் பற்றிக் கூறினேன். அவரும், கிராமத் தலைவர் வீட்டுப் பையன் கேட்கிறானே என்று எனக்கு ஒன்றிரண்டு ஐட்டங்கள் சொல்லிக் கொடுத் தார். அன்று முதன் முதலாக எனக்கு மேஜிக் கற்றுக் கொடுத்த அந்தக் கலைஞரை, நான் அதன்பின் வாழ்நாளில் மறுபடி சந்திக்கவேயில்லை.

இதனையடுத்து, அவர் எனக்குச் சொல்லிக் கொடுத்த தந்திரங்களை, என் வீட்டாருக்கும், கிராமத்தில் மற்றவர்களுக்கும் செய்து காட்டி அவர்களை ஆச்சரியப்படுத்தி என்று கருதி, அந்த வாண்டுகளையெல்லாம் தனியாகக் கூட்டிக் கொண்டு போய், ஒன்றிரண்டு மேஜிக் ஐட்டங்களைச் செய்து காட்டினேன். வாண்டுகளுக்கெல்லாம் ஒரே வியப்பு.

அவரவர், தம் பெற்றோர்களிடம் என் மேஜிக் பற்றிப் போய்ச் சொன்னார்கள். இதை எதிர்பார்த்துத்தானே நான் அவர்களுக்கு மேஜிக் செய்து காட்டினேன்? என் கணக்கு சரியாயிற்று! என்னைப் பார்த்தவர்கள் எல்லாம் "என்ன! நீ ஏதோ பெரிய மேஜிக் காரனாமே?" என்று விசாரித்தனர். எனக்கு ஆரம்பத்தில் கொஞ்சம் வெட்கமாக இருந்தது என்றாலும், ரொம்பப் பெருமையாகவும் இருந்தது. "எங்கே? எனக்கு ஏதாவது மேஜிக் செய்து காட்டு பார்க்கலாம்?" இது அடுத்தடுத்து என்னைப் பார்த்தவர்களது கோரிக்கை.

நான் என் அப்பாவிடம் போய், எல்லோரும் என்னை மேஜிக் பண்ணிக் காட்டச் சொல்கிறார்கள். நான் செய்து காட்டட்டுமா?" என்று கேட்டேன்.

அப்பா அனுமதி கொடுத்தார். அரைமணி நேரத்துக்கு சுற்றம் சூழ அமர வைத்து, எனக்குத் தெரிந்த மேஜிக் ஐட்டங்களைச் செய்து காட்டினேன். எல்லோரும் கைதட்டி ரசித்தனர். நிகழ்ச்சி முடிந்தபிறகுகூட, கல்யாண வீட்டில், என் மேஜிக் திறமை பற்றித் தான் பேச்சு. ஆனால், நாளடைவில்,

**மந்திரப் புன்னகை – 8**

# "என்னை சூனியக்காரன் என்றார்கள்!"

னேன். அதன்பின், மேஜிக்காரர்கள் எங்கள் ஊருக்கு வரும்போதெல்லாம், அவர்களிடமிருந்து ஒருசிலவற்றைப் புதிதாகக் கற்றுக் கொள்ள ஆரம்பித்தேன்.

என் பெற்றோர், என்னுடைய மேஜிக் ஆர்வத்தைப் பெரிதாகப் பாராட்டவும் இல்லை; அதே சமயம், 'இந்த சனியனெல்லாம் எதற்கு?' என்று எதிர்ப்புத் தெரிவிக்கவும் இல்லை. ஒரு தடவை எங்கள் குடும்பத்து உறவினர் ஒருவரது திருமணத்துக்காக, நாங்கள் எல்லோரும் போயிருந்தோம். அங்கே, என் வயசுப் பிள்ளைகள் நிறையப் பேர் இருக்கவே, நான் அவர்களுக்கு வியப்பு ஊட்டி, நான் அவர்களையெல்லாம் விட மேலானவன் என்று நிரூபிக்க ஒரு வாய்ப்பு

இது எங்கள் உறவினர் வட்டாரத்தில், இரண்டு விதமான நேரெதிர் மாதிரியான ரியாக்ஷனை ஏற்படுத்தியது. இளைய தலைமுறையினர், குழந்தைகளைப் பொருத்தவரை பாராட்டினார்கள். ஆனால் பெரியவர்கள் மத்தியில் இந்தப் பையன், சைத்தான் போல ஏதேதோ செய்கிறானே! என்று பேச ஆரம்பித்தனர். தவிர, கறுப்பு மேஜிக் என்று சொல்லுவார்களே–அதாவது பில்லி, சூனியம் வைப்பது போன்ற தீய காரியங்கள்– அதைத் தான் நான் செய்கிறேன் என்று முத்திரை குத்திவிட்டனர். அது மட்டுமா? என் பெற்றோர்களைக் கடுமையாகத் திட்டினார்கள்.



காந்திலால் வோரா, இன்று உலகின் மிக வேகமான மேஜிக் நிபுணர் கேலால் ஆக புகழ்பெற்று விளங்கு வதற்கு மிக முக்கிய காரணமானவர்கள் என்று இரண்டு மேஜிக் ஜீனி யஸ்களைத்தான் குறிப் பிட வேண்டும். ஒருவர் கணபதி சக்ரவர்த்தி. இன்னொருவர் ஸீதா குமார். இரண்டு பேருமே கல்கத்தாவைச் சேர்ந்த வர்கள்.

கணபதி சக்ரவர்த் தியை நான் முதன் முதலில் ஒரு கண் காட்சியில், அவர் மேஜிக் ஷோ நடத்திக் கொண்டிருந்தபோது தான் சந்தித்தேன். என் மாமா ஒருவருடன், கல்கத்தாவில் இருந்த போது, ஒரு கண் காட்சிக்குப் போயி ருந்தேன். கண் காட்சியை சுற்றிப்

# மேஜிக் நிபுணர் கே. லால்

கறுப்பு மேஜிக் செய்கிற குடும் பத்தாரது கண்களில் விழிப்பதும், அவர்கள் வீட்டுப் பச்சைத் தண்ணீர் தங்கள் நாக்கில் படுவதும் பாவம் என்று சொல்லி, எங்களை ஒதுக்கி வைக்க ஆரம்பித்தனர்.

என் பெற்றோர், இப்படி எல்லாம் ஆகும் என்று எதிர்பார்க்கவில்லை என்பதால், கொஞ்சம் கலகலத்துப் போய்விட்டார்கள். அதே சமயம், என்னிடம், 'போதும் இந்த மேஜிக் விவகாரமெல்லாம், இத்துடன் விட்டு ஒழி... இனிமேல் மேஜிக் என்று வாயைத் திறந்தாயோ...' என்று கடிந்து கொள்ளவும் இல்லை; 'அவர்கள் இடக்கிறார்கள்; என்ன வேண்டுமானாலும் சொல்லிவிட்டுப் போகட் டும்; விட்டுத் தள்ளு; நீ பாட்டுக்குத் தொடர்ந்து மேஜிக் கற்றுக் கொள்!' என்று என்னை ஊக்கப்படுத்தவும் இல்லை.

**மே**ஜிக் தெரிந்த சின்னப் பையன் பார்த்துக் கொண்டே வந்த போது, ஒரு குறிப்பிட்ட ஸ்டால் என் கண்ணில் பட்டது. உடனே நான் உள்ளே போய் மேஜிக் ஷோவைப் பார்க்க விரும்பினேன். ஆனால் என் மாமாவுக்கு அதில் விருப்பமில்லை. என் வற்புறுத்தலால், வேறு வழியில்லாமல் ஆளுக்கு ஓர் இரண்டணா டிக்கெட் வாங்கிக் கொண்டு, உள்ளே போய் அமர்ந்தோம்.

சுமார் ஐம்பது பேர் உட்கார்ந்து, நிகழ்ச்சி யைப் பார்க்கும்படியாய் நாற்காலிகள் போடப்பட்டிருந்தன. அரை மணிநேர நிகழ்ச்சிதான். ஒரு ஷோ முடிந்ததும், அடுத்த ஷோவுக்கான டிக்கெட் விற்கப்படும். அரங் கம் நிரம்பியதும் நிகழ்ச்சி ஆரம்பமாகும். இப்படி தொடர்ந்து, மக்களின் அமோக வர வேற்புடன் மேஜிக் ஷோவை நடத்திக் கொண்டிருந்தவர்தான் கணபதி சக்ரவர்த்தி.

அரைமணி நேரம் போனதே தெரிய வில்லை. அத்தனை விறுவிறுப்பாக இருந்தது அந்த மேஜிக் ஷோ. நிகழ்ச்சி முடிந்ததும், நான்

'இந்த மேஜிக் நிபுணரை நேரில் சந்தித்துப் பேச வேண்டும்' என்று என் மாமாவிடம் கூறினேன். ஆனால் என் மாமா, 'அவரை யெல்லாம் சந்தித்துப் பேசுவது கஷ்டம்; அவர் யாரையும் சந்தித்துப் பேசுவதில்லை யாம்' என்றார். நான் விடவில்லை. அவரை எப்படியும் சந்தித்துப் பேசியே தீரவேண்டும் என்று பிடிவாதம் பிடித்தேன். வேறு வழி யில்லாமல், என் மாமா, அந்த மேஜிக் நிகழ்ச்சியை நடத்தியவரிடம் என்னை அழைத்துக் கொண்டு போனார். அவர்தான் கணபதி சக்ரவர்த்தி.

அவரைப் பார்த்தவுடன், அவரது கால் களைத் தொட்டு வணங்கினேன். என்னு டைய மேஜிக் ஆர்வம் பற்றியும், எனக்குத் தெரிந்த ஒரு சில மேஜிக் ஐட்டங்கள் பற்றியும் சொன்னேன். அடுத்து அவர் அன்றைய நிகழ்ச்சியில் செய்து காட்டிய சில ஐட்டங்களை எப்படிச் செய்வது என்ற ரகசி யத்தையும் நான் சொன்னபோது, அவருக்கு ஆச்சரியமாக இருந்தது. குறிப்பாக, அவர் எலும்புக் கூட்டை டான்ஸ் ஆட வைப்பது எப்படி என்ற ரகசியத்தை நான் சொன்ன போது ரொம்ப ஆச்சரியப்பட்டுப்போனார்.

"இதெல்லாம் உனக்கு எப்படித் தெரி யும்?" என்று கேட்டார். நான் "மிக நுணுக்க மாக கவனித்தேன். இதற்குப் பின்னால் என்ன டிரிக் இருக்க முடியும் என்று யோசித் துப் பார்த்தேன். யூகித்தேன்!" என்றேன்.

"இத்தனை சின்ன வயதிலேயே மேஜிக் பற்றி இவ்வளவு நுணுக்கமான அறிவா?" என்று பாராட்டினார். என் மாமாவிடம், "இவன் பிறவி மேஜிக் கலைஞன். தக்கபடி பயிற்சி கொடுத்தால், மிகச் சிறப்பாக வருவான்" என்றார். ஆனால் என் மாமா இதையெல்லாம் சீரியஸாக எடுத்துக் கொள்ளவில்லை. கணபதி சக்ரவர்த்தி, என்னை ஆசீர்வதித்து, விடை கொடுத்தார்.

அதன்பின், அடிக்கடி, கணபதி சக்ர வர்த்தியை நான் சந்திக்க ஆரம்பித்தேன். எனக்கு மேஜிக் கற்றுத் தருவதற்கு அவர் மகிழ்ச்சியுடன் ஒப்புக் கொண்டார்.



பள்ளிக் கூடத்தில் படிப்பு, மாமாவின் துணிக் கடையில் அவருக்கு உதவியாக இருப்பது தவிர, கணபதி சக்ரவர்த்தியின் வீட்டுக்குப் போய் அவரிடம் மேஜிக் கற்றுக் கொள்ளுவேன். படிப்பு, கடை வேலை இரண்டுக்கும் இடைஞ்சல் எதுவும் இல்லாமல், நான் மேஜிக் கற்றுக் கொண்ட தால், யாரும் ஆட்சேபிக்கவில்லை.

இந்தச் சூழ்நிலையில்தான் இரண்டாம் உலகப் போர் ஆரம்பித்தது. கல்கத்தா நகரம் தாக்குதலுக்கு உள்ளாகும் அபாயம் நிலவிய தால், மக்கள், கல்கத்தாவிலிருந்து வெளி யேறத் தொடங்கினார்கள். என்னுடைய மாமாவும், மற்றவர்களும், கல்கத்தாவில் துணி வியாபாரத்தை மூட்டை கட்டிக் கொண்டு, சொந்த ஊருக்குப் புறப்பட்டனர். மறுபடியும் சொந்த ஊரில் கூட்டுக் குடும் பம். கல்கத்தாவில் தொடர்ந்து வசிக்க முடி யாமல் போனதில் எனக்குத்தான் பெரும் வருத்தம். காரணம் என் மேஜிக் குரு கணபதி சக்ரவர்த்தியின் பிரிவு தான் என்பதை நான் சொல்லவும் வேண்டுமோ?

ஒருவழியாக உலகப் போர் அபாயம் நீங்கி, நிலைமை சகஜமடைந்தது. என் பெற்றோர் உட்பட அனைவருமே கல்கத் தாவுக்குக் குடிபெயர முடிவு எடுத்தபோது எனக்கு ஏற்பட்ட சந்தோஷத்துக்கு அளவே இல்லை. கல்கத்தாவில் மறுபடி துணி வியா பாரம் ஆரம்பித்தார்கள்.

கல்கத்தா போனவுடன் நான் முதலில் செய்த காரியம், கணபதி சக்ரவர்த்தியைத் தேடிக் கொண்டு போனதுதான். ஆனால் அவரைப் பற்றிய தகவல் ஏதுமில்லை.

அவரைக் கண்டுபிடிக்க நான் எடுத்துக் கொண்ட பல முயற்சிகளும் தோல்வி யடைந்தன.

(தொடரும்)

## அழகியைத் தேடுகிறார்கள்!

• யானி

பிரபல சினிமா டைரக்டர் அக்பர்கான், 'அக்பர் தி கிரேட்' என்று ஒரு படம் எடுக்கிறார். கதையின் பெரும்பகுதி ஷாஜஹான்–மும்தாஜ் காதலைப் பற்றித்தானாம். ஹாலிவுட் நடிகர் ஒருவர் ஷாஜஹானாக நடிக்க, மும்தாஜ் ரோலுக்கு இந்திய அழகி ஒருவரைத் தேடிக் கொண்டிருக்கிறார்கள். படத்துக்கு இசை, உலகப் புகழ்பெற்ற இசைக் கலைஞர் யானி! தாஜ்மகால் முன்பு, இசை நிகழ்ச்சியொன்றை நடத்தி பலரையும் கவர்ந்த அதே யானிதான்!"

– சி.எம்.



# சிறுநீரக கோளாறுக்கு சிறந்தது

# தெய்வீக மூலிகை மருத்துவம்



சிறுநீரகம் என்பது ஒரு கழிவு நீக்க உறுப்பாகும். இது நம் உடலின் இடுப்புக்கு சற்று மேலே முதுகெலும்பின் இருபுறமும் பக்கத்திற்கு ஒன்றாக (இடது, வலது) அமைந்துள்ளது. இவைகள் ஒவ்வொன்றிலும் சுமார் 10 - லட்சம் நெப்ரான்கள் என்னும் நுண்ணிய வடிகுழல்கள் உள்ளது. இந்த நெப்ரான்கள்தான் சிறு நீரகத்தில் பணிபுரியும் முக்கிய திசு ஆகும். உடலிலுள்ள இரத்தம், சிறுநீரகத்தில் உள்ள நெப்ரான்களின் வழியே செல்லும்போது, உடலுக்கு தேவையான நீர், திட, திரவ பொருட்கள் உறிஞ்சிக்கொண்டு, தேவையற்ற கழிவுப் பொருட்களை சிறுநீர் குழாய் மூலம் சிறுநீரக வெளியேற்றப்படுகின்றன. சிறுநீரகங்கள் பழுதடையும் போது, யூரியா, கிரியேட்டினின், சோடியம், பொட்டாசியம், நீர் போன்ற கழிவுப் பொருட்கள் இரத்தத்தில் அதிகமாகின்றன. இதனை செயற்கை முறையில் இரத்த சுத்திகரிப்பு செய்தல் (Dialysis) மற்றும் சிறு நீரகமாற்று அறுவை சிகிச்சை (Kidney transplantion) போன்றவை செய்யும் நிலை ஏற்பட்டு இறுதியில் உயிரிழக்கும் நிலை ஏற்படுகிறது.

**சிறுநீரக கோளாறின் அறிகுறிகள்** இரத்த சோகையினால் வெளிறிப்போன முகம். 2. கைகால், முகம், வயிறு போன்றன வீங்கி முற்றிய நிலையில், நுரையீரல், இதயம் போன்ற முக்கிய உறுப்புகளை பாதிக்கின்றது. இதனால், மூச்சுத்திணறல், நெஞ்சுவலி, சளி, இருமல், பலஹீனம், போன்றவை தோன்றும். 3. சிறுநீர் போகும்போது எரிச்சல், மேலும் சிறுநீர் காப்பி கலரில் இருக்கும். அடிக்கடி இரவில் சிறுநீர் கழிக்க தோன்றும். 4. கண்ணின் கீழ் ஒரு சிறு பை போல் வீங்கி இருக்கும். 5. கீழ் முதுகில் வலியெடுக்கும். 6. யூரியா, கிரியேட்டினின், சோடியம், பொட்டாசியம் போன்றன இரத்தத்தில் அதிகமாக காணப்படும்.

**சிறுநீரக செயல் இழப்பின் காரணங்கள்** - சர்க்கரை வியாதிதான் முதல் முக்கிய காரணம், ஆகும். கட்டுப்படுத்தப்படாத உயர் இரத்த அழுத்தம், எய்ட்ஸ் நோய் கிருமியான HIV வைரஸ் மற்றும் மஞ்சள் காமாலையின் வைரஸ் B -யும் தொற்றாலும், இரத்த சோகை, சிறுநீரககற்கள், மூட்டுக்கள், இணைப்புத் திசுக்களை பாதிக்கும் நோய்களாலும் அதிக வயிற்றுப்போக்கு, வாந்தி, சிறுநீர் குழாயில் ஏற்படும் தசை சுருக்கம், கற்கல், கட்டிகள், புற்றுநோய் போன்றவற்றாலும் அடைப்புகள் ஏற்பட்டு சிறுநீரகம் பழுதாகலாம். மேலும் மற்ற நோய்களுக்காக எடுக்கப்படும் இரசாயன மாத்திரைகள், பாம்பின் விஷம், தீக்காயம், மின்சாரத் தாக்குதல் போன்றவற்றால் சிறுநீரகம் பாதிக்கலாம். **தேவையான தெய்வீக மூலிகைகள்**: சக்திக்குரிய வேப்பிலை, வில்வம், அத்தி, அருகம்புல், துளசி, ஆடாதொடா, தூதுவளை, வாழை தண்டு, - தும்பை, நெல்லி, கீழாநெல்லி, முருங்கை, வல்லாரை, ஆவாரம்பூ, வெந்தியம், கரிசலாங்கண்ணி, மாவிலை, நாவல் - ஆகியவைகளை எடுத்து வந்து வெய்யிலில் உலர்த்தி பொடி செய்து பின், சம அளவில் ஒன்றாக கலந்து ஒரு பாட்டலில் வைத்துக்கொள்ளவும். பின் இதில் இருந்து இரண்டு ஸ்பூன் தூள் எடுத்து ஒரு டம்ளர் தண்ணீரில் கலந்து உணவுக்கு முன் தினமும் காலை, மாலை உட்கொள்ளவும். இவைகள் சிறுநீரகங்களுக்கு சக்தியை தருகின்றன. தேய்ந்த பாகங்களை புதுப்பிக்கின்றது. நோய் தொற்றுகளில் இருந்தும் பாதுகாக்கின்றது. இதனால் கிட்னி வழக்கம் போல் செயல்பட இம் மூலிகைகள் பெரிதும் துணைபுரிகின்றன.

**இயற்கை உணவுகள்**: தினம் ஏதேனும் ஒரு வேளை இயற்கை உணவாகிய பச்சையாக சாப்பிடும் காய்கள், பழங்கள், பழஜூஸ்கள், சலாட்ஸ் (Salads) போன்றவற்றை உணவாக உட்கொள்ள வேண்டும். காரணம் இதில் உள்ள சக்திகளை உடல் எளிதில் பெறுகின்றன. மேலும் கழிவுகள் குறைவு ஆகவே கிட்னிக்கு வேளை பளு குறைகின்றது. கிட்னி நன்கு செயல்பட இயற்கை உணவு உதவுகின்றது.

**உதாரணமாக** அன்னாசி, பேரிட்சை, பப்பாளி, கொய்யா, அத்திபழம், நாவல், ஆரஞ்சு, மாதுளை, சப்போட்டா, கேரட், வெண்டை, வெள்ளரிக்காய், பேரிக்காய், இளநீர், கரும்புசாறு, வாழைத் தண்டு, முள்ளங்கி, மாம்பழம் போன்றன உட்கொள்ளலாம். மற்ற இரண்டு நேரம் சாதாரண சைவ உணவு உப்பில்லாமல் அரை வயிறு ஆகாரம் உட் கொள்ளலாம். மேலும் வாரம் ஒரு நாள் உண்ணா நோன்பும், தினம் காலை, மாலை எளிய உடற்பயிற்சிகளும் மேற்கொண்டால், சிறுநீரக பாதிப்பில் இருந்து படிப்படியாக முற்றிலும் குணம் பெறலாம்.




தெய்வீக மூலிகை வைத்தியர்கள்

தலைமை முகவரி : Dr.M.குருபரன் & Dr.M.சபாபதி, S/o.Dr.C.K. மாணிக்கவாசகம்

P.B.No:30, No:3, திருநாத முதலி நகர், (காலேஜ் எதிரில், திருப்பத்தூர் (N.A.A.) 635 601 ✆ 04179-20469, 22769.

சென்னை கிளை : 115, புரசைவாக்கம் நெடுஞ்சாலை, (பிரின்ஸ் மேனர் பக்கத்தில்) செல்லீஸ், சென்னை-10.

இரு முகவரிகளின் ஆலோசனை நேரம் தினமும் காலை 10 to 1 மாலை 6 to 8 ✆ 6424285, 6427638


**குறிப்பு**: சென்னை, வேலூர், காஞ்சீபுரம், கடலூர், விழுப்புரம், திருவண்ணாமலை, பெங்களூர் ஒசூர், சேலம், ஈரோடு, கோவை, மதுரை, தஞ்சாவூர், திருச்சி, நாமக்கல், தர்மபுரி, திருப்பூர், உடுமலைபேட்டை, திண்டுக்கல், தூத்துக்குடி, திருநெல்வேலி, நாகர்கோவில், விருதுநகர், கரூர் போன்ற நகரங்களில் வைத்தியரை நேரில் சந்திக்க முகாம்-விவரம் தெரிந்து கொள்ள மேலே உள்ள முகவரிக்கு கடிதம் (அ) போன் மூலம் தொடர்பு கொள்ளவும்

**தகவல்**: டாக்டர் அவர்களின் மூலிகைகள் பற்றிய 25 வருட அனுபவ ஆராய்ச்சிகள் அடங்கிய 'எளிய முறையில் பிணி அகற்றும் தெய்வீக மூலிகைகள்' என்ற புத்தகத்தினை பதிவுத்தபாலில் பெற ரூ.60/-ம் இயற்கை உணவுகளின் பெருமைகள், அதிசய உண்மைகள் அடங்கிய 'என்றும் இளமை காக்கும் இயற்கை உணவுகள்' என்ற புத்தகத்தினை பதிவுத் தபாலில் பெற ரூ.60/-ம் மூலிகை மகிமை பற்றிய ஆடியோ கேசட்டை பெற ரூ.60/-ம் தலைமை முகவரிக்கு D.D. அல்லது M.O. அனுப்பவும்.

**7 & 8-ந் தேதி - மும்பை : காலை 9 to இரவு 8 மணி வரை The South Indian Concerns Ltd., 401, Telang Road, Matunga, (CR), Ph : 4011589**

**18 & 19-ந் தேதி-புது டெல்லி: காலை 9 to இரவு 8 மணி வரை South Indian Hotel, 10211, Padam Singh Road, Ajmal Khan Road, Karol Bagh, ✆ : 5717126, 5723651**

✉ 'பெருக்கெடுத்த கல்கியுணர்வு!' தலையங்கம் படித்தேன். கல்கியின் பன்முகத் தன்மைகளை அடுக்கியிருந்தீர்கள். கல்கி மறைந்த பின்பும் கூட அவரின் எழுத்துகள் புதிதாகப் படிக்கும் ஒரு வாசகனைப் பரவசப்படுத்துகிறது என்பது, அவரின் புகழுக்கு மகுடம் சூட்டுவது போல் ஆகிறது. இந்த கல்கியுணர்வு ஒரு ரிலே ரேஸ் மாதிரி... முடிவில்லை!

மொரட்டுப்பாளையம், க. நா. இராஜேஸ்வரன்.

✉ கல்கி விழாவில், அரசியல் பிணக்குகளை அகற்றி வைத்து விட்டு, இருபெரும் தலைவர்கள் இணைந்து பேசி மகிழ்ந்த செய்தி - படங்கள் இனிப்பூட்டின.

மதுரை - 9, இரா. கல்யாணசுந்தரம்.

✉ தமிழுக்கு கலைஞர் என்றும் பேர். அப்படியிருக்க பிரசாரத்தால் களைத்திட்ட போதும், இரவோடிரவாக குறிப்பெடுத்து சிறப்புரையைச் சிறக்கச் செய்ததில் வியப்பென்ன?

பொன்மலை, ஆர். பிரகாஷ்.

# கல்கியுணர்வு ஒரு ரிலே ரேஸ் மாதிரி...

✉ கிட்டத்தட்ட 20 வருடங்களைத் திரையுலகில் கழித்து விட்ட டி.ஆர். தன் மகன் சிலம்பரசனை ஹீரோவாக்கிப் பார்ப்பது, நியாயமான ஆசைதான்! தந்தைக்குத் தப்பாமல் பிறந்து விட்ட அந்த தனயனின் கனவுகள்; நனவாக 'கல்கி'யோடு நாங்களும் சேர்ந்து வாழ்த்துகிறோம்!

திருச்செங்கோடு, டி.ஏ.சி. பிரகாஷ்.

✉ 'ஹீரோ - 2000' கட்டுரை அருமை. வழக்கம் போலவே, சிலம்பரசன் விஷயத்திலும் 'கல்கி' முந்திக் கொண்டு விட்டது. சூர்யாவைப் போல, சிலம்பரசனும் கல்கியைப் பிற்காலத்தில் நன்றியுடன் நினைவு கூர்வார், பாருங்களேன்!

சிதம்பரம், ஆர். சுந்தரராஜன்.

✉ அரசியலில், போலிகளுக்குத்தான் காலம் என்பதை அர்ஜுன் சம்பத்தின் அனுபவம் நிரூபித்து விட்டது. பா.ஜ.க. அவரை ஊக்கப்படுத்தாவிட்டாலும் வெந்த புண்ணில் வேல் பாய்ச்சியிருக்க வேண்டாம்!

திருவண்ணாமலை, ஆர். ராமசாமி.

✉ பெல்லாரியில் வாக்குப் பதிவு முடிந்ததும் டெல்லிக்கு போன் போட்டு, 'ஒரு லட்சம் வோட்டில் வெற்றி நிச்சயம்' என்று சுஷ்மா உற்சாகமாகக் கூறியதை - கள்ள வோட்டைத்தான் இப்படி மறைமுகமாகக் கூறுகிறாரோ என்று தேர்தல் கமிஷன் சந்தேகப்படப் போகிறது!?

பள்ளிபாளையம், ரஞ்சனிப்ரியன்.

✉ அவசர புத்தியில் செயல்பட்டுத் தன் நலனுக்கே கேடுவிளைவித்துக் கொள்ளும் நபர்களுக்கு, எளிமையானதொரு பாடமாக அமைந்தது சு. சமுத்திரம் அவர்களின் 'மறுபிறவி' அனுபவம்.

குட்டலாடம்பட்டி, கே. மூர்த்தி.

✉ சுமியின் சூப்பர் மார்க்கெட் இல்லாத இதழ் டெபாசிட் இழந்த வேட்பாளரின் முகம் மாதிரி 'களை' இழந்து காணப்பட்டது. சுமிக்கு என்னாச்சுங்கோ?

ஈரோடு, மைதிலி மணாளன்.

✉ நகைச்சுவைப் பயணக் கட்டுரைக்குப் பரிசு ரூபாய் பத்தாயிரமா என்று முதலில் மிகையாகப்பட்டது. ஆனால் 'அந்த மானைப் பாருங்கள் அழகு' கட்டுரை அந்த எண்ணத்தைப் போக்கடித்து விட்டது. நகைச்சுவையோடு, அந்தமானைப் பற்றிய பல அரிய விஷயங்களையும் தெரிவித்துள்ளார் கட்டுரையாளர்.

ஆடுதுறை, கோ. ராமதாஸன்.

✉ ராஜதர்பார் - ரஸ்தானிப் பழம்
மும்பை மசாலா - முறுகல் ரோஸ்ட்
தேர்தல் மேடை - தேன்குழல்
கர்நாடகா கார்னர் - காராபூந்தி
இதழ் முழுக்க சுவை! சுவை! சுவையோ சுவை!

சர்க்கார்பதி, பி. ஜெயப்பிரகாஷ்.





# ஸ்ரீ சாரதா சக்தி பீடம்

16, காமராஜ் சாலை, பழைய பெருங்களத்தூர், (வழி) தாம்பரம், சென்னை-63.
**Tel & FAX: 2376129, Cell Ph: 98410-53309**
**E.mail: sspeetam@md3.vsnl.net.in, sspeetam@hotmail.com**
**Please visit our website at: www.intamm.com/sspeetam**

## தீபாவளி நல்வாழ்த்துக்கள்

பேரன்புடையீர் ! வணக்கம், வரும் தீபாவளி திருநாளில் தங்களுக்கு அனைத்து நலன்களும் உண்டாக பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணரிடம் பிரார்த்திக்கின்றோம்.

தங்களின் அன்பினாலும், ஆதரவினாலும், குருகுலத்தில் 137 மாணவ, மாணவியர்கள் நல்ல முறையில் படித்து வருகின்றார்கள். குருகுல மாணவர்களின் முன்னேற்றத்தைக் கருத்தில் கொண்டு ஒரு உயர்நிலைப்பள்ளியும் மற்றும் 13/09/99 விநாயக சதுர்த்தி அன்று கம்ப்யூட்டர் பயிற்சி மையமும் துவக்கப்பட்டுள்ளது.

## தீபாவளி திருநாளில்

* குருகுல மாணவர்களோடு உங்களுடைய மகிழ்ச்சியை பகிர்ந்து கொள்ளுங்கள்.
* குருகுல மாணவர்களின், உணவு மற்றும் இதர செலவுகளுக்கு, கல்வி கற்பதற்கு கம்ப்யூட்டர் பயிற்சி பெறுவதற்கு, கட்டிடம் கட்டுவதற்கு, மற்றும் நிரந்திர வைப்பு திட்டத்திற்கு தங்களின் மேலான நன்கொடைகளை அளிக்கும்படி பணிவன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

| | | |
|---|---|---|
| ● காலை சிற்றுண்டி (137 பேருக்கு) | ரூ | 750/- |
| ● மதிய உணவு (இனிப்புடன்) | ரூ | 1,500/- |
| ● இரவு சிற்றுண்டி | ரூ | 1,000/- |
| ● இனிப்பு மற்றும் பால் வழங்குதல் | ரூ | 500/- |
| ● ஒரு மாணவனுக்கு ஓராண்டிற்கு கல்வி உதவித் தொகை | ரூ | 1,000/- |
| ● ஒரு மாணவனுக்கு கம்ப்யூட்டர் பயிற்சி (ஓராண்டிற்கு) | ரூ | 3,000/- |
| ● ஒரு மாணவனுக்கு பராமரிப்பு செலவு ஓராண்டிற்கு (உணவு, உடை, கல்வி) | ரூ | 6,000/- |
| ● குருகுலத்தின் ஒரு மாதத்திற்கான பராமரிப்பு செலவு | ரூ | 1,50,000/- |

தாங்கள் அளிக்கும் தொகை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்கிறோம்.

தங்கள் நன்கொடைகளை "ஸ்ரீ சாரதா சக்தி பீடம்" என்ற பெயருக்கு **Cheque/ DD / MO** மூலம் அனுப்பி வைக்கும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

நன்கொடைகளுக்கு 80 G பிரிவின்படி வருமானவரி விலக்கு உண்டு.

இறைவன் தொண்டில்
சுவாமி ஸ்ரீ ஸர்வாத்மானந்தர்



மஸ்கிருத பாஷையின் பெருமையைப் பற்றிச் சொல்லிக் கொண்டிருந்தேன். அதற்கு உதாரணமாக ஒரு விஷயம்:

பாணினி என்கிற மஹரிஷி. அனுஷ்டானத்தை முடித்துக் கொண்டு, சந்தியாவந்தனம் பண்ணிக் கொண்டிருக்கிறார். கையிலே தீர்த்தத்தை எடுத்துக் கொண்டு அர்க்கியம் கொடுக்கத் தயாராக இருக்கிறார். அப்போது ஜலத்திலே ஒரு விசித்திரமான ஜந்து நீச்சல் அடித்துக் கொண்டு வருகிறது– அவருக்கெதிரில் வருகிறது.

அந்த ஜந்து எப்படி இருக்கிறது என்றால் உடம்பெல்லாம் பாம்பு. முகம் மட்டும் மஹரிஷியின் முகம்!

அவர் யார் என்று கேட்டால், பதஞ்சலி மஹரிஷி. யோக சூத்ரம் எழுதியவர். வியாகரணம் எழுதியவர். நாக ரூபம் அவருக்கு. அவர் பாணினியின் எதிரே வருகிறார்.

இவர்–அர்க்கியத்தை வைத்துக் கொண்டு நின்று கொண்டிருப்பவர்– அவரைப் பார்த்தார்– பார்த்தவுடனே அர்க்கியத்தை விடுவதை நிறுத்தி விட்டு, 'கோர் பவ:' என்று அவரைப் பார்த்துக் கேட்டார். அவரிருக்கிறாரே... காதுகள் இரண்டையும் பொத்திக் கொண்டு விட்டார்! பொத்திக் கொண்டு, "ப்பா!" என்றார். ஏதோ பத்து லட்சம் ரூபாய் நஷ்டம் வந்துவிட்ட மாதிரி அவர் அவஸ்தைப் படுகிறார்!

அவஸ்தைப்பட்டதோடில்லாமல் பாணினியைப் பார்த்து இவர் சொல்கிறார்:

"சபோகம்!" என்று பதில் சொல்கிறார்.

அவர் பார்த்தார்... என்ன இப்படிச் சொல்கிறாரே என்று! "ரேப: புத்ரகத:" என்றார்.

உள்ளே ஜலத்தில் இருப்பவரோ "பூர்வமேவ த்வயா அபஹ்ருத:" என்று பதில் சொன்னார்!

அப்புறம் இரண்டு பேரும் சேர்ந்து கட்டிக் கொண்டார்கள்!

என்ன நடந்தது என்கிறீர்களா...?

அதுதான் சம்ஸ்கிருதம்!

அவர் என்ன கேட்கிறார், பாணினி...? 'இவ்வளவு விசித்திரமாக இருக்கிறீர்களே– தாங்கள் யார்?' என்று கேட்கிறார்.

'நீங்கள் யார்?' என்று சம்ஸ்க்ருதத்தில் கேட்பதானால் 'கோ பவ:?' என்று கேட்க வேண்டும். ஆனால் இவர் எப்படிக் கேட்டார்? 'கோர் பவ:?' என்று ஒரு 'ரே'வத்தைச் சேர்த்துக் கொண்டு கேட்டார். மகான்களுக்கேகூட சில சமயம் வாக்கிலே அபசப்தம் வந்துவிடுகிறது!

சாமான்யமாக லோக வழக்கிலே கேட்டுக் கேட்டுப் பழகின அபசப்தங்களை இவர்களும் கவனிக்காமலே சொல்லிவிடுவார்கள். அதனாலே, பாணினி போய் இப்படி அபசப்தமாய்க் கேட்டாரா? என்று யோசிக்கக் கூடாது.

சாதாரணமாக உள்ளத்திலே பகவானை இறுத்திக் கொண்டு தியானம் செய்பவர்கள்தான் யோகிகளும் முனிவர்களும். ஆனால் அவர்கள் சாமான்யமாக உலகிலே ஒருத்தருக்கொருத்தர் பேசுவதாகக் காட்டும்போது எப்படிக் காட்டுவது? உலகத்தில் உள்ளதை, நடப்பதைக் கொண்டுதானே முனிவர்கள் யோகிகள் பற்றியும் சொல்லியிருக்கிறது! அதனால் பாணினி வாக்கிலே அபசப்தம் வருமா என்று சிந்தனை வேண்டாம். மகான்களுக்கும் வாய் தவறிவிடும். கோர் பவ:? என்று ரேவத்தைச் சேர்த்துக் கேட்டு விட்டார்.

உள்ளே, ஜலத்திலே இருக்கிறவர் பாம்பு அல்லவா? என்ன சொல்ல வேண்டும்?

'சர்போகம்'– 'அகம் சர்ப:' என்று சொல்ல வேண்டும். அதாவது, 'நான் பாம்பு' என்று பொருள். ஆனால் அவர் என்ன பண்ணிவிட்டார்? சர்ப்பத்திலே இருக்கிற ரேவத்தை எடுத்துவிட்டார்! எடுத்துவிட்டு 'சபோகம்' என்று சொன்னார்.

வெளியிலே இருப்பவர் பார்த்தார். நீர் சர்ப்பம் ஆயிற்றே. 'சபோகம்'

என்று மொட்டையாய்ச் சொல்கிறீரே. சர்ப்பத்திலே இருக்கிற ரேபம் எங்கே போயிற்று..?' என்று கேட்டிருக்கிறார்!

ஜலத்தினுள்ளே இருப்பவர் அதற்குச் சொல்கிறார்: 'அதைத்தான் நீர் முதலிலேயே அபஹரித்துக் கொண்டீரே! என்னிடத்திலே எப்படி இருக்கும்?' என்கிறார்.

அப்போதுதான் தான் கேட்பது தப்பு என்று பாணினிக்குப் புரிகிறது! எதிரே விசித்திர ஸ்வரூபத்துடன் இருப்பவர் ஞானி என்பதும் புரிகிறது!

இந்த மாதிரி சொல்லிலக்கணம், வியாகரண சாஸ்திரம் படித்தவர்கள் சபையிலே இருந்தார்களானால் பேசுகிறவர் அபசப்த பிரயோகம் செய்கிறாரா



என்பதைக் கவனித்துக் கொண்டேயிருப்பார்கள். எவ்வளவு முறை அபசப்த பிரயோகம் வருகிறது என்று எண்ணுவார்கள்!

வித்வானுக்கு லட்சணம் என்ன என்று கேட்டால், தப்பைக் கண்டுபிடிப்பதுதான் வித்வானுக்கு லட்சணம். நல்லவை ஆயிரம் சொன்னாலும் பிரயோஜனமில்லை– ஒரு தப்பு சொல்லிவிட்டால் அதை உடனே கண்டனம் பண்ணுவார்கள். எதைச் சொன்னாலும் கேட்டுக் கொண்டு உட்கார்ந்திருந்தால் அவர் வித்வானே இல்லை!

அதே மாதிரி, வேதாத்யயனம் பண்ணியவர்கள் சதஸிலே உட்கார்ந்திருந்தால், அவர் வாக்கிலே சப்தம் சரியாக வருகிறதா என்று அவ்வளவாக கவனிக்க மாட்டார்கள். ஆனால், **அபஸ்வரம்** ஏற்பட்டால் உடனே பிராணனே போய்விட்ட மாதிரி நினைப்பார்கள். ஸ்வரத்திலேயே அவர்களுக்கு புத்தி; பதத்திலே இவர்களுக்குப் புத்தி.

சம்ஸ்கிருத பாஷை உத்தமமான பாஷையானதினாலே அப்படிப்பட்ட உத்தம பாஷையினாலே ஏற்படுத்தப்பட்ட கிரந்தங்கள் எல்லாம் அவ்வளவு பெருமையுடையவை ஆனதினாலே இங்கே விசேஷமாய்ப் பார்க்கிறபோது சேஷத்வம் சேஷித்வம் என்பவற்றுக்கு விசேஷமாக அர்த்தங்கள் உண்டு.

சேஷன்– எல்லோரும் அடிமைகள்தான் பகவானுக்கு. அந்த அடிமையை அவன் வரிக்க வேண்டும்; அவன் ஏற்க வேண்டும்; அவன் ஏற்ற அடிமைகளாக நாம் இருத்தல் வேண்டும்.

பக்தி, பிரபத்தி இவைகளாலே நமக்கு அந்த நிலை கிடைக்கிறது.

ஆகையினால் சேஷத்வம் என்பது நமக்கு ஸ்வரூப லக்ஷணம்.

பகவானுக்கு சேஷி என்று பெயர். அதனால்தான் 'அசேஷ சித சித் வஸ்து, சேஷினே...' என்று வருகிறது.

சித்–அசித் இரண்டிற்கும் சேஷியாக இருக்கக் கூடியவன்; அதைத் தனக்காகக் கொள்ளக் கூடியவன்; அவனே போக்யம், அவனே போக்தா. அ யேவ காரணம் அவன்.

'அ' என்றால் விஷ்ணுவைச் சொல்லக் கூடிய சொல். அகர முதல எழுத்தெல்லாம் ஆதி பகவன் முதற்றே உலகு என்று திருவள்ளுவரும் இதை அழகாக எடுத்துக் காட்டுகிறார்.

ஆகையினாலே, வள்ளுவர் வாக்குக்கு மூலமாக இருக்கக் கூடியது வேதாந்தம், வேதம் என்கிற உயர்த்தி.

இரண்டடி கூட இல்லை அது; ஒன்றரை அடிதான். அதிலே சமஸ்த அர்த்தத்தையும் காட்டுகிறார் திருவள்ளுவர்.

அப்படி அவர் காட்டக் கூடிய விஷயங்களெல்லாம் வேதாந்த, வேத விஷயங்கள் என்பது நமக்கு ஸ்பஷ்டமாகத் தெரிகிறது. இல்லையானால் அந்தப் பெருமையை அடைய முடியுமா? திருக்குறளுக்கு எவ்வளவு ஏற்றம் பாருங்கள்!

வேத–வேதாந்தங்களை எடுத்துக் காட்டுகிற திருக்குறளும் சொல்கிறது– 'அ' என்ற அக்ஷரத்துக்கு எவன் உரியவனோ, அவன் தான் ஆதிபகவன். எல்லாவற்றுக்கும் ஆதியாய் இருக்கக் கூடிய பகவான்.

'அ' என்ற அக்ஷரத்துக்குரியவன் யார்? என்று கேட்டால், 'அக்ஷரானாம் அகாரோஸ்மி' என்று அவனே சொல்லி விட்டான். 'நான் அக்ஷரங்களுக்குள்ளே 'அ' என்கிற அக்ஷரமாக இருக்கிறேன்.'

உபநிஷத் சொல்கிறது. அகாரோ விஷ்ணு வாசக: அ என்றால் விஷ்ணுவைச் சொல்லக் கூடிய சொல் என்கிறது. ஆனந்த தீர்த்தர்; சொல்வதும் இதைத்தான்.

**வி**ஷ்ணுவே எல்லாவற்றுக்கும் காரணமாய் இருக்கிறான்; நிஷ்காரணமாகவும் அத்புத காரணமாகவும் இருக்கிறான் என்று

## அருள்வாக்கு

'**வா**ழாது வாழ்ந்தாலும் வடக்கே தலை வைத்துப் படுக்கக் கூடாது' என்பார்கள். 'இதெல்லாம் சுத்த மூட நம்பிக்கை' என்று இருபது, முப்பது வருஷம் முந்தி சொல்லி வந்தார்கள். இப்போதோ, 'மனுஷ்ய சரீரத்தில் 'எலெக்ட்ரோ–மாக்னடிஸ வேவ்'களுக்கு மூலஸ்தானம் brain (மூளை)தான். உலகத்தை எடுத்துக் கொண்டால் அதன் 'மாக்னடிக் ஃபீல்டி'ன் மூலஸ்தானம் North Pole (வடதுருவம்). ஆகையால் நம் தலையை வடக்குப் பக்கம் வைத்துப் படுத்துக் கொண்டால் மூளையின் சின்ன காந்த சக்தியும், த்ருவத்தின் பெரிய காந்த சக்தியும் ஒன்றுக்கொன்று 'க்ளாஷ்' ஆகி, மூளை பாதிப்புக்கு ஆளாகிவிடும்' என்று ஸயண்டிஸ்ட்கள் சொல்கிறார்கள். அதே ஸமயம் ஜபம்,

த்யானம் பண்ண வடக்குப் பார்த்து உட்காருவது நல்லதென்று சொல்லியிருக்கிறது. தூக்கத்தில் புத்தியும் மனஸும் நமக்கு வசப்படாமல், தன்னையும் மீறித் தூக்கம் நம்மை வசப்படுத்தி ஓய்ச்சலில் அடித்துப் போடுகிறது; அப்போது புத்தி களைத்துக் கிடக்கிறது; அல்லது நம் வசத்திலில்லாததால் கன்னா பின்னா என்று கனவுகளைக் கல்பித்துக் கொள்கிறது. இம்மாதிரி ஸமயத்தில் இந்தச் சின்ன மாக்னட்டை, லோகத்தின் பெரிய மாக்னட்டுக்கு நேரே பிடித்தால் தாறுமாறாய்விடும். ஆனால் ஜப, த்யான காலத்தில் நாம் மனஸை அப்படியே அடக்கி வசப்படுத்த



முடியாதவர்களாயிருந்தாலுங்கூட, அப்படிப் பண்ண வேண்டும் என்ற லக்ஷ்யமாவது நமக்கு இருக்கிறது. ஈச்வரன் விஞ்ஞானக் கருவிகளுக்கு த்ருஷ்டமாயுள்ள மின்ஸார காந்த சக்தியாய் மட்டுமல்லாமல், நம் லக்ஷ்யத்தைத் தெரிந்து கொண்டு அதற்குள் அருள் செய்கிறவனாயும் இருப்பதால் த்யானகாலத்தில் அதே காந்தசக்தி நமக்கு நல்ல 'பவரை'க் கொடுக்கும்படி பண்ணுகிறான். ஷாக் அடிக்கிற எலெக்ட்ரிஸிடியைக் கொண்டே நாம் எத்தனையோ நல்லதைப் பெறவில்லையா?

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்**

சொல்லியிருக்கிறேன். இதற்குச் சொன்ன பானை உதாரணமும் ஞாபகம் இருக்கும்.

ஒரு பானை உண்டாவதற்கு எவை எவை காரணம் என்று பார்த்தால், நிமித்த காரணம், உபாதான காரணம், சஹகாரி காரணம் என்று மூன்று காரணங்கள்! இவை மூன்றும் சேர்ந்து பானை என்கிற காரியம் வந்திருக்கிறது.

பானையாய் எது பரிணமிக்கிறதோ, பானையாய் எது மாறுகிறதோ அந்த மூலப் பொருள் இருக்கிறதே- அதுதான் உபாதான காரணம்.

இங்கே உபாதான காரணம் களிமண். ஆனால் அதுவே மாறிவிடுமா? அதை மாற்றுபவன் ஒருவன் இருக்கிறான். அவன் யார்? மண்ணானது உபாதான காரணம். மண்ணைப் பிசைந்து பானையாக்குகிறாரே அந்தக் குயவர்-அவர் பானை உண்டாவதற்கு நிமித்தமாயிருப்பதனாலே நிமித்த காரணம். மனுஷ்ய சக்தி நிமித்த காரணம்.

குயவர் இருக்கிறார், மண் இருக்கிறது. பானை வந்துவிடுமோ...?

மண்ணைப் பிசைந்து, சக்கரத்தின் மேல் வைத்து, ஒரு தண்டம் இருக்கும்- ஒரு கொம்பு- அதை சக்கரத்தின் மேல் வைத்து சுழற்றி விட வேண்டும். அந்தச் சக்கரம் சுற்றுகிறபோது அதைக் கையாலே பானையாக உருவாக்க வேண்டும்.

குயவனுக்கும் மண்ணுக்கும் இடையே இருந்து பானை உருவாவதற்கு உபகரிக்கிறதே-சஹாயம் பண்ணுகிறதே- அந்த சக்கரமும் தண்டமும் சஹகாரி காரணம்.

இப்படி, பானை என்கிற சாதனம் உண்டாவதற்குக் காரணங்கள் மூன்று. காரணம் இல்லாமல் காரியம் உண்டாகாது.

உலகம் என்பது ஒரு பானை-காரியம்- உண்டான வஸ்து- என்று எடுத்துக் கொண்டால், அதற்கு நிமித்த காரணம் யார்? பரமாத்மா! சஹகாரி காரணம் யார்? பரமாத்மா! உபாதான காரணம் யார்?... அதுவும் பரமாத்மா!

நமது சரீரமானது அநித்யம்-அழியக் கூடியது. இன்றைக்கிருக்கிற சரீரம் நாளைக்கு இராது என்பதை நாம் உணர வேண்டும். அதனால்தான் நித்யமே பரமாத்மா நமக்குப் பலவிதமான நோய்களைக் கொடுக்கிறான்; சிரமத்தைக் கொடுக்கிறான். இதையெல்லாம் பார்த்தாவது நாம் திருந்துவோமா என்று பரீக்ஷை பண்ணுகிறான்.

'நீ என்ன பண்ணினாலும் உன் திருவடியை நான் விடப் போவதில்லை' என்று எல்லாவற்றுக்கும் காரணமான பரமாத்மாவின் திருவடியைத்தான் நாம் அசஞ்சல பக்தியோடு கெட்டியாகப் பிடித்துக் கொள்ள வேண்டும்.

(தொடரும்)

# சொந்த தேசம்

**நந்தன்**

'வீ....ல்' என்ற அவன் மனைவியின் அலறல் உள் அறையிலிருந்து உரக்கக் கேட்டது. அவன் விரைவாய் ஓடிச் சென்று பார்த்தான்.

அவன் மனைவிக்கு பிரசவ வலி எடுத்தது.

உள்ளுக்கும் வெளிக்குமாய் அவன் இரண்டு முறை ஓடி ஓடித் திரும்பினான். என்ன செய்வதென்று அவனுக்குப் புரியவில்லை. பிசைந்து புத்தி தடுமாறினான். அறிமுகமற்ற இந்த அந்நிய ஊரில் எங்கு சென்று வண்டி தேடுவது...? எப்படி இவளை ஆஸ்பத்திரிக்கு அழைத்துச் செல்வது...?

அவனுக்கு ஏதும் புரியவில்லை.

மனைவியின் பிரசவ வலியை அவன் இந்த முதல் ஜாம இரவில் எதிர்பார்க்கவில்லை. இரண்டொரு நாளில் வலி வரும், அதற்குள் விவரங்கள் விசாரித்து விடலாம் என்று அசிரத்தையாய் இருந்து விட்டது பிசகாகிப் போயிற்று.

அவன் குழம்பினான்.

அந்த வேளையில் வாசலின் அழைப்பு மணி கனமாய் ஒலிக்க, அதிதப் பரபரப்பில் அவன் ஓடிச் சென்று கதவு திறந்தான். வெள்ளைச் சீருடை அணிந்த இருவர் நின்றிருந்தனர்.

"இந்த வீட்டுப் பெண்ணுக்கு பிரசவ வலி எடுத்திருக்கும். அவர்களை மருத்துவமனைக்கு அழைத்து வரச் சொல்லி எங்களுக்குக் கட்டளை. நாங்கள் வாகனத்தோடு வந்திருக்கிறோம்."

மரக்கட்டையாய் நின்றிருந்தவர்களின் கூற்று, அவனுக்கு உழக்குத் தேனை ஒரே வாயில் ஊற்றியது போல் இருந்தது.

களைத்துப் படுத்திருக்கும் மனைவியையும் அவனையும் ஏற்றிக் கொண்டு கடிதாய்ப் பறந்து கொண்டிருந்த வாகனத்தையும், அதில் அமர்ந்திருந்த வெள்ளைச் சீருடைக்காரர்களையும் பார்க்கப் பார்க்க அவனுக்கு அணை பிளந்த வெள்ளம் போன்றதான ஆச்சரியம்.

நடந்த நிகழ்வுகளின் நேர்த்தி கண்டு அவன் விக்கித்துப் போயிருந்தான்.

வேகமாய் வந்தவர்கள் மனைவியை நீள் பாயில் கிடத்தி எடுத்துக் கொள்ள, அதற்கெனவே தயாரிக்கப்பட்டிருந்த வாகனத்தில் அவளின் படுக்கை கன கச்சிதமாய்ப் பொருந்திக் கொள்ள, காற்றாய்ப் பறந்து கொண்டிருந்த வாகனத்தில் அவள் அதிர்வு குலுங்காமல் படுத்திருந்தாள். எதிரே பஞ்சு போன்ற ஆசனத்தில் அவளைப் பார்த்தபடியே அவன். முன் இரண்டு இருக்கைகளில் சீருடை சகாக்கள். தவிர, வாகனமோட்டி.

ஸ்ருதி பிசகாமல் நடைபெற்றுக் கொண்டிருந்த எல்லாமே அவனுக்கு ஆச்சரியமாயிருந்தது.

"ஐயா... என் மனைவிக்கான பிரசவ வலியையும் தெரிந்து கொண்டு அதற்கு இப்படிப்பட்ட உன்னதமான உதவியையும் செய்யும் நீங்கள் யார்? யார் உங்களை அனுப்பியது?"

"தலைவரின் தொண்டர்கள். எங்களை அனுப்பியது தலைவர்."

"எப்படி எங்கள் இக்கட்டைத் தெரிந்து கொண்டீர்கள்?"

"தலைவரின் ஆணை."

"அவருக்கு எப்படி...?"

"தெரியாது."



அவர்களின் ஒற்றை வரி பதில் அவனை எரிச்சல்படுத்தியது.

வாகனம் சீராகவும் வேகமாகவும் பறந்து கொண்டிருந்தது.

அவர்களது பதிலால் உண்டான எரிச்சலால் அவன் சில மணித் துளிகள் பேசாது பயணித்தான். ஆனால் நடந்த மற்றும் நடக்கும் நிகழ்வுகளின் ஆச்சரியம் அவனது

ஆர்வத்தை அதிகப்படுத்தின.

"எங்களை எங்கே கொண்டு செல்கிறீர்கள்?"

"மருத்துவமனைக்கு" என்ற அவர்களின் ஒற்றை வரி பதிலை அவன் விழுங்கி ஜீரணித்து தன்னைச் சாந்தப்படுத்திக் கொண்டான்.

"எந்த மருத்துவமனைக்கு?"

"இந்த ஊரிலேயே ஒரே ஒரு மருத்துவமனைதான் உள்ளது. அதற்குத்தான்."

அவன் மெலிதாய் அதிர்ந்தான். "என்ன... இந்த ஊரிலேயே ஒரே ஒரு மருத்துவமனையா? எப்படி எல்லா மக்களுக்கும் ஒன்றே ஒன்று போதுமானதாகும்...?"

"இந்த ஊரிலுள்ள அனைவரையும் ஒருசேரப் படுக்க வைத்தாலும் இரண்டு கட்டில்கள் அங்கு மீதமிருக்கும்."

யாருக்காக அந்த இரு கட்டில்கள் என்று அவன் கேட்க நினைத்தான். அவனது கேட்கப்படாத கேள்வியை அவர்கள் புரிந்து கொண்டது மாதிரி, "உங்களைப் போன்ற அந்நியர்களுக்காக அந்த மீதமிரு கட்டில்கள். இது எங்கள் தலைவரின் ஆணை" என்று அவர்கள் சொன்னார்கள்.

"யாரது உங்கள் தலைவர்?"

"அவரை எங்களுக்குத் தெரியாது. இதுவரை நாங்கள் அவரைப் பார்த்ததில்லை. அவரது ஆணைகள் மட்டுமே எங்களுக்குச் சொல்லப்படும்."

அவனுக்கு ஆச்சரியமும் சந்தேகமும் கலந்து பொங்கின.

"எதற்காக உங்கள் தலைவர் மறைந்து வாழ்கிறார்? முகத்தைக் கூடக் காட்டாமல் எதற்காக ஒரு பூடக வாழ்க்கை நடத்துகிறார்?" அவன் கேள்வியில் மெலிதாய் ஒரு வெஞ்சினம் படர்ந்து கிடந்தது.

"தலைவரின் உருவமோ குடும்பமோ யாருக்கும் தேவையில்லாத ஓர் அம்சம். அவரது கொள்கைகளும் கோட்பாடுகளும் மட்டுமே அனைவரும் புரிந்து கொள்ள வேண்டுவதும், புரிந்து அதன்படி நடந்து கொள்ள வேண்டுவதும் ஆகும். அதனை முற்றாய்ச் செயல்படுத்த இது போதுமானது."

இதைக் கேட்டவுடன் அவனுக்கு ரோமங்கள் குத்திட்டுக் கொண்டன. தான் ஓர் ஆவி தேசத்தில் பிரவேசித்து விட்டதான ஒரு பய உணர்வு அவனைக் கவ்விக் கொண்டது.

சிறிது நேரம் அவனால் ஏதும் பேச முடியவில்லை. மீண்டும் மெல்லமாக அவன் தன் பேச்சை வளர்த்தான்.

"உங்கள் தலைவரின் கூற்றை ஊர் மக்கள் எல்லோரும் ஏற்றுக் கொள்கின்றனரா... இல்லை, அவருக்கு ஏதும் எதிர்ப்புகள் இங்கு உண்டா?"

"நூறு சதவிகித ஜனமும் தலைவரின் சட்டதிட்டங்களை முழுமையாய் மதித்து நடக்கின்றன."

"அப்படியானால் உங்கள் தலைவர் ஒரு சர்வாதிகாரியா...?" அவன் கேள்வியில் கொஞ்சமாய் கார நெடி வீசிற்று.

சற்றே பின்னால் திரும்பிப் பார்த்த சீருடை ஆசாமி சொன்னான். "இல்லை, அவன் பரிபூரண ஜனநாயகவாதி."

"நீ பொய் சொல்கிறாய். இத்தனை மக்களை வைத்துக் கொண்டு எப்படி அது சாத்தியம்?"

"கொஞ்சம் பொறுங்கள். இங்கும் மாற்றுக் கருத்துக்கள் உண்டு. எதிர்ப்புகள் உருவாகும். தலைவரின் கோட்பாடுகளுக்கெதிராய் எதிர் வினைகள் வலுப்பட்டுக் கிளர்ந்தெழும்போது, அவை நிர்தாட்சண்யமாய் நிராகரிக்கப்படாது. எஃகுக் கைகள் கொண்டு அடக்கி முடக்கப்படாது. மாறாய், எதிர்ப்புகள் சமனப்படுத்தப்படும். எதிர்ப்பாளர்கள் சரியான விளக்கம் பெற்று, சமாதானமாகும் வரை அந்தக் கோட்பாடுகள் நடைமுறைக்கு வராது. ஆனால் கோட்பாடுகள் நடைமுறைப்படுத்தப்பட்ட பின், செயல்பாட்டில் அதீத உறுதி காண்பிக்கப்படும்."

அவர்களது விளக்கங்கள் அவனுக்குத் திகட்டியது. முகத்தை இடுங்க வைத்துக் கொண்டு 'உட்டோப்பியா... உட்டோப்பியா...' என்று கறுவினான். கருத்திருந்த அவன் முகம் அதற்கு மேல் ஏதும் பேச வேண்டாம் என்ற தீர்மானத்திலிருப்பதாய்க் காட்டியது.

அதற்குள் வாகனம் வளைவு திரும்பி மிகப் பெரிய அந்த மருத்துவமனை வளாகத்துக்குள் வந்து நின்றது.

அவன் ஓரமாய் நிறுத்தி வைக்கப்பட்டான். நான்கு வெள்ளை ஆடை சிப்பந்திகள் ஓடி வந்தார்கள். அவன் மனைவியின் படுக்கையை நலுங்காமல் எடுத்துக் கொண்டு உள்ளே சென்றார்கள்.

அவளின் பிரசவ வலி வீரியப்பட்டிருந்தது. அவளது படுக்கை நனைந்திருந்தது.

செயல்பாடுகள் நூலிழை பிசகாத திட்டத்தில் நடந்து கொண்டிருந்தன. அவன் மனைவி அழைத்துச் செல்லப்பட்ட

அறையின் வாசலில் இருந்த இருக்கையில் அவன் இருத்தி வைக்கப்பட்டான்.

நிமிஷங்களும் நேரங்களும் கடிதாய்ப் பறந்தன.

பிள்ளை பெற்ற பச்சை உடம்புக்காரியான அவன் மனைவி தள்ளாடித் தள்ளாடி வந்தாள்.

அவள் கையில் ஒரு சீட்டு கொடுக்கப்பட்டு அதில் ஓர் எண் இருந்தது.

"நீங்கள் இருவரும் உங்கள் இல்லம் செல்லலாம். இன்றிலிருந்து சரியாய் மூன்றாம் நாள் உங்களுக்கு ஒரு குழந்தை தரப்படும். அதை நீங்கள் வளர்த்து வரலாம்."

ஒரு சிப்பந்தியின் இந்தப் பேச்சு அவனைப் பொடித்துப் போட்டது.

"என்ன... என்ன இது? என் குழந்தை எங்கே? என் குழந்தை எனக்கு வேண்டும்."

"அதான் சொன்னேனே. மூன்றாம் நாள் ஒரு குழந்தை உங்களுக்குக் கிடைக்கும். மேலும் விவரங்கள் தேவைப்படின் அந்த அறையிலுள்ள அதிகாரியை அணுகவும்" என்று ஓர் அறையைச் சுட்டிக்காட்டினான்.

அவனது படபடத்த பேச்சு அதிகாரிக்கு எல்லாவற்றையும் புரியவைத்தது. அவர் குளிர்பானம் வரவழைத்து அவனைப் பருக வைத்தார்.

"அதற்கு வாய்ப்பில்லை நண்பரே. நீங்கள் பெற்றெடுத்த குழந்தையை மட்டுமே நீங்கள் வளர்ப்பதென்பதற்கு இந்த தேசத்தின் சட்டதிட்டம் இடம் தராது. இங்கு, ஒரு பெண்ணுக்கு, ஒரு குழந்தையை பெற்றெடுப்பதற்கு மட்டுமே உரிமை உண்டு. அதன் பிறகு அவளுக்கு இரண்டாம் குழந்தை பிறக்க வாய்ப்பில்லை. எங்கள் மருத்துவமனையே அந்தப் பணியைச் செய்து விடும். தவிர, இங்கு பிறக்கும் எல்லாக் குழந்தைகளும் இந்த தேசத்தின் குழந்தைகள். அவற்றில் ஏதாவதொன்றை வளர்ப்பதற்கு உங்களுக்கு வாய்ப்பளிக்கப்படும். இரண்டு குழந்தைகளை நீங்கள் வளர்க்க ஆசைப்பட்டால் இரண்டு வருடம் கழித்து அதற்காய் நீங்கள் விண்ணப்பிக்கலாம். மருத்துவமன்னை, முதலாவது ஆணாயிருந்தால் பெண்ணும், முதலாவது பெண்ணாயிருந்தால் ஆணும் ஆக, இரண்டாம் குழந்தையை உங்களுக்கு அளிக்கும். குழந்தைகள் அனைத்துப் பிறப்பில் சமம் என்பதால் ஏதோ ஒரு குழந்தையை வளர்ப்பதில் உங்களுக்கு என்ன அட்டி?"

அதிகாரியின் பேச்சில் அவன் துவண்டு போனான். நெற்றிப் பொட்டில் நின்றிருந்த கோபம் உச்சந்தலைக்கு எகிறியது. "எவனோ பெத்த குழந்தையை நா எப்படி வளர்ப்பது? என் குலமென்ன... கோத்திரமென்ன? என்னய்யா உங்கள் முடக்குவாத சட்டம்...?"

அதிகாரி மெலிதாய்ச் சிரித்துக் கொண்டார்.

அவரின் சிரிப்பு அவனை இன்னமும் ரௌத்ரப்படுத்தியது.

"எதற்காகச் சிரிக்கிறீர்கள்? நான் அதித துக்கத்திலிருக்கிறேன். என் குல ரத்தம் என் சந்ததியாய் வாய்க்காத வேதனையில் நான் இருக்கும்போது உமக்கு என்ன எகத்தாளச் சிரிப்பு?"

"இல்லை நண்பரே... எம் தலைவரின் தீர்க்கதரிசனத்தை நினைத்துப் பார்க்க உங்கள் பேச்சு ஒரு நிமிடம் என்னைத் தூண்டியது. அதுதான் என் இதழில் புன்முறுவலாய் ஒரு விநாடி படர்ந்தது."



"கள்ள நோட்டு வச்சிருந்ததா நம்ம சோமுவை போலீஸ் புடிச்சிட்டு போவுதே, அவனுக்கு யாரு குடுத்தது?"

"கள்ள வோட்டு போடுறதுக்கு கட்சிக்காரங்க குடுத்தாங்களாம்!"

— நெல்லையப்பபுரம் டி. செல்வன்

தலைவர் என்ற சொல் அவனுக்கு மீண்டும் கோபம் கிளறிற்று. 'முட்டாள் தலைவரின் முட்டாள் தேசம்' என்று அவன் உரக்கக் கூவினான்.

"இல்லை நண்பரே. காலம் காலமாய் ஜாதி, மதம், குலம், இனம் என்று குழுக்கட்டுமானத்தில் எங்கள் தேசம் அமிழ்ந்து கொண்டிருந்தது கண்டு எங்கள் தலைவர் மெய்யாய் வருந்தினார். இவளுக்கும் இவனுக்கும் பிறந்த குழந்தை இந்த ஜாதி, இந்த மதம், இந்த இனம் என்ற தனித்தனி முத்திரையோடு முளை விடுவதை அவர் உளமாற வெறுத்தார். இதை இப்படியே செழித்து வளர விடுவது நாம் நம் அடுத்த தலைமுறைக்குச் செய்யும் துரோகம் என்று மனம் வெதும்பினார்..."

## 'துன்பத்தால்' இன்பம்!

லண்டனில் பிறந்து இப்போது நியூயார்க்கில் வாழும் ஜும்பா லஹிரியின் பெற்றோர் இந்தியர்கள். அமெரிக்காவுக்குக் குடிபெயரும் இந்தியர்கள் அனுபவிக்கிற தனிமையையும் வேற்றுமை உணர்வையும் கலாசார குழப்பங்களையும் உணர்த்தும் பல சிறுகதைகளை எழுதியிருக்கிறார் ஜும்பா லஹிரி. Interpreter of Maladies என்ற தலைப்பில் முதல் சிறுகதைத் தொகுப்பு வெளியாகி இலக்கிய வட்டாரங்களில் பரபரப்பாகப் பேசப்பட்டு வருகிறது. ஒரு சிறுகதை 'ஓ ஹென்றி' விருது பெறத் தேர்வாகியிருக்கிறது. தற்போது நாவல் எழுதிக் கொண்டிருக்கிறார் ஜும்பா.

"எழுத்தாளர்களுக்கு மூன்று விஷயங்கள் முக்கியமாகத் தேவை– நேரம், பணம், கொஞ்சம் ஊக்கம். இந்தப் புத்தகம் எனக்கு மூன்றையும் சரியான அளவில் பெற்றுத் தந்திருக்கிறது" என்கிறார் ஜும்பா.

'Interpreter of Maladies' என்றால் என்ன அர்த்தம்...? துன்பங்களை மொழி பெயர்ப்பவர்!

– எஸ்.ஆர்.

வெகுண்டபடி நின்று பேசிக் கொண்டிருந்த அவன், அதிகாரியின் பேச்சைத் தொடர்ந்து கேட்க ஆவல் கொண்டு தன் இருக்கையில் அமர்ந்தான்.

அதிகாரி தொடர்ந்தார்.

"அது மட்டுமல்ல நண்பரே. குழந்தை இல்லாத தம்பதிகள், தங்களுக்குக் குழந்தையே பிறக்காது என்று விஞ்ஞானபூர்வமாய் உணர்ந்து கொண்ட பின்னும் அதற்காய் விசனப்படுவதும், இன்னொரு குழந்தையைத் தத்தெடுக்கத் திராணியின்றி நெக்குருகுவதும் எம் தலைவரின் மனதை வெகுவாய்ப் பிளந்து போட்டது. தன் உதிரத்துக் குழந்தை, தன் இனம் தழைக்க ஜனித்திருக்கும் தன் குழந்தை என்னும் மக்களின் மாயை வலைப் பின்னல் அவர்களை எவ்வளவு தூரம் சிறைப் படுத்தியுள்ளது என்று எண்ணி அவர் நெடுநாள் நெஞ்சம் விதிர்த்திருக்கிறார்.

"இந்தக் கசடுகளிலிருந்து எங்களை மேலே தூக்கி விட அவர் வகுத்த திட்டம்தான் இந்த 'பொதுக் குழந்தைச் சட்டம்'. எங்கள் தேசத்தில் ஜாதி கிடையாது. மதம் கிடையாது. இனப் பிரிவு கிடையாது. குழந்தையின்றிக் குமுறும் தம்பதிகள் கிடையாது. இது போகட்டும். எங்கள் தேசத்தில் அநாதை ஆஸ்ரமங்கள் கிடையாதென்பதும், மக்கள் தொகைப் பெருக்கம் வலுவான கட்டுப்பாட்டுக்குள் இருக்கிறதென்பதும் கொசுறுத் தகவல்."

அதிகாரி இன்னமும் ஏதோ பேசிக் கொண்டிருந்தார். ஆனால் அவன் மனம் சமாதானமடையவில்லை. 'விருட்'டென்று எழுந்து இருக்கையைத் தள்ளிய வேகம் அவன் கோபத்தின் மிச்சத்தைப் பறைசாற்றியது.

'வா'வென்று மனைவியை அழைத்தான். 'அம்மண ஊரில் கோவணம் கட்டியவன்...' என்று முணுமுணுத்துக் கொண்டே அந்த அறையை விட்டு வெளியேறக் கிளம்பினான்.

அந்த அறையைத் தாண்ட யத்தனித்தவன், நிலைப் படி தலையில் இடிக்க ஆ...வென்ற கூச்சலுடன் 'பொத்'தென்று நிலமதிரத் தரையில் விழுந்தான்.

'பொத்'தென்று தரையில் விழுந்தவன் ஏதோ திக்பிரமையில் ஆட்பட்டவனாய் மலங்க மலங்க விழித்தான். எட்டுக்குப் பத்தான அந்த அறை. மேலே பகாசுர வேகத்தில் மின்விசிறி. படுக்கையிலிருந்து புரண்டு விழுந்திருப்பதை உணர்ந்தான். இருந்தும் பிரமை நீங்கியபாடில்லை. சுவரை வெறித்தபடி நெடுநேரம் கிடந்தான்.

காலைச் சூரியன் தன் கிரணத்தை ஜன்னல் கண்ணாடி வழியே ஊடுருவி தன் உதயத்தைத் தெரிவித்தது. வெளியே ஏதோ கூச்சல் கேட்டது.

தங்கள் இனத்துக்கு இருபது சதவிகிதம் ஒதுக்கீடு கொடுக்கச் சொல்லிக் கூவி வந்த ஒரு ஜாதிச் சங்கத்தின் கூச்சல் காதில் விழ, தன் தேசத்தில் தனது இருப்பு ஊர்ஜிதமாக, அவன் சந்தோஷமானான்.

உள்ளே அவன் மனைவிக்கு பிரசவ வலி எடுக்க, அவன் ஆட்டோ பிடிக்க வெளியே ஓடினான். ◎



# மின்சாரக் கண்ணா

காதலித்த பெண்ணைக் கைப்பிடிப்பதற்காக என்ன மாதிரியெல்லாம் நாடகம் போடலாம்?

அவள் அக்கா வீட்டுக்கே வந்து வேலைக்காரனாகச் சேரலாம். சொந்தச் சகோதரனை அவள் வீட்டு கூர்க்காவாக் கலாம். தங்கையைச் சமையல் எடுபிடியாக்கலாம். ஈன்றபொழுதினும் பெரிதுவந்து, என்.ஆர்.ஐ. கோடீஸ்வரத் தந்தையே அந்த வீட்டின் 'கேப்டன் குக்' ஆகலாம்.

'ஜோடி' சேர்ந்து, 'பூவெல்லாம் கேட்டுப் பார்த்து' வெகு சமீபத்தில் ஒரு ரவுண்ட் ஓடி முடித்த அதே கதைக் குதிரையை ஓய்வெடுக்க விடாமல் செக்கிழுக்க வைத்திருக்கிறார் கே.எஸ். ரவிகுமார்.

குஷ்பு, ஆண்களை வெறுப்பவர் (கதைப்படி). முற்றிலும் பெண்களாலான அவரது ஏற்றுமதித் தொழிலுலக சமஸ்தானத்துக்கு, ஒவ்வொருவராக விஜய்யின் ஜெர்மன் குடும்பத்தினர் வந்து சேரும் வரை ரவிகுமார் பிராண்ட் கலகலப்பு, திரைக்கதைக்குக் கொஞ்சம் குளூகோஸ் கொடுக்கிறது.

அத்தனை பெரிய பணக்காரக் குடும்பம், விமானமேறி குஷ்பு வீட்டுக்கு வருவதும் உமக்கே நாம் ஆட்செய்வோம் என்று சேவகம் புரிவதும் தடியர்களிடம் அடிபடுவதும் – வெறுமனே ஒரு காதல் திருமணத்துக்குச் சம்மதம் வாங்கத்தான் என்று சஸ்பென்ஸ் விடுபடும்போது படு சப்! நாளைக்கு வோட்டுக்கள் எண்ணி முடித்து, மறுபடியும் யாருக்கும் மெஜாரிடி இடையாது என்று கில் அறிவித்து விட்டால் எப்படியிருக்குமோ, அப்படி.

அட, அத்தனை தூரம் ஆண்களை குஷ்பு வெறுக்க ஒரு கனமான காரணம் உண்டாவெனில், அந்த ஃபிளாஷ்பேக்கிலும் ஒரு பாப்கார்ன் பொட்டல கனம் கூட இல்லை.

சரிதான்; இத்தனை கஷ்டப்பட்டு ஏழு கடல், மலை தாண்டி விஜய் அடைய முனையும் அந்தப் புதுமுகம் மோனிகா எப்படித்தான் இருக்கிறார் (கவனிக்க : 'நடிக்கிறார்' அல்ல.) எனப் பார்க்க விரும்பினால், ஐயோ பாவம்; க்ளோசப்பில் காட்டவே காமிராக்காரர் சுத்தமாக மறுத்து விடுகிறார்.

பெரும்பாலும் லாங் ஷாட்களில் திரை முழுக்க அத்தனை பேரும் (ஒரு சட்டசபை அளவுக்குப் பாத்திரங்கள்.) இடைவிடாமல் பேசிக் கொண்டே இருக்கிறார்கள்.

ரவிகுமார், வழக்கம் போல திரைக்கதை – இயக்கத்துடன் நிறுத்திக் கொண்டிருக்கலாம். வசனமெழுத ஆரம்பித்து, வால்மீகி ராமாயணம் அளவுக்கு எழுதித் தீர்த்திருக்கிறார். ஆகவே நடிகர்கள் பேசி மாய்ந்திருக்கிறார்கள்.

மணிவண்ணன், ஆர். சுந்தர்ராஜன், அனுமோகன், ரவிகுமார் என்று இயக்குநர்கள் பலர் இதில் நகைச்சுவை பண்ணியிருக்கிறார்கள். பரிதாபகரமாக இரண்டாம் கதாநாயகி (மூன்றாம்?) ஆகியிருக்கிறார் ரம்பா. வயதான செட்–அப்பில், 'இன்று அக்கா வேடம்; நாளை அம்மா' என்று மிரட்டுகிறார் குஷ்பு.

ஒரே ஆறுதல் – நடிப்பில் அத்தனை பேரும் ஹீரோ விஜய்யைத் தூக்கிச் சாப்பிட்டு ஏப்பம் விடுகிறார்கள் என்பதுதான்.

மின்சாரத்தைத் தலைப்பில் வைத்துக் கொண்டு, விஜய், ஃப்யூஸ் போனது போலவா நடிப்பது?

தெளியாமல் முழுப் படத்துக்கும் உட்கார முடிந்தால் நீங்கள் பூமியாள்வீர்கள்!

— ஔரங்கசீப்



**மேஷ ராசிக்காரரான பிரசாந்த், பெரியவங்க சொல்கேட்டு நடந்தா, கடினமான பிரச்னைகளையும் ஊதித் தள்ளிடலாமாம்!**

# நடக்குமென்பார்



**மேஷம் :** *(அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)*

உடல் நலக் குறைவு இருக்கும். அதிக உழைப்பு, அதிக அசதி, தூக்க மின்மைன்னு கொஞ்சம் படுத்த லான வாரம்தான். ஆனாலும் உங்க காரியங்கள் எதுவும் தடை பட்டு நிற்காது. வளர்ச்சிப் பாதைல முன்னேறிட்டேதான் இருப்பீங்க. பெரியவங்க சொல் பேச்சுக் கேட்டு நடந்தா பல கடினமான பிரச்னைகளைக்கூட ஊதித் தள்ளிடலாம். சிலருக்கு புது வீடு வாங்கற / குடி போகற யோகம் நெருங்கி வருது. வீட்டு உபயோகப் பொருட்கள் பல வாங்குவீங்க. ஆபீஸ்ல பழைய பாக்கிகள் வந்து சேரும். விளை யாட்டு வீரர்களுக்கு வெற்றி வாய்ப்பு கூடி வரும்.



**ரிஷபம் :** *(கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசீரி ஷம் 2-ம் பாதம் வரை)*

மன உளைச்சலால அவதிப் படறீங்க. சந்தர்ப்பமும் சூழ்நிலை யும் உங்களுக்கு எதிரா இருக்கு. சாதிக்க நினைக்கற விஷயங்கள் தள்ளிப் போகும். ஆபீஸ்ல பிரச் னைகள் மேலோங்கி இருக்கும். அதிகாரிகள் அநியாயத்துக்குப் படுத்துவாங்க. ஆனாலும் மனசல துணிச்சலை வளர்த்துக் கங்க. சோம்பேறித்தனத்தை விட்டொழிச்சி ராப்பகலா உழைச்சி, அது மூலமா உங்களை நிலை நிறுத்திக்க வேண்டியது அவசியம். வெளியூர்ப் பயணங் களோ, கடன் வாங்கறதோ, புது இடம் மாறுவதோ இப்ப வேண்டாம். கலை – எழுத்துத் துறையினருக்கு கொஞ்சம் மோசமான கால கட்டம். எதிலும் யோசிச்சி செயல்படுங்க.



**மிதுனம் :** *(மிருகசீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர் பூசம் 3-ம் பாதம் வரை)*

கிரகங்கள் சாதகமா இருக்கு. உங்க திட்டங்கள் சுலபமா நிறைவேறும் வெற்றி வாய்ப்புகள் கூடி வரும். எதிரிகள் ஓடிப் போயிடுவாங்க. வழக்கு விவகாரங்கள் சாதகமாவே தீர்ப்பாகும். விளையாட்டுத் துறையினர், ஓவியர் களுக்கு அதிர்ஷ்ட தேவதையின் பார்வை உண்டு. பெண் களுக்குப் புதிய வேலை வாய்ப்புகள் கிடைக்கும். அரசுப் பணியாளர்களுக்கு அளவோடு லாபம்தான்! வீட்டுல விசே ஷம் ஏதோ நடக்கப் போகுது. பணம் தாராளமாக வரும்; போகும். வெளியிடங்கள்ல சாப்பிடறதை அவாய்ட் பண் ணுங்க.



**கடகம் :** *(புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)*

அரசாங்கத்தால ஏதோ ஒரு கன லாபம் வரப் போகுது! நிறைய பணப் புழக்கம் இருக்குதேன்னு தாம் தூம்னு செலவு பண்ணாதீங்க. வீட்டுல யாருக்காவது உடம்பு சரியில்லாம போகலாம். மருத்துவச் செலவு நிறைய ஆகலாம். எச்சரிக்கை. சிலருக்கு உத்யோக ரீதில வெளியூர் மாறுதல் வந்து குடும்பத்தைப் பிரிய வேண்டி வரலாம். கலைத் துறையினருக்கு புதிய வாய்ப்புகள் வரும். எதிரிகள் தொல்லை இருக்கும்னாலும் கொட் டம் அடங்கியே இருக்கும். சிலருக்கு வெளி நாட்டுத் தொடர்பால ஆதாயம் கிடைக்கலாம்.



**சிம்மம் :** *(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)*

வசீகரமான பேச்சால பல காரியங்களை சாதிச் சிப்பீங்க. நண்பர்கள் சமயத்துல உதவுவாங்க. தொழில்ல நல்ல வளர்ச்சி தெரியும். கூட்டுத் தொழில் பண்ற வங்களுக்கு அமோகமான லாபம் கிடைக்கும். வெளிநாட்டுத் தொடர்புகள் நலன் பயக்கும். சிலருக்கு திருமண யோகம் கூடி வரும். பெண்களுக்கு காதல் அனுபவங்கள் களிப்பூட்டும். வழக்குகளும் சாதகமாகும். வெற்றி வாய்ப்பும் குவியும். கடல் வாணிபம் ஆக்கம் தரும். கோவில்கள், சாதுக்கள் தரிசனம் கிடைக்கும்.



**கன்னி** : *(உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் வரை)*

உற்சாகமான வாரம்தான். வெற்றி வாய்ப்புகள் கூடி வரும். சில முக்கியமான பெரிய மனுஷங்க தொடர்பால ஏதாவது ஆதாயம் கிடைக்கலாம். தொழில்ல அபார வளர்ச்சி இருக்கும். புதிய ஒப்பந்தங்கள் குஷிப்படுத்தும். சட்டம், ராணுவம், காவல் துறையினருக்கும் புகழ் கூடும். ஆசிரியர்களுக்கும் எழுத்தாளர்களுக்கும் புகழும் பணமும் கூடும். பெண்களுக்கும் புடைவை, நகை வாங்கற யோகம் இருக்கு. சிலர் வீண் விவகாரங்கள்ல தலையிட்டு, வம்புல மாட்டிப்பாங்க. அநாவசிய பேச்சுகளை மட்டும் அறவே தவிர்த்திடுங்க.



**துலாம்** : *(சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம், 3-ம் பாதம் வரை)*

# நடக்கும்!

கிரகங்கள் சாதகமா இல்லை. எதிலும் நிதானமா நடந்துக்க வேண்டியது அவசியம். எல்லா காரியமும் தாமதமாகும். பெரியவங்க மனவருத்தம் அடையறாப்புல நடந்துக்காதீங்க. சாலை விபத்துகளுக்கு வாய்ப்பு இருக்குங்கிறதால, டூ வீலர் பயணம் வேண்டாம். சிலருக்கு விஷக்கடி வேளை இது. பூச்சி பொட்டு இருக்கற பக்கம் போகாதீங்க. நண்பர்களை முழுக்க நம்பாதீங்க. சமயத்துல கவுத்துடுவாங்க. மேலதிகாரிகளிடம் எச்சரிக்கையா நடந்துக்கங்க. ஆபீஸ்ல வீண் வம்புகள்ல தலையிடாதீங்க.



**விருச்சிகம்** : *(விசாகம் 4-ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)*

புகழும் பாராட்டும் கூடும் வாரம். உங்க திறமையை மதித்து, பல புதிய வாய்ப்புகள் வரும். அந்தஸ்து உயரும். பணவரவும் பிரமாதமா இருக்கும். எடுத்த காரியம் கண்டிப்பா வெற்றியாகும். எதிரிகள் ஓடிடுவாங்க. எழுத்தாளர்கள், கவிஞர்கள் நிலை உயரப் பெறுவார்கள். சிலருக்கு புனித யாத்திரை போக சந்தர்ப்பம் நாடி வரும். பெண்களுக்கும் புது நகை வாங்குகிற நேரம் இது. உறவினர்கள் வருகையால வீடு உல்லாசமா இருக்கும். தவிர, திடீர் அதிர்ஷ்டம் வேற ஏதோ அடிக்கப் போகுதே?



**தனுசு** : *(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் வரை)*

தொழில் ரீதில உங்க வளர்ச்சியை யாராலும் தடுக்க முடியாது. பிரமோஷன், ஊதிய உயர்வுன்னு அமர்க்களமான வாரமா இருக்கும். வெளியூர்ப் பயணங்கள் வெற்றி தரும். அரசாங்க அனுகூலம் ஏதோ இருக்கு. சிலருக்கு திருமண ஏற்பாடுகள் நடக்கும். பெண்களுக்கு உத்யோக ரீதில வளர்ச்சி உறுதி. மனசு, ஆன்மீகத்துலேயும் சமூகப் பணிகள்லேயும் நாட்டம் கொள்ளும். பணப் பிரச்னை இருக்காது. ஜாலியான அனுபவங்கள் சித்திக்கும். சிலருக்கு வெளிநாடு போற சான்ஸும் இருக்கு.



**மகரம்** : *(உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)*

புதுசா கல்யாணமானவங்க பாடு படு ஜாலியா இருக்கும். அதேசமயம் பழைய ஜோடிகளுக்குள்ள சில உட்பூசல்களும் இருக்கும். குடும்ப வாழ்க்கைல வரக் கூடிய வழக்கமான பிரச்னைகள் இப்ப கொஞ்சம் தூக்கலா இருக்கும். ஆனா, உத்யோக ரீதில வளர்ச்சி, உறுதி. பிரமோஷன், ஊதிய உயர்வுகள்னு அமர்க்களப் படுத்துவீங்க. ரிடையரானவங்களுக்கு புனித யாத்திரை போக வாய்ப்பு கூடி வரும். பெண்கள் பாடு படு உல்லாசம் தான்! கல்யாணம், விருந்து, பார்ட்டின்னு ஜாலியா இருப்பாங்க. மாணவர்கள் படிப்புல கவனமா இருக்க வேண்டியது அவசியம்.



**கும்பம்** : *(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)*

பொருளாதார நிலை உயரும். சமூக சேவைல ஆர்வம் கூடும். பெண்கள் உடல் நலத்துல கவனமா இருக்க வேண்டியது அவசியம். இடுப்பு, கை, கால்ல ஏதாவது கோளாறு வரலாம். வியாபாரம் சூடு பிடிக்கும். புதிய ஒப்பந்தங்கள் கூடி வரும். கலைத் துறையினருக்கு ஆதாயமானகால கட்டம். எழுத்தாளர்களுக்குப் புகழ் கூடும். சிலருக்கு வெளிநாடு போற சான்ஸ் வரும். இளம் பெண்களுக்குக் கல்யாண ஏற்பாடுகள் நடக்கும்.



**மீனம்** : *(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)*

சுக்கிரனும் கேதுவும் உங்களை ஸ்ட்ராங்கா சப்போர்ட் பண்றதால, உங்க பேச்சாற்றல் கூடும். அதனாலேயே பல காரியங்களை சாதிப்பீங்க. பணப் பிரச்னை இருக்காது. கடன் கேட்டு வேண்டியவங்க தொந்தரவு பண்ணுவாங்க; யாருக்குக் குடுக்கலாம்ங்கற விஷயத்துல எச்சரிக்கையா இருங்க. தொழில் வளர்ச்சி அமோகமா இருக்கும். போட்டிகளும் கூடத்தான். சிலர் வெளிநாடு போய் வருவாங்க. பெண்கள் – குறிப்பா, வேலைக்குப் போகும் பெண்கள், ரோமியோக்கள்கிட்ட எச்சரிக்கையா இருக்கணும். சிலருக்கு ஜுரம், வயிற்றுவலி வந்து நீங்கும். ●

## செப்டெம்பர் 29 முதல் அக்டோபர் 5 வரை

மாலி அலறிக்கொண்டு நெருங்கினார்.

"சார்... சார்! கவுன்ட்டவுனை நிறுத்துங்க சீக்கிரம். போச்சு போச்சு. சிஸ்டத்தில் பெயில்யூர்."

"வ்வாட்?"

"ஆமா சார்! இப்ப அவகாசமில்ல, அப்புறம் சொல்றேன். சீக்கிரம் நிறுத்துங்க. உங்க குரல் மட்டுந்தானே அதைக் கன்ட்ரோல் பண்ணும்?" - நிற்க முடியாமல் பதைபதைத்தார்.

"இரு... இரு... கத்தாதே. மெதுவாக. ரகசியம் ரகசியம். உம். இப்பச் சொல்லு."

"ஆர்.எம். அண்டு சி சிஸ்டத்தில் கோளாறு சார்!"

"என்னய்யா உளர்றே? இன்னும் இருபது நிமிஷம்தான் இருக்கு."

*1199.... 1198.... 1197.... 1196.... 1195.*

'என்ன சொல்றான் இவன்?' தாமுவுக்கு வியர்த்துக் கொட்டியது.

"சீக்கிரம் என்ன பார்த்தேன்னு சொல்லித் தொலையேன்."

"மானிட்டர் தப்புத் தப்பாய் ரீடிங் காட்டுகிறது. அப்புறம் சில வினாடிகளில் அதுவே சரியான ரீடிங்கிற்கு மாறிக்கொள்கிறது. சம்திங் சீரியஸ் இன் கைடன்ஸ் ஃபீட்பேக் கன்ட்ரோல் சிஸ்டம்."

"ஐயோ! இப்ப என்ன செய்ய முடியும்? எல்லாம் சரியாகத்தானே இருந்தது? கம் ஆன்!" - இருவரும் ஓடினார்கள். தாமு பட்டனைத் தட்டி உயிர்ப்பித்தார்.

"879147 - செக் அவுட் சிஸ்டம்?"

"எஸ்!"

"எஸ்.ஈ.யின் ஆரம்ப வேகம்."

"11.2 கி.மீ/செகண்ட்."

"ஓ.கே. எஃப்.சி. ரேட்?"

"238.102 கி.கி./செகண்ட்."

அவர் முகம் மலர்ந்தது. மாலியைப் பார்த்தார்.

"ஸ்பெஸிபிக் இம்பல்ஸஸ்?"

"1050. செகண்ட்."

"பார் மாலி, இது கூட கரெக்ட்தான். சரி சரி விடுங்க. உங்களுக்கு என்னவோ டென்ஷன். ஒரு நிமிஷம் என்னையும் குழப்பிட்டீங்க. உலகம் பூராவும் வாட்ச் பண்ணிக்கிட்டிருக்கு. எவ்வளவு ஈஸியா கவுன்ட்டவுனை நிறுத்தச் சொல்லிட்டீங்க. நேரம் நெருங்கிடுச்சு. கமான்யா."

"சார்... இல்லை... தவறான ரீடிங் வந்தது எனக்கு."

"விட்டுடு மாலி. எல்லாத்தையும் ரோபோ மேனேஜ் பண்ணிக்கும். ஓடி வா!"

மாலிக்குத் திருப்தியாகவில்லை. "சார்! ப்ளீஸ் ஒரு நிமிஷம்" - இப்போது மாலி தட்டினார்.

"இனிஷியல் ஸ்பீட் ஆஃப் எஸ்.ஈ.?"

"7.5432 கி.மீ/செகண்ட்."

"தப்பு பாருங்க."

தாமு அதிர்ச்சியுடன் நின்றார். இப்ப என்ன பண்றது? சளசளவென்று வியர்வை

# உயிர்தனைத் தேடித் தேடி

ஊற்றியது. இப்போது ஸ்கிரீனில் ரீடிங் மாறி 11.2 கி.மீ/செகண்ட் என்றது. தாமுவுக்கு மூச்சு அடைத்தது. எல்லா நாட்டு விஞ்ஞானிகளும் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். இப்போது கோளாறு என்று நிறுத்தினால் உலக அரங்கில் கேவலமாகிவிடும். சிஸ்டத்தில் இத்தனை குளறுபடிகள் இருக்க, எப்படி ராக்கெட்டை விடுவிப்பது? ரஷ்ஷுவின் உயிர். கண்ணா! இல்லை வேண்டாம், அவசரம் வேண்டாம். இவ்வளவு பதற்றம் கூடாது. சின்ன தவறு சீக்கிரத்தில் சரிசெய்து விடலாம். பார்ப்போம் கொஞ்சம் டைம் இருக்கிறது.

*976.... 975... 974.... 973....*

**செய்யாறு தி. தா. நாராயணன்**

கடைசி முயற்சி - அவசரமாகத் தட்டினார்.

"780வது கிலோ மீட்டரில் இரண்டாவது கட்ட ராக்கெட்டின் வேகம்?"

"6.00008 கி.மீ./செகண்ட்."

"போச்சு மாலி! எல்லாமே தப்பு. ரஷ்ஷ்ஷ்!" - அவருக்கு கண்களை மூட்டிக் கொண்டு அழுகை வந்தது.

"நிறுத்துங்க சார்!"

"இரு... இரு... எவ்வளவு லாஸ் வரும் தெரியுமா? தலைவரைப் பற்றி தெரியுமில்லே! நமக்கு மரணம்தான் கிடைக்கும்."

"வேகமாய் ஓடி வயர் லெஸ்ஸில் ரோபோவைப் பிடித்தார்.

"எஸ்! மிஸ்டர் தாமு!"

"ஈஸ் எவ்ரிதிங் ஓ.கே?"

"எஸ்! எப்படியிருந்தாலும் நான் பார்த்துக் கொள்கிறேன்."

"இல்லை மானிட்டர் தவறான தகவல்களைத் தருகிறது."

(மௌனம்)

"கோபக்ஸ்?"

"நான் பார்த்துக் கொள்கிறேன் மிஸ்டர் தாமு!"

"சார்! சார்! ரிஸ்க் எடுக்கறீங்க. இனிமேல் எதுவும் முடியாது. நிறுத்துங்க" - சற்றேறக் குறைய அவர் கையைப் பிடித்து பலமாய் இழுத்தார் மாலி.

தாமுவுக்கு நாக்கு வறண்டு விட்டது. யாரிடமும் ஆலோசனை கேட்க நேரமில்லை. சரியான முடிவு எடுத்தாக வேண்டும்.

"லாஸ்ட் எஃபெர்ட்ஸ் மாலி!"

"ஓ.கே. கோபக்ஸ்! எஃப்.சி. ரேட் சொல்லு."

238.102 கி.கி./செகண்ட்.

"குட்" - அவர் முகம் பிரகாசமடைந்தது.

"ஓ.கே! செவ்வாயில் இறங்க வேண்டிய இடம்?"

தென் துருவத்திலிருந்து 2400 கி.மீ. வடக்கே அரெஸ் பள்ளத்தாக்கு."

"வெரிகுட்! எல்லாவற்றையும் சமாளிப்பாயா?"

"ஷ்யூர்."

"கடைசியாக ஒரு கேள்வி. COX4572 ஐ

4

ரெஃப்பர் பண்ணிச் சொல்லு. சி. சேம்பரில் மெயின்டெய்ன் பண்ண வேண்டிய டெம்ப்ரேச்சர்?"

"2000°C."

"பிரஷர்?"

"220.Kg/SQ. cm."

"போச்சு. போச்சு. மாலி, உடனே நிறுத்தியாகணும். ஓடு... ஓடு" – அவர் தலைதெறிக்க ஓட ஆரம்பித்தார்.

*16..... 15.... 14.... 13...*

இருவரும் தங்கள் முழு பலத்தையும் திரட்டி ஓட்டமாய் ஓட, எல்லோரும் நடக்கவிருக்கும் அபாயம் தெரியாமல் நிசப்தமாய், ராக்கெட் கிளம்பும் கடைசி நொடியை எதிர்பார்த்து காத்துக் கொண்டிருந்தார்கள்.

தாமு ஓடி... ஓடி....

*5.... 4.... 3....*

தாமு கன்ட்ரோல் அறைக்குள் ஓடி சூப்பர் கம்ப்யூட்டரின் வாய்ஸ் ரெகக்னைஸரின் முன்பு காட்டுக் கத்தலாய்க் கத்தினார்.

"எஸ்.எ... ஸ்டாப் கவுன்ட் டவுன்!"

அவர் குரலின் அதிர்வுகள் மைக்கினுள் புகுந்து ரெகக்னைஸரின் சென்ஸார்களால் அடையாளம் காணப்பட்டு, கவுன்ட் டவுனை நிறுத்த உத்தரவிட்ட அந்த கடைசி நேனோ செகன்டில் கவுன்ட் டவுன் ஒன்றைத் தாண்டி ஜீரோவைத் தொட்டுவிட,

ட்... ட்... ட்... டும்.. ம்... ம்... ம்.. ம்.. – பயங்கரமான வெடியோசை. போச்! இக்னைட் ஆகிவிட்டது.

"ரஷ்ஷு...ஷு...!" – தாமு நெஞ்சு வெடிக்கக் கத்தி விட்டுக் கீழே சாய்ந்தார்.

**ரா**க்கெட்டின் வெடியோசையில் ஐந்து கிலோ மீட்டர் சுற்று வட்டாரம் கிடு கிடுத்தது. அது நெருப்புக் கோளமல்ல – கடல்! இரண்டாயிரத்து ஐந்நூறு மீட்டர் சுற்றுக்குக் கண்கள் கூசின, வெப்பம் தகித்தது. செவிப் பறை கிழிந்துவிடும் நூற்று எழுபது டெஸிபல் சப்தம்! லாஞ்ச் பேட் சரியான நொடியில் தன் பிடியைத் தளர்த்திக் கொண்டு ஒதுங்கிக் கொள்ள, லாக் ரிலீஸாகி, எல்லோரும் மெய்மறந்து பார்த்துக் கொண்டிருக்க, நெருப்பு ஜ்வாலையை ஆக்ரோஷமாய்க் கக்கிக் கொண்டு ஸ்பேஸ் ஈகிள் செங்குத்தாய்க் கிளம்பியது. கிளம்பிய எட்டாவது நொடியில் எண்பத்தி ஒன்பது புள்ளி ஆறு கிலோ மீட்டரில், ஸ்ட்ரேட்டோஸ்பியரில், இருபத்தியிரண்டு டிகிரி சாய்ந்து தன் நெடும் பயணத்தைத் தொடங்கியது.

தாமு சுதாரித்து எழுந்து கொண்டிருந்தார். விஞ்ஞானிகளின் கும்பலில் ஒரே உற்சாகக் கூச்சல், ஒரே கரகோஷம். தாமு தன் உள்ளே ரஷ்ஷுவின் கவலை அரித்துக் கொண்டிருக்க, அதை மறைத்துக்கொண்டு புன்னகையுடன், வருபவர்களின் வாழ்த்துக்களை ஏற்றுக் கொண்டிருந்தார். பத்திரிகை ரிப்போர்ட்டர்களின் குழு ஒன்று வந்து அவரை மொலுமொலுவென்று மொய்த்துக் கொள்ள, அடுத்த அரைமணி நேரம் அவர் எதைப் பற்றியும் சிந்திக்க நேரமின்றி பேட்டிகள்.

விட்டால் அவருக்கே கிளாஸ் எடுத்து விடுவார்கள் பத்திரிகைக்காரர்கள்! மக்களிடம் எந்த அளவு டெக்னாலஜி சிந்தனை வளர்ந்திருக்கிறது! ரஷ்ஷுவின் நினைவு வர அங்கிருந்து பிய்த்துக் கொண்டு ஓடினார்.

ஒவ்வொரு போர்டிலிருந்தும் ரஷ்ஷுவிடம் இடைவிடாது பேசிக் கொண்டிருந்தார்கள் விஞ்ஞானிகள்.

"ரஷ்ஷு! ஆர் யூ லிஸனிங்?"

"எஸ் சார்!"

"பையா! அங்கே அழகான பொண்ணுங்க கிடைத்தால் எனக்கொன்று கொண்டு வருவியா?"

"ஷ்யூர்... ஷ்யூர் சார்! ஆனால் இந்த வயசில் அழகு பார்க்கவா? அதற்கு ஒரு காலண்டர் பட பெண் மட்டும் போதுமே" – அவன் சிரித்தான்.

"என் அப்பா அங்கே இல்லையா? அவருக்கு என் நலத்தைச் சொல்லுங்கள்."

"எஸ்... எஸ்! ஐயாம் தாமு. ஐயம் லிஸனிங் ரஷ்ஷு! ஆர் யூ ஆல்ரைட்?"

"எஸ் டாட்! இந்த வினாடி எக்ஸோஸ்



"நேத்திக்குப் பேச்சை ஆரம்பிக்கும் போதே தலைவர் சொதப்பிட்டாராமே!"

"ஆமாம்; 'இங்கு பெருவாரியாகக் கூட்டப்பட்டிருக்கும் மக்களே'ன்னு பேச்சை ஆரம்பிச்சார்!"

— யமுனா ரெங்கநாதன்

பியரில் 43680வது கிலோ மீட்டரில் சென்று கொண்டிருக்கின்றேன்."

"இளாட்! இப்போது டெலஸ்கோப்பையும் ஸ்கிரீனையும் செவ்வாய்க்குத் திருப்பி விடு. பூமியின் பாதைக்கு இரண்டு டிகிரி ஹரிஸான்டல் பாரலாக்ஸ்."

"எஸ் டன். மார்ஸ் இமேஜ் ஈஸ் கிளியர் நௌ."

"ரஷ்ஷு! எப்போதும் இந்த இரண்டரை வருஷமும் அலர்ட்டாயிரு. உன்னைப் பற்றிக் கவலைப்படுகிறேன். அங்கே எதிர்கொள்ளவிருக்கும் ஆபத்துக்களைப் பற்றி நினைவு வைத்திரு. ஜாக்கிரதை. உயிர். ஒவ்வொரு ஸ்டெப்பையும் பத்து முறை யோசித்து வை."

"இத்துடன் நூறு முறை சொல்லியிருப்பீர்கள். டோன்ட் ஒர்ரி! நான் ஜெயிப்பேன் டாட்! எங்கே... சூர்யா இல்லே?"

"காலையிலிருந்தே பார்க்கவில்லை. எங்கே போனானோ? எங்கியாவது ஒரு கம்ப்யூட்டரை நோண்டிக்கிட்டிருப்பான். ஓ:கே. ரஷ்ஷு!" - நகர்ந்தார்.

மற்ற விஞ்ஞானிகள் அவனுடன் பேச்சைத் தொடர்ந்தனர். தாமு நேராய் மாலியிடம் போய் தனியே இழுத்துச் சென்றார்.

"மிஸ்டர் மாலி! எஸ்.ஈ.யில் நாம் கண்டுபிடித்த கோளாறைப் பற்றி வெளியே மூச்சு காட்டாதீங்க. எல்லாம் சரியாப் போய்க்கிட்டிருக்கு. அனாவசிய குழப்பம் வேண்டாம்."

அதற்குள் தலைவர் தாமுவின் அறைக்கே தேடிக் கொண்டு வந்து விட்டார்.

"வாழ்த்துக்கள் தாமு! தேங்க்யூ வெரி மச்" - மலர்ச்சியாய் சிரித்தார். இருவரும் அணைத்துக்கொண்டனர்.

"என் மேல் கோபமில்லையே?" தலைவர் ரொம்ப சந்தோஷ மூடில் தெரிந்தார்.

"தாமு! எப்பவாவது நீங்கள் நம் கல்லூரி நாட்களை எண்ணிப் பார்ப்பதுண்டா?"

"எப்பவாவது நினைப்பேன்."

"அந்த இளமையான நாட்களை நான் இப்பவும் தனிமையில் அசைபோடுவேன். நாம் இருவரும் ஒரே நாளில் இங்கு வேலையில் சேர்ந்தோமே. அது கூட எத்தனை சுவாரஸ்யமானது? ஒருமுறை நீங்கள் ஆஸ்ட்ராய்ட் ஒன்றைப் பார்த்து விட்டுப் புதிய கோளை கண்டுபிடித்து விட்டேன் என்று காம்பஸ் முழுக்க டமாரமடித்து விட்டு பின்பு அசடுவழிந்து நின்றீர்களே. அதற்கு நம்ம பாஸ் 'யாரும் நம்ம தாமுவின் எதிரில் ஒரு பந்தைக் கூட உயர அடிக்காதீர்கள். புதிய X கோள் என்று பெயர் வைத்து விடுவான்' என்றாரே..."



"படத்துல ரொம்ப வசனமாமே?"

"அதை ஏன் கேட்கறீங்க. படம் முடிஞ்சு பத்து நிமிஷம் வெறும் வசனம் மட்டுமே திரைல வருதுன்னா பாருங்க!"

– அம்பை தேவா

இருவரும் அதை நினைத்துக் கண்ணீர் ததும்பச் சிறிது நேரம் சிரித்தார்கள்.

"அவை என் ஆரம்ப நாட்களல்லவா?"

மென்மையாய் கதவைத் தட்டிவிட்டு விஞ்ஞானிகள் கூட்டம் வந்து அவர்களைச் சூழ்ந்து கொள்ளவே அவர்கள் பேச்சு அத்துடன் நின்றது. தலைவர் எழுந்து ஒவ்வொருத்தரிடமும் வாழ்த்துக்களைச் சொல்லிக் கொண்டிருக்கும்போது வெளியே,

"தலைவர் வாழ்க! தலைவர் வாழ்க!" - கோஷங்கள் உச்சஸ்தாயியில் கேட்டது. அவருக்கு முகம் சுருங்கியது. செக்யூரிட்டியை பார்வையால் சுட்டார்.

"இப்படி கோஷம் போட்ற சோம்பேறிகளை யார் இங்கே அனுமதிச்சது? அடிச்சி விரட்டுங்க."

தாமுவின் பக்கம் திரும்பினார்.

"என்டையர் கிரெடிட் கோஸ் டு யூ பீப்பிள்..."

அப்போது மிஸ்டர் யாக்ஷன் குரல் இடைமறித்தது. "மிஸ்டர் தாமு சார்! உங்கள் கவனம் எய்ட்த் போர்ட்டுக்குத் தேவைப்படுகிறது. வரவும்."

தலைவரை வழியனுப்பி விட்டு விரைந்தார். நெஞ்சில் பயம் வந்தது. என்ன விஷயமோ? மயன் அங்கே கவலையாய் உட்கார்ந்திருக்க, மற்றவர்கள் பதற்றத்துடன் திரையைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

"சார்! ரஷ்ஷுவின் பின்புறம் என்னவோ கருப்பாய் அசையுது. என்னன்னு தெரியலை."

அப்போதுதான் தாமுவும் கவனித்தார். ஸ்கிரீனில் ரஷ்ஷுவின் பின்பக்கம் சடக்கென்று சின்னதாய் ஒரு சலனம் தோன்றி நின்றது. என்னது அது?

(தொடரும்)

எதுக்கு கிழிக்கறே...
ராக்கெட் செய்யறதுக்கு...
புது பேப்பர்! கிழிக்காதே!

பழைய நியூஸ்பேப்பர் எல்லாம் போட்டுட்டே... இதை எடுத்துக்கறேனே... பழசுதானே!
போன மாசத்துப் பால் கணக்கு இருக்கு. தொடாதே!

டுப்பி! அதெல்லாம் நான் எழுதின கவிதை!
என்னது?
குப்பைக் கூடையில இருந்தா யாரும் எடுக்கமாட் டாங்கன்னு...




Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 250/-; Overseas : Rs. 1900/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 125/-; Overseas : Rs. 950/- (Air Mail)



# தீபத் திருநகர் திருவண்ணாமலையில் மாதாமாதம் பௌர்ணமி கிரிவலத்தில் அன்னதானம் செய்வோம் வாருங்கள்...



ஸ்ரீ அருணாசலேஸ்வரர்

ஸ்ரீ உண்ணாமுலையம்மை

- ௐ அடிமுடி காண முடியாத ஜோதி மலையான திருவண்ணாமலையில் மாதாமாதம் பௌர்ணமியன்று லட்சோப லட்ச மக்கள் கூடி கிரிவலம் வருவது நாம் அறிந்ததே.
- ௐ ஆன்மீகத்தில் நாட்டங்கொண்ட பலர் தான மனமிருந்தும் பணம் இல்லாத காரணத்தால், புண்ணியம் தரும் தேவரகசியமான அன்னதான பெருமையை தெரிந்திருந்தும், செய்ய வழியறியாத இல்லறவாசிகளுக்கு ஓர் அரிய வாய்ப்பு ஏற்படுத்தியுள்ளோம்.
- ௐ இலட்சியங்களை நிறைவேற்ற லட்சங்கள் தேவையில்லை அன்னதானமே அஷ்ட தரித்திரத்தைப் போக்கி அஷ்ட ஐஸ்வர்யங்களைத் தரவல்லது!

**மாதாமாதம் பௌர்ணமி அன்று அன்னதானம் செய்ய "ஆன்மீக அன்னதான அறக்கட்டளை"யில் நீங்களும் பங்கு கொள்ளுங்கள்.**

- ௐ ஆன்மீக அன்னதான திருப்பணியில் தாங்களும் பங்கேற்று ஸ்ரீ அருணாசலேஸ்வரர், ஸ்ரீ உண்ணாமுலையம்மை அருளை பெறுமாறு அன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.
- ௐ ஆன்மீக அன்னதான அறக்கட்டளை மூலம் உடல் ஊனமுற்றோர்கள், கண்பார்வையற்றோர்கள், ஆதரவற்ற முதியோர்கள் - விதவைகள் - ஏழைகள் என அனைவருக்கும் அன்னதானம் செய்ய, தாங்கள் இப்புனித பணிக்கு தங்களால் இயன்ற நன்கொடை செய்ய அன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.
- ௐ அன்னதானத்திற்கு என்ன சிறப்பு என்றால் இதில்தான் ஒருவரை முழுமையாக திருப்திப்படுத்த முடியும். தானம் செய்யும்போது ஆர்வத்தோடு மனமுவந்து முக மலர்ச்சியுடன் சர்வ சந்தோஷமாக செய்யும் தானத்தில்தான் முழுமையான பலன் கிடைக்கிறது.

தாங்கள் கீழ்க்கண்ட எதை நினைத்து அன்னதானம் செய்ய விரும்புகின்றீர்கள் என்பதை எங்களுக்கு தெரிவித்தால் அதன்படி நாங்கள் அன்னதானம் செய்து பிரசாதத்துடன் ஸ்ரீ அருணாசலேஸ்வரர், ஸ்ரீ உண்ணாமுலையம்மை படத்தை தங்களுக்கு அனுப்பி வைக்கின்றோம்.

❖பிறந்தநாள் ❖திருமணநாள் ❖முன்னோர்கள் திதி நாள் ❖வாழ்க்கையில் வளம்பெற ❖தொழிலில் முன்னேற்றம் பெற ❖நிரந்தர வேலை பெற ❖புதிதாக தொழில் தொடங்க ❖புதிதாக வீடு/மனை பெற ❖கணவன்-மனைவி வாழ்வில் சுகம் பெற ❖ பிள்ளைகள் படிப்பில் நன்கு கவனம் செலுத்தி முன்னேற ❖பிள்ளை பாக்கியம் பெற ❖கல்யாண பாக்கியம் பெற ❖நோயிலிருந்து சுகம் பெற ❖மன அமைதி பெற

- நன்கொடைகள் அவரவர் சக்திக்கு ஏற்ப கொடுக்கலாம். நன்கொடைகள் பணமாகவோ, அல்லது பொருளாகவோ, அதாவது அரிசி, நெய், பருப்பு வகைகள், எண்ணெய், எள், புளி, என்று எந்த பொருளாகவும் கொடுக்கலாம்.
- பணம் அனுப்புபவர்கள் "ஆன்மீக அன்னதான அறக்கட்டளை" *(Aanmeeka Annadhana Charitable Trust Chennai-4)* என்ற பெயரில் Cheque / D.D / M.O. மூலம் அனுப்பி வைக்கலாம். உடனடியாக தங்களுக்கு Receipt அனுப்பி வைக்கப்படும்.
- பொருள்கள் அனுப்புவோர் TVS / ABT மூலமாக மயிலாப்பூர், சென்னை-4க்கு அனுப்பி வைத்து எங்களுக்கு தெரிவித்தால் நாங்கள் உடனே Delivery எடுத்துக் கொள்கிறோம்.

- தாங்கள் அளிக்கும் நன்கொடை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக் கொள்ளப்படும்.
- ரூ.500/- அனுப்புபவர்களுக்கு ஆன்மீகம் மாத இதழ் ஒரு ஆண்டிற்கு அனுப்பப்படும்.
- ரூ.1000/- அனுப்புபவர்களுக்கு ஆன்மீகம் மாத இதழ் இரண்டு ஆண்டுகளுக்கு இலவசமாக அனுப்பப்படும்.
- ரூ.2000/- அனுப்புபவர்களுக்கு ஆன்மீகம் மாத இதழ் நான்கு ஆண்டு இலவசமாக அனுப்பப்படும்.

ௐ ஆன்மீக அன்பர்கள் ஒரேமுறை (One Time) நன்கொடையாக ரூ. 5,000 செலுத்தினால், இந்தத் தொகையை "ஆன்மீக அன்னதான அறக்கட்டளை" என்ற பெயரில் வங்கியில் (Fixed Deposit) நிரந்தர வைப்பு செய்து அதில் வரும் வட்டித் தொகையில், மாதாமாதம் பௌர்ணமி அன்று தங்கள் சார்பாக அன்னதானம் செய்து அருணாசலேஸ்வரரின் திருவருளைப் பெற வேண்டுகிறோம். (Life Time) ஆயுட்காலம் முழுவதும் 'ஆன்மீகம்' மாத இதழும், பிரசாதமும் தங்களுக்கு அனுப்பி வைக்கிறோம். தாங்கள் விரும்பும்போது வாரிசு பரம்பரையாகவும் முகவரி மாற்றம் செய்து பிரசாதமும் 'ஆன்மீகம்' மாத இதழும் தொடர்ந்து அனுப்பி வைக்கிறோம்.

**நன்கொடைகளுக்கு 80G பிரிவின்படி வருமான வரிவிலக்கு உண்டு.**

*Cheque / D.D / M.O* அனுப்ப வேண்டிய முகவரி :



# ஆன்மீக அன்னதான அறக்கட்டளை

## AANMEEGA ANNADHANA CHARITABLE TRUST (Regd.)

31/1, Nadu Street, ( Opp. Kapaleeshwarar Koil ) Mylapore, Chennai - 600 004. Ph : 4958086

